# பொருளடக்கம்


விஜய மலர் 12 | வைகாசி இதழ் 10


அட்டைப்படம்:

மிஸஸ் விஜயலக்ஷ்மி பண்டிட்



**குறிப்பு:**

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# காவேரி

விஜய ஹூ
மலர் 12

"சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"—பாரதியார்

வைகாசி
இதழ் 10

# டில்லித் தபால்

**கே. ஸ்ரீநிவாஸன்**

"இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு சர்க்கார் அதிகாரியும்தான் ஒரு குட்டி தேவதை என்ற தோரணையில் நடந்து கொண்டிருக்கிறரே தவிர, தங்களுக்குள்ளோ அல்லது டிபார்ட்மெண்ட் காரியதரிசியையோ கலந்து ஆலோசிக்கவில்லை, இந்த வியவகாரத்தில் டிபார்ட்மெண்ட் சம்பந்தப்பட்ட மந்திரிக்கு ஒன்றுமே தெரியாது. ஆகையால் மத்திய மந்திரி சபையைப்பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை."

இது மாதிரி நானே அல்லது ஏதாவது பார்லிமெண்ட் அங்கத்தினரோ சொல்லவில்லை. ஜப்பானிலிருந்து இந்தியாவுக்குத் துணி இறக்குமதி சம்பந்தப்பட்ட குழப்பத்தைப்பற்றி விசாரித்த பார்லிமெண்டின் பொதுக் கணக்கு வழக்குக் கமிட்டி தான் அறிக்கையில் கூறுகிறது.

மாகாண சர்க்கார்களிலேயே ஒவ்வொரு அதிகாரியும் தான் தேவர்களில் ஒருவர் என்று எண்ணுவதை அறிவோம். மத்திய சர்க்காரில் ஸூபரிண்டெண்டெண்டுக்குமேல் போய்விட்டால் அந்த அதிகாரி கடவுள் தன்னைக் கூப்பிட்டு, "சிஷ்யா, இந்தியாவை நிர்வாகம் செய்யும் பொறுப்பை உன்னிடம் ஒப்படைத்திருக்கிறேன். யார் என்ன சொன்னுலும் அது தப்பு, நீ நினைப்பதும் செய்வதுமே சரி, அதன் பிரகாரமே நடத்து" என்று சொல்லிவிட்டதாக நினைப்பது வழக்கம். உள்ளதைச் சொன்னுல் உடம்பு எரியும் என்று சொன்னவர் மிகவும் அனுபவசாலி தான். அதுவும் உள்ளதை உள்ளபடி வெளிப்படுத்தினுல் மத்திய சர்க்கார் அதிகாரிகள் சம்பந்தப்பட்ட நபரைச் சந்தியில் இழுத்து நிறுத்தி, பழைய பண்ணைகளில் கட்டி வைத்து அடிப்பது, என்பார்களே அதைச் செய்யாத குறைதான்.

ஜப்பான் துணி இறக்குமதியைப் பற்றிய பூரா தகவல்கள் ஒரு ருசிகரமான நாவலைப் போல் இருப்பதுடன் எப்படி நம் தேசம் தெய்வபலத்தினுல்தான் கலகலத்துப் பிய்ந்து ஓடாமல் இருக்கிறது என்பதைக்காட்டுகிறது. தவிர, 'பெரிய இடத்து விஷயம்' என்பார்களே அது மாதிரி நேருவுக்கு வேண்டியவர்களுக்கு ஒரு கெடுதலும் நேராது என்பதையும் காட்டுகிறது. பார்லிமெண்டின் கமிட்டியின் அறிக்கையில் உள்ள தாக்குதல்களுக்கு உள்ளானவர்கள் தென்னிந்தியர்களாக இருந்திருந்தால் அது பற்றிய விசாரணை சர்க்காரால் நிச்சயம் ஏற்பட்டிருக்கும். ஸ்ரீ. எஸ். ஏ. வெங்கடராமன் மேல் டிபார்மெண்டு விசாரணை நடத்தவில்லையா? ஆனுல் ஜப்பான் துணிக் கேலிக் கூத்தின் கதா நாயகர் ஸ்ரீ தரம் வீரா (ஐ. ஸி. எஸ்) துணிமணிக் கமிஷனரிலிருந்து படிப்படியாகப் பிரமோஷன் ஆகி, ஜூலையில் டில்லிமாகாணத்துக்கு, சீப் கமிஷனர் (**Chief Commissioner**) ஆகப் போகிருர்!

ஜப்பான் துணி இறக்குமதி நாடகத்தால் மத்திய சர்க்காருக்கு ஏற்பட்ட நிகர நஷ்டம் 55 லக்ஷம் ரூபாய். 1947-ஆம் வருஷம் துணிமணிகளுக்குக் கொஞ்சம் பற்றுக்குறை ஏற்பட்டது. ஆகவே 'அரை குறையாகத் துணி உடுத்தும் கிராமாந்தரவாசிகளுக்குப் பூராவும் உடை உடுக்க வசதி செய்ய (வாசகம் சர்க்கார் டிபார்ட் மெண்டு உடையது) 'முயற்சி' செய்தார்கள். வாஷிங்டனில் உள்ள இந்திய ஸ்தானிகர் ஜப்பானில் ஏராளமான துணியும் நூலும்

கிடைப்பதாயும் அவைகளை வாங்க அமெரிக்க டாலர்கள் தேவை என்றும் அவைகளை வாங்கச் சம்மதமானால் எவ்வளவு சரக்கு வேண்டும் என்றும் கேட்டார்கள். மத்திய சர்க்காரின் வர்த்தக இலாகா தங்களுக்கு ஐந்துகோடி பவுண்டு நூலும் 12 கோடி கஜங்கள் துணியும் வேண்டும் என்று வாஷிங்டனுக்குத் தெரிவித்துவிட்டு அப்பொழுது துணிமணிக்சமிஷனரான ஸ்ரீதரம் வீராவைப் பிப்ரவரி 28, 1947-இல் வாஷிங்டனிலிருந்து எவ்வளவு சரக்குத் தேவை, என்ன என்ன ரகம் தேவை என்று கேட்டதுடன் விலை விகிதம் முதலிய விவரங்களைக் கொடுத்து அவை சரியா என்றும் கேட்டார்கள். இதற்கு முந்தியே பிப்ரவரி ஏழாம் தேதி இந்திய சர்க்கார் சரக்குக்கு ஆர்டர் இந்திய ஸ்தானிகத்துக்கு அனுப்பினார்கள். அதில் **விலை விகிதம் நியாயமாக இருக்கும் பக்ஷத்தில்** ஆர்டர் நிறைவேற்றலாம் என்றார்கள். மார்ச்சு மாதம் ஐந்தாம் தேதி ஜவுளி கமிஷனர் தம் தேவையைத் தெரிவித்தாரே தவிர, விலைவாசி விஷயமாக எதுவும் சொல்லவில்லை.

ஜவுளி வியாபாரிகள் தாங்கள் சொந்தத்தில் இறக்குமதி செய்ய அனுப்பிய மனுக்களை நிராகரித்த ஸ்ரீ தரம் வீரா சாமர்த்தியமாக ஜப்பான் ஜவுளி இறக்குமதி சர்க்கார் பாவத்திலா அல்லது தனிப்பட்ட வியாபாரிகள் பாவத்திலா என்று தம்மைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு புதிர் போன்ற கேள்வியை எழுப்பி வைத்தார். விலையைப் பற்றி ஸ்ரீ தரம் வீரா எதுவும் சொல்லாததால் இறக்குமதி காண்டிராக்டர் சொன்ன விலைக்கு முடிவு செய்யப்பட்டது.

விலை விஷயமாக முதலில் மௌனமாக இருந்த ஸ்ரீதரம் வீரா காண்டராக்ட் முடிவான பிறகு ஏப்ரல் 27-ஆம் தேதி சர்க்காருக்குத் தம் தீர்க்கமான ஆலோசனையைக் கூறினர். அதாவது: ஜப்பான் விலைகள் இந்தியத் துணிகளின் விலைகளை விட 50முதல் 85சதம் கூடுதலாக இருப்பதால் இறக்குமதியைத் தனிப்பட்ட வர்த்தர்களிடம் ஒப்படைப்பது சிலாக்கியம்!

எவ்வளவு நயவஞ்சகர் ஸ்ரீதரம் வீரா என்பதை விசாரணைக்கமிட்டியார் தெளிவாகக் காட்டியுள்ளார்கள். வர்த்தக இலாகாவிடமிருந்து தகவல் கிடைத்ததும் அவர் ஜவுளி கண்ட்ரோல் போர்டின் தலைவரான ஸ்ரீ கிருஷ்ணராஜ் தாக்கர்ஸேயைக் கலந்தாலோசித்ததில் ஸ்ரீ தாக்கர்ஸே ஐடம் ஐடமாக எடுத்துக் கப்பல், ரயில், இன்ஷூரன்ஸ். இறக்குமதி வரியுள்படச் சேர்ந்து ஜப்பான் துணியின் விலை இந்திய ஆலைத் துணிகளைவிட 200லிருந்து 300 சதம் ஜாஸ்தி என்று தெரிவித்திருந்தார்.

இந்த விவரம்—மிகவும் ஜீவாதாரமான விபரம்—ஸ்ரீ தரம் வீராவுக்குக் கிடைத்தும், இதிலிருந்து அவருக்குச் சர்க்கார் தங்கள் பொறுப்பில் இறக்குமதி செய்தால் அதற்கு நஷ்டம் உண்டாகும் என்று தெரிந்தும், அவர் இந்தத்தகவலை வர்த்தக இலாகாவுக்குத் தெரிவிக்கவில்லை. தம் வண்டவாளம் வெளி வராமல் இருக்க அவர் வரி கொடுப்போரின் தலையில் கையை வைத்தார்.

சர்க்கார் இலாகாக்களில் எவ்வளவு உபரி ஆள் மாகாணம் இருக்கிறது என்பது யாரும் அறிந்தது. ஒவ்வொரு இலாகாவுக்கும் ஒரு நிதி ஆலோசகர் உண்டு. இது மாதிரி ஆலோசகர் ஜவுளி கமிஷனருக்கு இருந்தும் அவருக்குக் கடைசிவரை விஷயம் தெரியாது.

சுவாசம் தொண்டைக்கு வந்ததும் ஸ்ரீதரம் வீரா கொள்ளை விலை காரணமாக ஜப்பான் ஜவுளிகளை இந்தியாவில் விற்க முடியாதென்றும் அவைகளை மற்ற உணவு உபரி நாடுகளான தாய்லந்து, இந்தோனேஷியா முதலியவற்றுடன் பண்டமாற்று முறையில் புனர்– ஏற்றுமதி செய்யவேண்டும் என்றும் யோசனை கூறினர். ஜவுளி "இந்தியாவின் உடையற்ற கிராமவாசிகளுக்காக இறக்குமதி" செய்யப்பட்டதால் இந்த ஆலோசனை முதலில ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஆனால் பிறகு ஒப்புக்கொள்ளப்பட்டு முதலில் நாலரைக் கோடி கஜங்களும் பிறகு ஐந்தரைக் கோடி கஜங்களும் பல தேசங்களுக்கு அனுப்பப் பட்டுள்ளன. 1949–ல் இந்தச் சகாப்தம் முடிவடைந்து சர்க்காருக்கு மொத்தம் 55–லக்ஷ ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது.

இந்தக் குட்டை குழப்பத்தைப் பற்றிக் காரசாரமாக எழுதியிருக்கும் விசாரணைக் கமிட்டி குறிப்பாகச் சொல்வது: ஜவுளி கமிஷனர் முதல் குற்றவாளி, தெரிந்த விஷயத்தையே ஒளித்து, சர்க்கார் கழுத்தை அறுத்தார்; தொழில் சப்ளை இலாகா ஜப்பான் துணிகளை ஏற்றுமதி செய்யப் பார்லிமெண்டின் நடைமுதல் நிதிக் கமிட்டியின் அனுமதியைக் கோருகையில், வெளிநாடுகளில் விலை அதிகம் என்று தங்களுக்குத் தெரியும் என்று சொன்னது தங்கள் பிரம்மாண்ட குற்

றத்தை மறைக்கவேண்டிச் சொன்ன பொய்; ஒவ்வொரு கட்டத்திலும் உதவிக் காரிய தரிசியே தீர்மானம் செய்திருக்கிறார்; சர்க்கார் அலுவல்களில் ஒரு நிரந்தரமான வழி கிடையாது. ஒவ்வொரு இலாகாவும் தன் இஷ்டம்போல் நடந்துகொள்கிறது. இது விஷயம் விசாரித்துத் திட்டமான முறைகள் ஏற்படுத்த வேண்டும்.

கடைசியாக, கமிட்டி சர்க்கார் காரியதரிசிகளின் செலவில் ஒரு இடைக்குத்து விட்டு நையாண்டியும் செய்திருக்கிறது. 'துணி வரவழைக்கத் திட்டம் போட்ட பொழுது அவைகள் கிராமாந்தரங்களுக்காக என்றார்கள். திட்டம் உருவாகி, காண்டிராக்ட் கையெழுத்தான சில மாதங்களுக்குள் துணியை ஏற்றுமதி செய்யத் திட்டங்களும் யோசனைகளும் மூலைக்கு மூலை பறந்தன. நிகர முடிவு: கிராமத்துக் கோவணாண்டிக்கு ஒரு கஜ ஜப்பான் துணிகூடக் கிடைக்கவில்லை.

மொத்தத்தில் கற்றுக்குட்டிகள் அமல் நடத்துவது போன்று மிகவும் பகுத்தறிவுக்குள்பட்ட விஷயமான விலை விகிதத்தைப் பற்றிய சிந்தனையில்லமால் திட்டம் வகுக்கப்பட்டு நடை முதலுக்கு வந்து, சர்க்காருக்கு நஷ்டம் ஏற்பட்டது. இதில் யார் யார் எவ்வளவு தூரம் பொறுப்பாளி என்பதை ஆராய ஒரு சட்ட பூர்வமான விசாரணை நடத்த வேண்டும் என்று பொதுக் கணக்கு வழக்குக் கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. 'நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என்றது அந்தக் காலம் என்றாலும் விஷயம் இவ்வளவு தூரம் அம்பலத்துக்கு வந்த பிறகு இந்த நட்டாமுட்டி அதிகாரிகளை நியாயத்துக்குக் கொண்டு வராவிட்டால் நேரு சர்க்காருக்குக் கௌரவம் கிடைக்காது.

* * *

டில்லிக்கு வருகிறவர்களுக்கு டில்லி விநோதங்கள் பல இருக்கின்றன பார்ப்பதற்கு. இவைகளுக்கு ஒரு புதிய சகா கிடைத்திருக்கிறது. அதுதான் ஜன சங்கத்தின் "சத்தியாக்கிரகம்"

இந்தச் சத்தியாகிரகம் ஒரு புது மாடல். உப்பு சத்தியாக்கிரகிகளைப் போன்றோ அல்லது மற்றக் காங்கிரஸ் இயக்கங்களைப் போன்றோ இதற்குத் தொண்டர்கள் பகிரங்கமாக முன் வருவதில்லை. சங்கத்திற்கு மாத்திரம்தான் தெரியும் எங்கு அவர்கள் கூலிகள் மாரடிப்பார்கள் என்று. ஆகையால் போலீஸார் தங்கள் முழு பலத்தையும் திரட்டி ஒவ்வொரு ஜனச் சந்தியிலும் வைக்கிறார்கள். மிகவும் ஜன நடமாட்டம் உள்ள இடங்களில் சிலதொண்டர்கள் மறைந்து நிற்பார்கள். போலீஸ் ஜரூர் குறையும்பொழுது திடீரென்று பைக்குள்ளிருந்து மாலைகளை எடுத்துச் சூடி ஜன சங்கச் சுலோகங்களை கோஷம் செய்கிறார்கள். போலீஸார் வந்து பிடிக்கும் பொழுது சிலர் திமிறுகிறார்கள், சிலர் போலீஸ் ஸ்டேஷனில் கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள்.

இதில் கேலிக்கிடமான விஷயங்கள் இரண்டு. ஒன்று: சர்க்கார் வழவழா குழகுழா என்று இல்லாமல் ஆரம்பத்திலேயே சட்டத்தை மீறுபவர்கள் யாவரையும் ஜெயிலில் போட்டிருந்தால் இந்த இயக்கம் இறந்திருக்கும், ஏனென்றால் இதற்கு டில்லியில் ஆதரவு கிடையாது. பலவித மோசடிகள் செய்து உத்தரப்பிரதேசம். பீஹார் முதலிய இடங்களிலிருந்து இரண்டுங் கெட்டான்களைப் பிடித்துச் சத்தியாக்கிரகம் செய்யக் கொண்டுவருகிறார்கள். போலீஸார் தினமும் தங்கள் வசத்தில் பிடிப்பவர் யாவரையும் ஜெயிலில் போடாமல், உதாரணமாக, 60பேரைப் பிடித்தால் ஐந்து பேரை மட்டும் ரிமாண்டுக்கு அனுப்பி, பாக்கிப் பேரை விட்டு விடுகிறார்கள். இது தொடை நடுங்கிக் கொள்கை.

இரண்டாவதாக, இந்த இயக்கத்தைத் தாங்கள் லக்ஷியம் செய்வதாகக் காட்டிக் கொள்ளாமல் சர்க்கார் பேசாமல் இருந்திருக்கலாம். அப்பொழுது இயக்கம் தானாக இறந்திருக்கும். அப்படியும் செய்யவில்லை. 'இதற்கு லாயக்கானவர்கள் வெள்ளையர் த[illegible] ஒன்று எடுக்க வேண்டும் தடி அலைப்பு கண்ணை மூடிக்கொண்டு ஒன்றும் நடக்கவில்லை என்று இருக்க வேண்டும்' என்று அனுபவம் உள்ள போலீஸ் அதிகாரிகள் சொல்லுகிறார்கள்.

டா[illegible]ர் முகர்ஜியின் தலைமை எவ்வளவு டொப்ப[illegible]ன்பது இப்பொழுது பகிரங்கம். அதற்கு மேல் வெளிச்சம் சர்க்காருக்கு எவ்வளவு மௌடீகம் இருக்கிறது என்பது. சிறிது விட்டுக்கொடுத்து டாக்டர்முகர்ஜி, ஸ்ரீடோக்ரா, ஸ்ரீஅப்துல்லா இவர்களை ஒரு வட்டமேஜையில் நேரு கூட்டினால் அதுவே போதும் என்று ஏங்குகிறார், ஸ்ரீமுகர்ஜி. இதில் அசட்டு ஜம்பம்தான் குறுக்கிடுகிறது சர்க்கார் தரப்பில்.

*    *    *

இங்கிலாந்தின் பிரபல தொழில் தலைவரான ஸ்ரீ பெவன் இந்தியாவுக்கு வந்தபொழுது சொன்னார்: 'நீங்கள் இந்தியாவிலேயே இருப்பதால் உங்கள் சர்க்கார் சாதனைகளை, நீங்கள் உணர்ந்து சிலாகிப்பதில்லை. உண்மையில் சென்ற ஐந்து வருஷங்களில் பலபெரிய சாதனைகள் நடந்திருக்கின்றன' என்றார். இதைத் திருப்பிச் சொன்னார் பண்டித நேரு தம் மகாராஷ்டி சுற்றுப்பிரயாணத்தின் போது: 'வேறு என்ன நாங்கள் சாதிக்கா விட்டாலும் நாங்கள் தேசத்தில் உறுதியான நிர்வாகத்தையும் அமைதியையும் நிலைநிறுத்தினோம். தேசத்திற்கு ஒருஅரசியல் சாஸனம் கொடுத்தோம். அடுத்தபடியாகப் பாகிஸ்தானைப் பாருங்கள்' என்று சொல்லி, தராதரஒப்பிட்டுப் பார்த்தலில் இந்தியா மிகவும் முன்னால் சென்றுவிட்டது என்றார்.

இந்த வார்த்தைகளைச் சொல்லி,சில தினங்களுக்குள் பாகிஸ்தானில் புரட்சிகரமானமாறுதல்கள் உண்டாயின. அகம்மதியா வகுப்பு முஸ்லிம்களை அல்லோகலப்படுத்தியதை அரைக்கண்ணால் கவனித்து வாளா விருந்த நாஜிமுத்தின் மந்திரி சபையைப் பாகிஸ்தான் கவர்னர் ஜனரல் டிஸ்மிஸ் செய்து, ஸ்ரீ முகம்மது அலியைப் பிரதமராக நியமித்தார். பாகிஸ்தானில் மாகாணமாச்சர்யம் அதிகம். ஆகவே மற்றொரு வங்காளி நிலைமையைச் சமாளிப்பாரா? லீக் தலைவரான நாஜிமுத்தீன் கல்தா கொடுக்கப்பட்டதை ஜனங்கள் ஒப்புக் கொள்வார்களா? என்ற கேள்வி எழுந்தது.

முஸ்லீம் லீக் செல்வாக்குத் தற்சமயம் மிகவும் குன்றிப் பல போட்டிக் கக்ஷிகள் பாகிஸ்தானில் மும்முரமாக வேலை செய்கின்றன. இந்த நிலைமையில் ஸிந்து மாகாணத்தேர்தலில் லீக்குக்கு அமோக வெற்றி அடைய வைத்ததின் மூலம் தம் நிலைமையை வலுப்படுத்திக் கொண்டார். இப்பொழுது கிழக்குப் பாகிஸ்தானில் லீக் தலைவர்களின் அமோக ஆதரவைப் பெற்று இந்தியாவில் நேருவுக்கு உள்ள நிலைமையைப் பாகிஸ்தானில் பெற்று விட்டார்.

முகம்மது அலி, பாகிஸ்தான் தன் முரட்டு வகுப்புவெறி மூலம் இந்தக் கேவல நிலைக்கு வந்திருப்பதை, அறிவார். ஆகவே மௌலாக்களின் பிடியிலிருந்து விலகி,தேசத்துக்குக் கௌரவம் அளிக்கும் முறையில் அரசியல் சாஸனத்தை முடிப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தவிர, காஷ்மீர் விவகாரத்திற்கு இந்தியாவில் பாகிஸ்தான் ஹைகமிஷனரான ஸ்ரீ குரைஷி நியமிக்கப்பட்டிருக்கிறார். இவருக்கு, "இஷ்கா இஸ்பா"வில் நம்பிக்கை கிடையாது. ஆகவே காஷ்மீரச் சிக்கலுக்குக் கூட ஒரு முடிவு ஏற்படலாம் என்பது ஒரு தைரியமான ஹேஷ்யம். தற்சமயம் சந்தியில் நிற்கும் அகதிகள் சொத்துப் பரிவர்த்தனை, நஷ்ட ஈடு முதலிய பிரச்னைகள்கூடத் துலக்கப்படும் என்று இந்திய சர்க்கார் வட்டாரங்களில் நம்புகிறார்கள்,






அன்று நடுப்பகல். பள்ளிக்கூட மணியடித்ததும், மாணவர்கள் ஒருவரோடொருவர் மோதிக்கொண்டு வெளியேறினர். வழக்கம்போல, பகல் போஜனத்திற்கு நேராக வீட்டிற்குப் போகவேண்டியவர்கள், சிறிது தூரம் சென்றதும் சிறு சிறு கூட்டமாகப் பிரிந்து இரகசியம் பேசலானார்கள். காரணம், 'லாபிளாங்கெட்டின்' புத்திரனை சைமன் அன்றுதான் முதல் முதலாகப் பள்ளிக்கு வந்திருந்தான்.

லாபிளாங்கெட்டைப்பற்றி அனைவருக்கும் நன்கு தெரியும். பொது வாழ்வில் அவள் வரவேற்கப்படத் தகுந்தவளென்றாலும், ஜனங்கள் அவளை ஒருதலைப் பட்சமாகவே கருதி வந்தனர். இதை இந்த மாணவர்களும் காரணமின்றிப் பின்பற்றலாயினர். சைமனைப்பற்றி மாணவர்களுக்கு அதிகம் தெரியாது. ஏனென்றால், அவன் வீட்டை விட்டு வெளியே வந்து அவர்களுடன் கிராமத்து வீதிகளிலோ அல்லது நதிக்கரையிலோ விளையாடுவதே கிடையாது. ஆக, அவர்கள் சைமனை நேசிக்கவில்லை.

இன்று, ஆச்சரியம் கலந்தகளிப்புடன் அவர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடி நின்று பேசலானார்கள். பதினைந்து வயது பையனொருவன் ஜோடித்த (அவனுக்கு எல்லாம் தெரிந்ததாக) ஒரு விஷயத்தைப் பற்றியதுதான் அவர்களுடைய பேச்சு.

"சைமனைப்பற்றி நீங்கள் அறிவீர்களா? ஆம், அவனுக்குத் தகப்பன் இல்லை." இதுதான் அந்த இரகசியம்.

லாபிளாங்கெட்டின் மகன் பள்ளிக்கூடத்தின் வாசலருகே வந்துகொண்டிருந்தான்.

அவனுக்கு ஏழு அல்லது எட்டு வயதிருக்கும். முகம் வெளிறிக் கிடந்தது. மிகவும் சுத்தமாக இருந்தான். கோழையைப் போன்ற தோற்றமுடையவன்.

அவன் வீட்டுக்குத் திரும்பி வந்துகொண்டிருக்கையில் கூட்டம் கூட்டமாக நின்ற மாணவர்கள், தங்கள் குறும்புச் செய்கையாலும் முணுமுணுத்துக்கொண்டும், போக்கிலித்தனமான ஈவிரக்கமற்ற கண்களைக்கொண்டு, கேலி பண்ணிக்கொண்டே, அவனைச் சுற்றி வளைத்துக்கொண்டனர். அவர்களின் நடுவிலே அகப்பட்டுக்கொண்டு, ஆச்சரியப்பட்டவாறு, என்ன செய்வதென்று தெரியாமல் திண்டாடினான், சைமன். அவர்கள் என்ன செய்யப் போகிறார்களென்று அவனுக்குப் புரியவில்லை. ஆனால், இந்தக் க்தையைப் புனைந்த அந்தச் சிறுவன், தான் ......நினைத்த படியே நடந்துவிட்டது கண்டு பெருமிதப்பட்டான்.

'உன்னை என்னவென்று அழைப்பது?' என்று அவன் சைமனைக்கேட்டான்.

'சைமன்.'

'என்ன சைமன்?'

சிறுவன் பயத்தினால் நடுங்கியபடி, மறுபடியும் 'சைமன்' என்று கூறினான்.

'சைமன் அது ஒரு பெயராகாதே. சைமன் என்ற சொல்லோடு வேறொரு சொல் சேர்ந்தால் தானே உன் பெயராகும்,' என்று அந்தப் பையன் உரத்துக் கூவினான்.

மூன்றாம் முறையாக, 'என்பெயர் சைமன்' என்று அச்சிறுவன் கூறிய பொழுது அவன் கண்களிலே நீர் துளித்தது.

சிறுவர் குழாம் சிரிக்கத் தொடங்கியது. அந்தப் பையன் வெற்றிகரமாக, உரத்த குரலில் 'அவனுக்குத் தகப்பனில்லையென்பது வெளிச்சமாகி விட்டதல்லவா' என்று கூறினான்.

பெரியதொரு மௌனம் நிலவியது. தகப்பனில்லாத பையன் என்று கேள்விப்பட்டதும், அவர்கள் அதுஒருஅசாதாரணமான காரியமென்று கருதி, பெரிதும் ஆச்சரியப்பட்டனர். அவர்கள் அவனை, ஒரு புதிராக, இயற்கைக்கு மாறுபட்ட சீவனாகக்கருதினார்கள். பிளாங் கெட்டின் மேல் தமதுதாய்மார் கொண்டிருந்த அந்த விவரிக்க முடியாத அன்பு இவர்களுள்ளும் அதிகரித்தது. சைமனோ, கீழேவிழுந்து விடாமல் இருப்பதற்காக, ஒரு மரத்தின்மேல் சாய்ந்து கொண்டான். ஏதோ மீளொணாத்துயரில் சிக்கியது போல, அவன் நின்றுவிட்டான். அவர்களுடைய கேள்விகளுக்குத் தக்க பதில் கூற விரும்பினான். ஆனால், சரியான விடைதரவோ, அல்லது தந்தையில்லாதவன் என்ற இந்த அபாண்டத்தை மறுத்துக் கூறவோ அவனுக்குத் தெரியவில்லை. முடிவாக உரத்த குரலில், துணிச்சலுடன், 'ஆம் எனக்குத் தந்தை உண்டு,' என்றான் சைமன்.

'அவர் எங்கே?' என்று கேட்டான் அந்தப் பையன்.

சைமன் மௌனமாக இருந்தான். பாவம்! தந்தையைப் பற்றி அவன் அறியமாட்டான். சிறுவர்கள் உணர்ச்சி மிகுதியால் கூச்சலிட்டனர். இச்சிறுவர்கள் மிருகக்குணம் படைத்தவர்கள். ஊனம் அடைந்த தன்னினத்தையே விழுங்க நினைக்கும் பட்சிசாதியைப் போன்றவர்கள். தன்னைப்போலவே, அவனுடைய தாயுடன் மாத்திரமே எப்பொழுதும் கண்டிருந்த ஒரு சிறுவனை சைமன் திடீரெனப் பார்த்தான்.

'உனக்குந்தான் இல்லை. உனக்குந்தான் தகப்பன் இல்லையே?' என்றான் சைமன்.

'எனக்குத் தந்தை உண்டு,' என்று அந்தச் சிறுவன் பதிலிறுத்தான்.

'அவர் எங்கே? இது சைமனின் கேள்வி.

'அவர் இறந்துபோய், கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார். அவர்தான் என் அப்பா' என்று, அந்த வாண்டுப்பயல் இறுமாப்புடன் கூறினான்.

ஆமோதிப்பதற்கு அறிகுறியான முணக்கம் அவர்களிடையே எழுந்தது. தந்தை இறந்து போய், கல்லறையில் புதைக்கப்பட்டிருக்கிறார் என்ற நிலைமை, அவர்களுடைய தோழனை, தந்தையே இல்லாத அந்த மதலையைக் காட்டிலும் உயர்ந்தவனாகச் செய்தது என்று அவர்கள் எண்ணினார்கள். குடியர்களாயும், வெறியர்களாயும், திருடர்களாயும், தீவினை செய்வோர்களாயும், மனைவிமார்களுக்குத் தீங்கிழைத்தவர்களுமாக விருந்த தகப்பன்மாருக்குப் பிறந்த இந்தப் போக்கிலிப் பயல்கள், ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு சைமனைச் சிறிது சிறிதாக நெருங்கினார்கள். சட்டத்திற்குப் புறம்பான ஒருவனை, யோக்கியர்களாகிய தாங்கள், தங்களது நெருக்கத்தால் திக்கு முக்காடச் செய்ய நினைத்தார்கள்,

சைமன் அருகிலிருந்த ஒருவன், அவனைப் பார்த்து, தன் நாக்கை நீட்டிக் கேலிசெய்தபடி, 'உனக்குத் தந்தை இல்லை! தந்தை இல்லை' என்று அலறினான்.

சைமன், தன் இரு கைகளாலும் அவன் மயிரைப் பிடித்துக்கொண்டு, காலால் துவைத்தான். அவனுடைய கன்னத்தை நன்றாகக் கடித்துவிட்டான். அந்த இரண்டு சிறுவர்களுக்குமிடையே ஒரு பலத்த குஸ்தி நடந்தது. முடிவில், சைமன், காயமடைந்து, ரத்தம் ஒழுகத் தரையிலே புரண்டான். சிறுவர்கள் கைகொட்டி நகைத்தார்கள். தன் சிறிய சட்டையின்மீது படிந்திருந்த தூசியைக் கையினால் துடைத்துக்கொண்டே சைமன் எழுந்தான். யாரோ ஒருவன், 'போய் உன் அப்பாவிடம் சொல்லுடா,' என்று உரக்கக் கூவினான்.

மனம் குன்றிப்போனான் சைமன். அவனைவிட அவர்கள் பலம் பொருந்தியவர்கள். அவர்கள் அவனை நையப்புடைத்துவிட்டார்கள். அவர்களுக்குச் சரியான பதில்சொல்ல அவனால் இயலவில்லை. காரணம் அவனுக்குத் தெரியும், தனக்குத் தந்தையில்லை என்பது. கண்களிலே துளும்பிய கண்ணீரை மறைக்க அவன் எவ்வளவோ முயன்றான். முடியவில்லை. துக்கம் நெஞ்சை அடைக்க மனம் வெதும்பி, மௌனமாக அழ ஆரம்பித்தான். அவன் தேம்பும்பொழுது அவனது உடல் குலுங்கியது. அவனுடைய எதிரிகளின் இதயத்திலே ஒரு கொடூரமான களிப்பு வெடித்தது. பயங்கரமான விழாக் கொண்டாடும் காட்டுமிராண்டிகளைப்போல, அவர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு, வட்டமாகக் கூடி, 'தந்தையில்லை! தந்தையில்லை' என்று திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டே கூத்தாடலானார்கள்.

ஆனால் சைமன் திடீரென்று அழுவதை நிறுத்தினான். ஆவேசம் அவனை ஆட்கொண்டது, தன்னருகிலே கிடந்த கற்களைப் பொறுக்கி, பலங்கொண்டமட்டும் தன்னை இம்சிப்பவர்களின் மீது விட்டெறிந்தான். இரண்டு, மூன்றுபேர், காயமுற்று, பயந்து, அலறி ஓடினர். பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்த அவனது தோற்றத்தைக் கண்டு மற்றவர் கதிகலங்கினர். கோழைகள்! கோபங்கொண்ட மனிதனொருவனின் முன்னே கொக்கரிக்கும் ஒரு கும்பல். அவர்கள் சிதறி ஓடலானார்கள். தனியே விடப்பட்ட சைமனின் இதயத்திலே, ஒரு பெரும் முடிவுக்கு அவனது மனத்தைத் தூண்டிய நினைவு எழுந்தது. தந்தையில்லாத அந்தப் பையன் வயல்களை நோக்கி ஓடினான். ஆற்றிலே

விழுந்து மாய்ந்துவிடவேண்டும் என்பது அவனது தீர்மானம்.

எட்டு நாளைக்கு முன்பு, பிச்சை எடுத்துச் சீவனம் செய்த ஒருவன், தன்னிடம் பணம் இல்லை என்பதற்காக நீரில் மூழ்கிய விவரம் இவனது ஞாபகத்திற்கு வந்தது. நீரில் மூழ்கியவனை வெளியே எடுத்தபொழுது சைமனும் அங்கிருந்தான். அந்தப் பிச்சைக்காரன் முன்பு பார்ப்பதற்குப் பரிதாபகரமாகவும் அசிங்கமாகவும் இருந்ததாகச் சைமனுக்கு தோன்றியது. ஆனால் இன்று, அவனது வெளிறிய முகம், நீண்ட நனைந்த தாடி, அமைதி நிறைந்த அவனது திறந்த கண்கள் இவையெல்லாம் அவன் மனத்திலே பதிந்தன. பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் சொன்னார்கள், 'அவன் இறந்துவிட்டான்,' என்று.

'இப்பொழுது அவன் மிகவும் குதூகலமாயிருக்கிறான்.' என்று எவனோ ஒருவன் கூறினான். பணமில்லாத அந்த ஏழையைப் போலவே, தானும் தந்தையில்லாத காரணத்திற்காகத் தண்ணீரில் விழுந்து இறந்துவிட விரும்பினான்.

ஆற்றருகிற் சென்ற சைமன், அலைபுரளும் நதியைக் கண்டான். தெளிந்த நீரிலே மீன்கள் துள்ளின. சில சமயங்களில் அவை தண்ணீரின் மேலே துள்ளி, நீர்மட்டத்தின் மேலிருந்த பூச்சிகளைப் பிடித்துக்கொண்டிருந்தன. அவைகள் இரை உண்ணும் காட்சி இவனைக் கவரவே, அழுகையை நிறுத்தி அதைக் கவனிக்கலானான் அவன். சூறுவளிக்காற்றுச் சீறியடித்து, மரங்களை வேருடன் பிடுங்கி எறிந்தபின் தணியும் போது ஏற்படும் அந்த அமைதியைப்போல இடையிடையே, 'நானும் தகப்பனில்லை என்ற நிலைமைக்காக: தண்ணீரிலே விழுந்து சாக இருந்தேன்,' என்ற எண்ணம் மிகுந்த வேதனையுடன் அவன் நெஞ்சிலே எழுந்தது.

வெப்பமோடு கூடிய அருமையான நேரம். அழகான பரிதியின் ஒளி புற்களை வெதுப்பியது. நீர் பளபளத்தது. இந்தக் காட்சியை, சைமன் சில நிமிடங்கள் அனுபவித்தான். வெம்பிப் போன நெஞ்சிற்குச் சிறிதளவு ஆறுதல். மதியத்தின் கதகதப்பிலே, அந்தப் புல்லின் மேலே படுத்து உறங்க அவன் விரும்பினான்.

அவன் காலடியில், சிறு தவளை ஒன்று தத்தித் தாவியது. அவன் அதைப் பிடிக்க முயன்றான். அது தப்பி விட்டது. அதைத் தொடர்ந்தான். மும்முறை முயன்றும் பிடிக்க முடிய வில்லை. முடிவில், அதைப் பிடித்தான். அது தப்பி ஓடிவிட முயன்றதைக் கண்டு அவன் சிரிக்கலானான். அது பின்னங்கால்களை விரைப்பாக நீட்டியது. கண்களை அகல விரித்து, முன்னங்கால்களை அடித்துக்கொண்டு ஓட முயன்றது. பல நேரான மரச்சருகுகளை, வளைவாக ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து ஆணி அறைந்து செய்யப்பட்டதொரு பொம்மை, இதேமாதிரியானதொரு அசைவால் அதோடு இணைக்கப்பட்டிருக்கும் சிறிய போர் வீரர்களை (பொம்மைகளை) ஆட்டுவிக்கும். இந்தப் பொம்மை அவனது நினைவிலே ஊர்ந்தது.

பிறகு, தன் வீட்டையும், தாயையும் நினைத்து, துக்கமேலிட்டு, மீண்டும் அழ ஆரம்பித்தான். அவனது உதடுகளிலே ஒருவிதநடுக்கம். படுக்கப் போகுமுன், சொல்லும் பிரார்த்தனையை, முழந்தாளிட்டுக்கொண்டு சொல்லலானான். ஆனால் துக்கம் அதிகரிக்கவே, பிரார்த்தனையை அவனால் தொடர்ந்து சொல்லமுடியவில்லை. ஆழ்ந்த தேம்புதல் தொடர்ச்சியாக வந்தது. எதையும் நினைக்காமல், எதையும் கவனியாமல், கண்ணீர்விடலானான், சைமன்.

திடீரென யாரோ ஒருவர் தன் தோளின் மீது கை வைப்பதை அவன் உணர்ந்தான். "தம்பீ, நீ இவ்வளவு துக்கப்படுவதற்குக் காரணம் என்ன?" என்ற கேள்வி கனத்த குரலில் எழுந்தது.

சைமன் திரும்பிப் பார்த்தான். உயரமானதொரு தொழிலாளி தன்னைப் பச்சாத்தாபத்தோடு கவனிப்பதைக் கண்டான். அந்த ஆளினுடைய தலை முடி அலை அலையாக நெளிந்து கிடந்தது. கருமையான தாடியும் இருந்தது.

"எனக்கு அப்பா இல்லை. அதனால் அவர்கள் என்னை அடித்துவிட்டார்கள்," என்று சைமன் கூறினபொழுது அவனது கண்களில் நீர் தேங்கியது.

"என்னப்பா, இது! ஒவ்வொருவருக்கும் கட்டாயமாக அப்பா உண்டு," என்று புன்முறுவல் பூத்தவண்ணம் அந்தத் தொழிலாளி கூறினான்.

"ஆனால் எனக்கு—இல்லை" என்று அந்தப் பாலகன் தேம்பிக்கொண்டே சொன்னான்.

தொழிலாளி சிந்திக்கலானான். சைமன் யாரெனத் தெரிந்துகொண்டான் அவன். லாபிளாங்கெட் அருகிலே வந்து குடியேறியது சமீபகாலத்தில்தான் என்றாலும், அவள் சரித்திரத்தைப் பற்றி லேசாகத் தெரியும் அவனுக்கு.

"தம்பி, திடமாக இரு, பயப்படாதே வா, உன் தாயாரிடம் போகலாம். அவள் உனக்கு ஒரு தந்தையைக் கண்டுகொடுப்பாள்."

சிறுவனின் கையைத் தொழிலாளி பிடித்துக் கொண்டான். இருவரும் வழி நடந்தனர். அவன் சிரிக்கலானான். கிராமாந்தரத்திலேயே மிகவும் அழகான பெண்களில் அவளும் ஒருத்தி என்று எல்லோராலும் கருதப்பட்ட லாபிளாங்கெட்டைப் பார்க்க அவன் கவலைப்படவில்லை. இளமையில் ஒருமுறை தவறிய இளம் பெண்ணொருத்தி மீண்டும் தவற வழி உண்டு என்ற ஒரு எண்ணம் அவன் இதயத்திலே ஊடாடியது.

மிகவும் சுத்தமாக இருந்த ஒரு சிறு வீட்டின்முன் அவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

'இதுதான் எங்கள் வீடு,'' என்று கூவினன் அக்குழந்தை. ''அம்மா.''

ஒரு பெண் வீட்டினுள்ளிருந்து வெளியே வந்தாள். எந்த வீட்டிலே, எவனோ ஒருவனால் புறக்கணிக்கப்பட்டாளோ அதே வீட்டை வேறொருவனிடமிருந்து காப்பதற்காக, கண்டிப்பு அவளது முகத்திலே தெளிய, வீட்டின் கதவருகே அவள் நின்ருள். இனியும் அவளை ஏமாற்ற முடியாது என்பதைக் கண்டுகொண்டான் அந்தத் தொழிலாளி.

திகிலடைந்துபோய், அவன், கையிலே தொப்பியை வைத்த வண்ணம், 'அம்மா, ஆற்றிலே விழுந்து இறந்து போயிருக்கவேண்டிய உனது மகனை உன்னிடம் கொண்டு வந்திருக்கிறேன்,' என்று நாக்குழறினன்.

சைமன், தன் இருகரங்களாலும் தாயைக் கட்டிக்கொண்டு. அழுங்குரலில், 'இல்லை அம்மா, எனக்குத் தந்தை இல்லை என்பதற்காக அவர்கள் அடித்து விட்டார்கள். ஆகவே நான் ஆற்றிலே விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ள எண்ணினேன்,' என்று கூறினன்.

அவளது முகம் கோபத்தால் சிவந்தது. மனம் நொந்த அவள் தன் குழந்தையை அன்புடன் அணைத்துக்கொண்டாள், முகத்தில் கண்ணீர்த் துளிகள் கதுவின. அந்தத் தொழிலாளி உணர்ச்சி வசப்பட்டு, எப்படி அங்கிருந்து போவது என அறியாமல் நின்ருன். ஆனல், சைமன் அவனிடம் நேராக ஓடி, ''நீ என் தந்தையாக இருப்பாயா'' என்று கேட்டான்.



நிசப்தம் நிலவியது. சிறிது நேரம் பேசாமல் மௌனமாக இருந்தார்கள், லாபிளாங்கெட், அவமானத்தால் வெட்கி, வாயடைக்கப்பட்டு, நெஞ்சின் மீது கையை வைத்த படியே சுவரின் மீதுசாய்ந்தாள் தன் கேள்விக்கு விடை காணுத தைக்கண்ட குழந்தை சொன்னன்: ''உனக்கு அது பிடிக்காவிட்டால், நான் ஆற்றிலே விழ, திரும்பவும் போய்விடுவேன்,'' என்று.

தொழிலாளி, அதைக்கேலியாக எண்ணி, சிரித்தபடியே, 'ஏன், எனக்கும் பிரியந்தான்,'' என்ருன்.

''அப்படியானல், உன் பெயர் என்ன?''

அந்தப் பையன்கள் உன் பெயரைக் கேட்டால் நான் சொல்ல வேண்டாமா?''

'பிலிப்,'' என்ருன் அவன்.

அந்தப் பெயரை மனதில் பதிய வைப்பதற்காக, சைமன் சிறிது நேரம் வாளாவிருந்தான். பிறகு மனத்திருப்தியுற்றவனுக, அவன் தன் இரு பிஞ்சுக்கைகளையும் நீட்டி, ''சரி பிலிப், நீ தான் என் தந்தை,'' என்ருன்.

அந்தத் தொழிலாளி. பையனைத் தூக்கி அவசரமாக இரு கன்னங்களிலும் மூத்தமிட்டுவிட்டு, விரைந்து போய்விட்டான்.

மறுநாள் சைமன் பள்ளிக்குச் சென்ருன். மற்றப் பையன்களெல்லாம் அவனைப் பார்த்துக் குரோதமாகச் சிரித்தனர். பள்ளி முடிந்தது, அவர்கள் மீண்டும் பழைய பல்லவியை ஆரம்பிக்குமுன், அவன் கல்லை விட்டெறிவதுபோல, "என் அப்பாவின் பெயர் பிலிப்'' என்ற சொற்களை அவர்களின் மீது வீசினன்.

மாணவர்களின் சந்தோஷ ஆரவாரம் நாறு பக்கங்களிலும் ஓல்லென எழுந்தது. "பிலிப்பா? யார் அந்த பிலிப்? என்ன வேலை அவருக்கு? இந்த பிலிப் உனக்கு எங்கே கிடைத்தார்?"

சைமன் எதுவும் சொல்லவில்லை. அவர்களின் முன்னல் பயந்து ஓடுவதைவிட, வீரனுக, நம்பிக்கை குன்ருமல் அங்கேயே நின்ருன் அவன். அவ்வழியே வந்த உபாத்தியாயரின் உதவியால் அவன் வீடு திரும்பினன்.

மூன்று மாதங்களாக, பிலிப், அடிக்கடி பிளாங்

கெட்டின் வீட்டின் பக்கமாகப் போகலானான். சில சமயங்களில், அவள் ஜன்னலருகே அமர்ந்து தைத்துக் கொண்டிருக்கும்பொழுது, அவளிடம் ஏதாவது பேசுவான்; அந்தத் தொழிலாளி. அவள் விநயமாகவும் சாந்தமாகவும் பதில் கூறுவாள். அவனோடு அவள் சரசம் பண்ணுவதுமில்லை; அவனை வீட்டினுள்ளே அனுமதிப்பதுமில்லை. இதல்லாமலும், அவன் மற்ற மனிதர்களைப்போல, சிறிதளவு அற்பத்தனமாக, அவள் அவனுடன் பேசும் போது, சாதாரணமாகவிருப்பதைக் காட்டிலும் அதிக அழகாக அவளிருப்பதாக எண்ணினான்.

ஆனால், மறைந்தொழிந்த கீர்த்தியைத் திரும்பவும் பெறுவது அவ்வளவு சுலபமல்ல, லாபிளாங்கெட் கண்ணியமாக வாழ்ந்தாலும், பழைய புகழ் திரும்புவது ஏது? அண்மையிலிருப்பவர்கள் ஏதேதோ பேசிக்கொண்டனர்.

சைமனைப் பொறுத்தமட்டிலே, அவன் தன் புதிய தந்தையின்மீது அதிகமான பிரியம் கொண்டான். நாள்தோறும், மாலை வேளையில், அவர்களிருவரும் உலாவுவது உண்டு. அவன் பள்ளிக்குத் தவறாமல் சென்று வந்தான். தனது சகாக்களோடு பெருந்தன்மையோடு பழகினான். அவர்களுடன் அவன் பேசுவது இல்லை.

என்றாலும், ஒரு நாள், முன்பு சைமனைத் தாக்கிப் பேசிய அதே சிறுவன், 'நீ பொய் சொல்லிவிட்டாய். பிலிப் என்ற பெயர்கொண்ட தந்தை உனக்கில்லை,' என்றான்.

'அதென்ன அப்படிச் சொல்கிறாய்?' என்று மனம் குழம்பியவனாய்க் கேட்டான் சைமன். கைகளை நெறித்தபடி அந்தச் சிறுவன் கூறினான்; 'உனக்கு அப்பா இருந்தால் அவர் உன் அம்மாவின் கணவனாக இருக்கவேண்டுமே'.

சைமனுக்கு இதன் உள் கருத்து புலப்படவில்லை என்றாலும், அவன், 'எப்படியிருந்தாலும் அவர் என் தந்தையே' என்று பதில் சொன்னான்.

'தாராளமாக இருக்கலாம். ஆனாலும் அவர் உன் தகப்பனாராக முடியாதே', என்றான் அந்த விஷமி கேலியும் கிண்டலுமாக.

பிளாங்கெட்டின் மகன் தலை குனிந்து பிலிப் வேலை செய்யும் தொழிற்சாலையை நோக்கி ஏதேதோ எண்ணியவாறு வழிநடந்து சென்றான்

தொழிற்சாலையைச் சுற்றிலும் மரமடர்ந்திருந்தது. அங்கே கும்பிருட்டு குடியிருந்தது, ஜ்வாலை விட்டெறியும் உலைக்களமும், ஐந்து கொல்லர்கள் பட்டரைக் கல்லின்மீது சம்மட்டியால் அடிக்கும்போது உண்டாகும் தீச்சுடரும் மாத்திரமே வெளிச்சம் தந்தது. தீஜ்வாலையைச் சுற்றிலும் நின்று கொண்டு உலையில் காயும் இரும்பின்மீது அவர்கள் கவனத்தைச் செலுத்தினார்கள். அவர்கள் வேலை செய்யும்போது ராட்சதர்களைப்போலத் தோன்றினார்கள். அவர்களது சுத்தி ஏறி இறங்குவதுபோலவே, அவர்களது தாழ்ந்த எண்ணங்களும் உயர்ந்தும் தாழ்ந்தும் மாறின.

சைமன், யாருமறியா வண்ணம் உள்ளே நுழைந்து, பிலிப்பின் சட்டையைப் பிடித்து இழுத்தான். பிலிப் திரும்பினான். திடீரென வேலை நின்றது. அந்த மனிதர்கள் உன்னிப்பாகக் கவனிக்கத் தொடங்கினர். எதிர்பாராதவிதமாக ஏற்பட்ட இந்த அமைதியினிடையே, சைமனின் சிறுகுரல் எழுந்தது.

'பிலிப், இதற்கு அர்த்தம் என்ன? அந்தப் பயல் நீ எனது தந்தை இல்லையென்று சொன்னானே, அதன் பொருள் என்ன?'

'ஏன்?'

'ஏனென்றால் நீ என் அம்மாவின் புருஷன் அல்ல,' என்று அந்தக் குழந்தை சூதறியாமல் கூறினான்,



யாரும் சிரிக்கவில்லை. சுத்தியைப் பிடித்திருந்த தன் புறங்கையின்மீது நெற்றியைப் பொதித்து வைத்தபடி, நின்றுவிட்டான் பிலிப். அவன் சிந்திக்கலானான். அவனது நான்கு தோழர்களும் அவனைக் கவனித்தார்கள். இந்த ராட்சத உருவங்களுக்கு எதிரே சைமன் ஒரு புழுவெனத் தோன்றினான். அவன் ஆசையோடு எதையோ எதிர்பார்த்தான். திடீரெனக் கொல்லர்களில் ஒருவன், அனைவருடைய உணர்ச்சியின் பிரதிநிதியாக, பிலிப்பைப் பார்த்து, "என்ன இருந்தாலும் லாபிளாங்கெட் ஒரு நல்ல குணவதி, துரதிர்ஷ்டக்காரியானாலும், அவள் திடசித்தமும் நேர்மையும் கொண்டவள், பண்பட்ட மனிதன் ஒருவனுக்கு உண்மை மனைவியாகத் தகுந்தவள்" என்று கூறினான்.

"அது முற்றிலும் உண்மை," என்று மற்ற மூவரும் ஆமோதித்தனர்.

"அவள் தவறியது அவளது குற்றமாகுமா? அவளைத் திருமணம் செய்து கொள்வதாகக்கூறி அவளைக்கெடுத்து, இன்று எல்லோராலும் அதிகமாக மதிக்கப்படும் அந்த மனிதனை நான் நன்கறிவேன். எவ்வளவுக்கு இன்று மதிக்கப்படுகிறானோ அந்த அளவுக்கு அவன் கொடியவன்' என்று அந்தக் கொல்லன் தொடர்ந்தான். 'ஆம். அதுவும் உண்மை' என்று மற்ற மூவரும் ஏகோபித்துக் கூறினார்கள்.

மீண்டும் பேச ஆரம்பித்தான்.

"தன் மகனைப் படிக்கவைக்க அவள் தன்னந்தனியே எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள்? மாதா கோவிலைத் தவிர வேறு எங்கும் போகாததிற்காக அவள் எவ்வளவு அழுதிருப்பாள்? எல்லாம் கடவுளுக்குத்தான் வெளிச்சம்."

"அதுவும் நிஜந்தான்.," மற்றவரின் ஆமோதிப்பு. உலைக்களத்தின் துருத்திகளின் சப்தத்தைத் தவிர வேறொன்றும் அங்குக் கேட்கவில்லை.

திடீரென, பிலிப் குனிந்து சைமனிடம் "நீ உன் அம்மாவிடம் போய் நான் அவளிடம் பேச வருவதாகக் கூறு," என்றான்.

பிறகு பையனை வெளியே கொண்டுவிட்டான். தன் வேலையைத் தொடங்கினான். மீண்டும் அந்த ஐந்து சுத்திகளும் பட்டரைக் கல்லின் மீது ஒரு வித நாதத்துடன் விழ ஆரம்பித்தன, இரவு வரை அவர்கள் வேலை செய்தார்கள். அவர்கள் வலிமை கொண்டவர்களாகவும் களிப்படைந்தவர்களாகவும் காணப்பட்டார்கள்.

விருந்து நாட்களிலே ஒலிக்கும் ஆலயமணி மற்ற மணிகளின் ஓசைகளையெல்லாம்வென்று விடுவதுபோல, பிலிப்பின் சம்மட்டி அடி, மற்றவர்களுடையதைக் காட்டிலும் மேலோங்கி அலறியது. தீயின் நடுவே கண்களைச் செலுத்தி, தீப்பொறிகளினிடையே நிமிர்ந்து நின்று, தன் வேலையை உத்வேகத்துடன் செய்தான், பிலிப்.

அவன் லாபிளாங்கெட்டின் வீட்டை அடைந்து கதவைத் தட்டினபோது, வானத்தில் மீன்கள் ஒளிர்ந்தன. ஞாயிறன்று போட்டுக்கொள்ளும் மேல் அங்கியையும், ஒரு புதிய சட்டையையும் அணிந்திருந்தான் அவன். அவனுடைய தாடி அழகாகத் திருத்தப்பட்டிருந்தது. அந்த இளம் பெண் வாயிலில்நின்றபடி, தீனக்குரலில், "பிலிப், பொழுது சாய்ந்ததும் தாங்கள் இப்படி வருவது நல்லதல்ல,' என்றாள்.

பதில் சொல்ல முயன்றும், பதட்டத்தால் கலங்கி நின்றான்.

"நான் மீண்டும் பிறரால் பழிசொல்லப்பட வேண்டுவதில்லை என்பது நீங்களறிவீர்கள்!" இது லாபிளாங்கெட்.

உடனே, பிலிப், "நீ என் மனைவியாக இருக்கச் சம்மதித்தால், அதைப்பற்றி நான் ஏன் கவலைப்படவேண்டும்?" என்று கூறினான்.

அவள் ஒன்றும் பதில் கூறவில்லை. ஆனால் உள் அறையில் நிழலிலே யாரோ ஒருவர் விழுவதாக உணர்ந்து, உடனே வேகமாக உள்ளே நுழைந்தான் பிலிப். தூங்கிக்கொண்டிருந்த சைமனை அவன் முத்தமிட்டு, அவன் காதருகே மெதுவாக எதையோ கூறினான். சைமன் விழித்துக்கொண்டான். சில நிமிடநேரத்தில் நண்பன் பிலிப்பின் திரண்ட புஜங்களிலே தான் இருப்பதைக் கண்டான் சைமன். 'கொல்லன் தொழில்புரியும், பிலிப்ரெமி என்பவர் உன் தந்தையென்று பள்ளிப் பிள்ளைகளிடம் சொல்லு. உனக்குத் தீங்கு இழைத்தவன் காதை அவர் திருகி விடுவார் எனவும் கூறு,' என்று சொன்னான் பிலிப்.

மறுநாள் காலை, சைமன் பள்ளிக்கூடம் சென்றான். மாணவர்களெல்லாம் வந்துவிட்டார்கள். பாடம் ஆரம்பிக்கும் நேரம். சைமன், வெளிறிய முகத்துடனும், துடிக்கும் உதடுகளுடனும், 'கம்மாளனாக வேலை பார்க்கும் பிலிப் ரெமி என்பவர் என் அப்பா. எனக்குத் தீங்கு இழைப்பவர்கள் எல்லோரையும் காதைச் சேர்த்து அறைவதாகவும் சொல்லியிருக்கிறார்' என்றான்.

இந்தத் தடவை ஒருவராவது மேற்கொண்டு சிரிக்கவில்லை. காரணம், கொல்லனான பிலிப் ரெமியை எல்லோரும் நன்கறிவார்கள். உலகத்திலே எந்தக் குழந்தையும் அவனைத் தந்தையாய்ப் பெறுவதற்குப் பெருமை கொள்ளும்.



# மனிதன்

கண்ணன்

நம் பட முதலாளிகளில் பெரும்பாலோர்க்கு அவர்களுடைய படங்களை டைரக்ட் செய்யத் தகுதியும், அனுபவமும் உள்ள டைரக்டர்களைத் தேர்ந்தெடுப்பதின் அவசியத்தில் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. செலவைக் குறைக்கும் நிமித்தமாகவும், தாங்களே டைரக்டர்களாக மாறிவிடுகிறார்கள். இதனுடைய முடிவு நமக்குத் தெரிந்த விஷயம்தான். படத்தில் நடிக்கும் நடிக நடிகையர் பிரபலமானவர்களாக இருந்தால் மட்டும் போதாது. நல்ல டைரக்ஷனால்தான் படம் சோபிக்கிறது என்பதற்குச் சமீபத்தில் வெளியாகியிருக்கும் ஜூபிடர் – லாவண்யா தயாரிப்பான 'மனிதன்' என்னும் சிறந்த சமூகப் படம் ஒரு பெரிய சான்றாகும்.

மனிதனில் முக்கிய பாத்திரங்களாக டி. கே. ஷண்முகம், டி. கே. பகவதி, மாதுரிதேவி, கிருஷ்ணகுமாரி முதலியோர். டி. கே. ஷண்முகம் நாடக மேடையில் பெயர் வாங்கியிருந்தாலும் வெள்ளித் திரையில் இதுவரை அவர் நடித்திருப்பது மிகவும் மட்டமாகவே இருந்திருக்கிறது. ஓர் இரவு, பெண் மனம், முதலிய படங்களில் இவருடைய நடிப்பைப் பார்த்தவர்களுக்கு நன்கு புலப்படும். டி. கே. எஸ். பிரதர்ஸின் மற்றொரு சிறந்த நடிகரான டி. கே. பகவதி வெள்ளித் திரையில் அடிக்கடி தோன்றியதில்லை. மாதுரிதேவி சில படங்களில் நல்ல பெயர் வாங்கியிருந்தும் இதுவரை அவருடைய நடிப்பு மிகவும் உயர்ந்த ரகமாக இருந்ததில்லை. கிருஷ்ணகுமாரி ரஸிகர்களுக்குப் பெரிதும் அறிமுகமாகாதவர். இவர்களை நடிக்கவைத்து ஓர் அற்புதமான சமூக சித்திரத்தைச் சிருஷ்டித்திருக்கும் திறமையும், பெருமையும் டைரக்டர் ராம்நாத் அவர்களுடையது ஆகும்,

மேல் நாடுகளில் ஒரு படம் வெற்றியடைய டைரக்டர்களுடைய உதவியையே பெரிதும் நாடுகிறார்கள். உலகப் பிரசித்தி அடைந்திருக்கும் பல சினிமாப் படங்களைத் தயாரித்துப் பெயர் வாங்கியிருக்கும் இதாலி தேசத்தில் முன் பின் தெரியாத புது நடிகர்களைக் கொண்டே பெரிய படங்களைப் பிரபல டைரக்டர்கள் சிருஷ்டித்திருக்கிறார்கள். உதாரணமாக, உலகப் போட்டிகளில் பல பரிசுகள் பெற்றிருக்கும் இத்தாலியப் படமான 'சைக்கிள் திருடன்' என்னும் படத்தில் டைரக்டர் விட்டோரியா டிசிக்கா என்பவர் புது நடிகர்களையே கையாண்டு இருக்கிறார். அம்மாதிரியே Girl from the Marshes படத்தில் டைரக்டர்கள் புதுமுகங்களை வைத்துக்கொண்டே வெற்றியடைந்திருக்கின்றனர். நம் நாட்டில் இம்முறையில் சிறிதும் நம்பிக்கை இருப்பதாகத் தெரியவில்லை.

மனிதனுடைய கதை ஓர் சமூகத்தில் ஓர் கிளர்ச்சியை எழுப்பிவிட்டிருக்கும் ஓர் கதை. கணவனையே தெய்வமாகக் கருதியும், கற்பையே அணிகலமாக மதித்து வாழும் ஒருத்தி சூழ்நிலையின் சூழ்ச்சியால் க்ஷணநேரம் மனது தடுமாறி, கற்பை இழக்க நேரிட்டால் அவளுக்குப் பிற்காலத்தில் மன்னிப்பும், வாழ்வும் உண்டா? இல்லையா? என்பதுதான் இக் கதை எழுப்பும் பெரிய பிரச்னை. குற்றத்தை மன்னிப்பது மனிதத்தன்மை, கணவன் மனிதனாக இருந்தால், சமூகத்தில் வாழ்பவர்கள் மனிதர்களாக இருந்தால் கணவனும், சமூகமும் இம் மாதிரி நிலையில் உள்ளவர்களை மன்னித்தே தீரவேண்டும் என்பது இக் கதையின் கருத்து. ஆண் பெண் சரிநிகர் சமானம் என்று மதிக்கப்படும் இக்காலத்தில் ஆணுக்கு ஓர் நீதியும், பெண்ணுக்கு ஓர் நீதியுமா? என்று கேட்கிறது. முற்றிலும் மாசற்ற கற்பைப் போற்றுவதையே தன் லக்ஷியமாகக்கொண்ட நம் ஹிந்து சமூகத்தில் பலர் இம் முடிவை வெளிப்படையாக ஆதரிக்க விருப்பமில்லாவிட்டாலும் இவ் வாதத்தின் உண்மையை மனத்திலுள் ஒப்புக்கொள்ளாமல் இருக்கமுடியாது. பலமாக இழுத்துப் போகும் கதையின் முடிவு எனக்குச் சற்று எமாற்றத்தையே அளித்தது. கதையின் ஆசிரியருக்குத் தாம் எடுத்துச்சொல்லும் கருத்தில் முழு நம்பிக்கை இல்லாததுதான் காரணமோ' என்னவோ தெரியவில்லை. கற்பிழந்த பிறகும், அதன் சின்னமான குழந்தையைப் பெற்று வளர்த்து வெகுநாள் ஆனபிறகும், கடைசியாகக் கணவன் தன்னை மன்னித்த பிறகும் தன்னைத்தானே மன்னித்துக் கொள்ள முடியாது என்று கதாநாயகி உயிர்துறப்பது பொருத்தமாக இல்லாததுடன் துயரத்தை அளிப்பதாக இருக்கிறது. கதையின் கருத்தை ஆதரிக்காமல் இருப்பவர்களுக்கு இந்த முடிவு ஒருவாறு ஆறுதல் அளிப்பதாக இருந்தாலும்கூட இது கதையின் நோக்கத்தைச் சிதற அடித்து விடுகிறது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

மனிதன் குற்றம் செய்வதற்குப் பெரும்பாலும் சூழ்நிலையே காரணமாக இருக்கிறது. சதா

வறுமை தவிர வேறு ஒன்றும் கண்டறியாத மக்களுக்குச் சில சமயம் திருடும் மனப்பான்மை ஏற்படுவது சகஜம். ஏன்? அவர்கள் சமூகம் தங்களுக்கு இழைத்திருக்கும் அநீதியை உணர்த்தும் விதத்தில் தங்கள் செய்கை திருடு என்பதாகக்கூட ஒப்புக்கொள்வதில்லை. இவ்வுண்மையை அடிப்படையாகக் கொண்டதுதான் 'ஏழை படும் பாடு' என்னும் படத்தின் கதை. இம்மாதிரியே கற்பு முறையிலிருந்து வழுவுவதற்குச் சூழ்நிலையே பெருங்காரணம் என்பதை இக்கதை வற்புறுத்துகின்றது. இதை அறிவுறுத்துவதற்கு டைரக்டர் ராமநாத் ஒரு நல்ல முறையைக் கையாண்டு இருக்கிறார். தோட்டத்தில் முளைத்திருக்கும் ஒரு கொடி அது படரவேண்டிய இடம் தவறி அங்கு மிங்கும் படர்ந்து அலைவதின் காரணம் அதைக் கவனிக்க ஒரு தோட்டக்காரன் இல்லாததுதான் என்று சொல்லப்படும் ஒரு கட்டத்தைப் புகுத்தியிருக்கிறார். மனிதன் நெறியின் வழியை எவ்வளவு பின்பற்றினாலும் அதிலிருந்து அவன் வழுவாமல் இருப்பதற்குத் தகுந்த சூழ்நிலை வேண்டும். இதற்குமாறான சூழ்நிலையில் மனிதன் நெறிதவறினால் அது மனித இயல்பேயாகும். இத்தகைய குற்றத்தை மன்னித்து, சூழ்நிலையைத் திருத்துவது மனித சமூகத்தின் கடமையாகும்.

கதையில் ஓவியக்கார ராஜன் டாக்டர் சுகுமாரனிடம் தன் வரலாற்றைப் படிப்படியாகத் தெரிவிப்பது ஒரு உணர்ச்சி மிகுந்த கட்டம். எதிரில் இருப்பது கற்பை அழித்த பெண்ணின் கணவன்தான் என்று தெரிந்துகொண்டதும், ராஜன் கைப்பிடிக் கட்டைகளால் தலையில் அடித்துக்கொண்டு ஓடி, படியில் தடுக்கி விழுந்து புரண்டு உருளுவதைக் காண்பிக்கும் கட்டம் உணர்ச்சியின் சிகரத்தை எட்டிப் பிடிப்பதாக இருக்கிறது. படியில் விழுவதைப் பல படங்களில் இருப்பதுபோல் நேரில் காண்பிக்காமல் சப்தத்தின் மூலம் உணர்த்துவது நன்றாக இருக்கிறது. படத்தின் ஒரு முக்கியமான அம்சம் ஹாஸ்ய பாகத்தை டைரக்டர் ராம்நாத் கையாண்டு இருப்பது. வழக்கமாய் நாம் பார்க்கும் காமடியின் கோணங்கி சேஷ்டைகளையும், மட்ட ரகமான பேச்சுகளையும் கொண்ட ஹாஸ்யமாய் இராமல், அந்த அந்தச் சம்பவங்களுக்கு உகந்த ஹாஸ்ய நிலையைச் சூசகமாக எடுத்துக்காட்டி இருப்பது ரஸிகர்கள் விரும்பும் முறையில் இருக்கிறது. முக்கியமாக வேலைக்காரக் கருப்பையா அவனறியாமல் தன் சொற்றொடர்களால் எஜமானைத் திணற அடிப்பது மிகவும் ரஞ்சகமாக இருக்கிறது.

டைரக்டர் ராமநாத் இப்படத்தில் இரண்டு டான்ஸுகளைப் புகுத்தாமல் இருந்திருக்கலாம். இந்த டான்ஸுகள் படத்திற்குத் தேவையில்லாமல் இருப்பதுடன் நன்றாகவும் இல்லை. பல விஷயங்களில் நுண்ணிய கவனத்தைச் செலுத்தியிருக்கும் ராமநாத் இந்த டான்ஸுக்கு ஏன் இடம் கொடுத்தார் என்று தெரியவில்லை.

ஓவியக்கார ராஜன் பல நாள் சாவித்திரியின் வீட்டில் தங்கியிருக்கிறான். அப்பொழுது அங்குப் பல இடங்களில் தொங்கவிடப் பட்டிருக்கும் சாவித்திரியின் கணவனான டாக்டர் சுகுமாரின் படத்தைப பார்த்திராமல் இருக்கக் காரணமில்லை. அப்படியிருக்க டாக்டர் சுகுமாரனிடம் தன் வரலாற்றைச் சொல்லும்போது அவனுடைய அடையாளத்தைத் தெரிந்து கொள்ளும் நிலைமையில் இல்லாதிருப்பது சற்று அசம்பாவிதமாக இருக்கிறது. இவ்வாட்சேபணைகளைத் தவிர்க்கச் சாவித்திரியின் வீட்டில் டாக்டர் சுகுமாரனின் படங்களைக் காண்பிக்காமல் இருந்திருக்கலாம். மேலும் ராஜன் காரில் அகப்பட்டுக்கொண்டபோது தலையில் அடிபட்டதாகக் காண்பிக்கப்படுகிறது. பிறகு அவன் கால்களை வெட்டி எடுக்கப்பட்ட முடவனாகக் காட்சி அளிக்கிறான். முதலிலேயே காலில் அடிபடுவதாகக் காண்பித்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும்.

படத்தில் நடிப்பதற்கு முதற்பரிசு மாதுரி தேவிக்கே உரித்தானது என்பது என்னுடைய கருத்து. வயோதிகக் கணவனுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கும் இள நங்கையின் எண்ணங்களையும் சாகசங்களையும் அவர் நன்கு சித்திரித்திருப்பதுடன், இயற்கையாகவும், மிகை படாமலும், நடித்திருக்கிறார். கெட்ட பெண்களாக வரும் பாகங்களில் நன்கு சோபிக்கும் அவர் இப் படத்தில் கஷ்டமானதொரு குணச்சித்ர பாகத்தை ஏந்தி, பாராட்டும் முறையில் அநாயாசமாக நடித்திருப்பது குறிப்பிடத்தக்கது.

படத்தில் டாக்டர் சுகுமாரனாக வரும் டி. கே. பகவதியினுடைய நடிப்பு ராஜன் பாகத்தில் தோன்றும் டி. கே. ஷண்முகத்தினுடையதைவிட இயற்கையாகவும், சிறந்ததாகவும் இருக்கிறது. டி கே. ஷண்முகத்தின் வழக்கமான 'ஸ்டேஜ்' நடிப்பை டைரக்டர் ராம்நாத் இயன்றவரை மாற்றி இயற்கை மணம் கொண்டதாகச் செய்திருக்கிறார்,

தனது ஆசை மணாளனை மணந்த உடனேயே பிரிந்து, ஏங்கி உருகும் அபலை சாவித்திரியின் தோற்றத்திற்கும், மாசற்ற குணத்திற்கும் ஏற்ப, கிருஷ்ணகுமாரியின் தோற்றமும், நடை உடை பாவனைகளும் அமைந்திருக்கின்றன. ராஜனுடைய சாகசங்களுக்குப் படிப்படியாகத் தன்னை அறியாமலேயே இணங்கி, பிறகு விதியையும், மதியையும் நொந்து, தவிக்கும் உத்தமியின் மனோநிலையை நன்கு சித்திரித்து, பார்ப்போர் மனம் கரையும்வண்ணம் நடித்திருக்கிறார்.

பண்டரிபாய், தம் பாகம் சிறியதாயினும் அதைக் கவர்ச்சிகரமாகச் செய்திருக்கிறார். சாவித்திரியை டாக்டர் சுகுமாரன் தான் மன்னித்துவிடப்போவதாக முடிவு செய்து அவளிடம் தெரிவிக்கும் சமயம் தம்முடைய முக்கிய நோக்கம் நிறைவேறியதில் சரஸா அடைந்த

உணர்ச்சிப் பெருக்கை அழகாகத் தெரியப்படுத்தியிருக்கிறார்.

டி. கே. எஸ். பிரதர்ஸாரின், 'மனிதன்' நாடகத்தில் தோன்றி, ப்ரண்டாக நடித்து, 'ப்ரண்ட் ராமசாமி' என்ற குறிப்புப் பெயருடன் விளங்கும் அவர் இப்படத்திலும் அதே பாகத்தில் வருகிறார். இவர் மற்றப் படங்களில் நடித்திருப்பது சற்று மிகையாகவே இருந்தாலும் 'மனிதனி'ல் ரஸிகர்கள் அனுபவிக்கத்தக்க முறையில் இருப்பதுடன் பேச்சு, நடை, பாவனைகள் யெல்லாம் ஹாஸ்யம் ததும்ப இருக்கின்றன.

ராம்நாத்தின் டைரக்ஷனுடன் சேகரின் ஸெட்டிங்குகள் படத்தின் கவர்ச்சியை அதிகரிக்கச் செய்கின்றன. முக்கியமாகச் சாவித்திரி அடிக்கடி உலாவப்போகும் அவள் வீட்டின் பின் புறத்திலுள்ள நதிக்கரை, கிணறு, ஏற்றம், தோட்டம் குடிசை முதலியன கொண்ட ஸெட் அழகாக் அமைந்திருக்கின்றது.

உயர்ந்த முறையில் எடுக்கப்பட்டிருக்கும் 'மனிதன்' படம் வெற்றியடைய வேண்டிய எல்லா அம்சங்களும் இருக்கின்றன. அது வெற்றி அடைந்தால்தான் தமிழ்ப் பட விமோசனத்திற்கு ஓர் அறிகுறி என்று சொல்லலாம். மட்டரகப் படங்களில் ஊறிப்போன சிலருக்கு உயர்ந்த ரகப் படங்களில் விருப்பம் ஏற்படுவது சற்றுச் சிரமமாக இருக்கலாம். அதனால் படத் தயாரிப்பாளர்கள் மட்ட ரகப் படங்களைத்தான் எடுக்கவேண்டுமென்பது அர்த்தமாகாது. உயர்ந்த ரக படங்கள் எடுப்பதில் வருமானம் சில சமயம் குறைவாக இருந்தபோதிலும் படத்தொழிலும் ஒரு ஸமூக ஸேவை என்ற நோக்கத்தை உற்பத்தியாளர்கள் கடைப்பிடித்து, ஆபாஸமற்ற நல்ல படங்களையே தயாரிக்க முற்படவேண்டுமென்பது என்னுடைய அவா.






'என் அன்புத் தோழி ரங்கத்திற்கு,

உன் கடிதம் வந்து சேர்ந்தது. கல்யாணத்தில் வாழ்த்துச் செய்தி அனுப்பியதின் பின் இப்பொழுதுதான் கடிதமெழுதியிருக்கிறாய். இப்பொழுதாவது எழுத மனம் வந்ததே. அதுவே என் பாக்கியம்தான். காலதாமதத்திற்கு ஏதேதோ சால்சாப்புக்கூறி மழுப்பியிருக்கிறாய். இந்த மட்டும் தோழியின் நினைவு வந்து அவளுக்கும் கடிதம் எழுதவேண்டுமென்று தோன்றியதே, அதற்காக உன்னைப் பாராட்டுகிறேன். ஆனால் அதில் எனது பாக்கியத்தை—எழுத்தாளரைக் கணவனாகப் பெற்ற என் பாக்கியத்தைப்—புகழ்ந்து எழுதியிருந்தாயே! அதைப் படித்தபோது எனக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியாமல் தவிக்கிறேன்.

எழுத்தாளர் அதுவும் பிரபல எழுத்தாளரைக் கணவனாக அடையப் பூர்வத்தில் புண்ணியம் செய்திருக்கவேண்டும் என்று எழுதியிருக்கிறாய், ஒப்புக்கொள்கிறேன்; ஆனால் அந்த வார்த்தை எனக்கு அல்ல. நானும் உன்னைப்போல் குடும்பப் பொறுப்பை மட்டும் கவனித்து வரும் பெண்ணாக இருந்தால் அந்த வார்த்தை எனக்கும் பொருந்தும்.

விவாகம் நிச்சயித்திருந்தபோது எனக்கு வரப் போகும் மணவாளன் எழுத்தாளர் என்றோ பிரபலமானவர் என்றோ யாரும் அறிவிக்கவில்லை. புனைபெயருக்குள் புகுந்திருந்த அவரை யாரும் அறிந்திருக்கவில்லை. இயற்கைப் பெயருடன் பத்திரிகையில் அச்சாகி, விவாகமும் முடிந்து விட்டதென நீயே முகூர்த்தப் பத்திரிகையில் பார்த்திருக்கலாமே.

விவாகத்திற்கு பிறகு ஒரு நாள். காலை நேரம். தபால்காரன் பல தபால்களோடு 'சூர்ய காந்தம்' என்ற பத்திரிகையும் சேர்த்துக் கொடுத்தபோது திடுக்கிட்டு நின்றேன். ஏனென்றால் நான் இதுவரை அந்தப் பத்திரிகைக்கு எந்தக் கதையும் அனுப்பி இருக்கவில்லை. அப்படியிருக்க அந்தப் பத்திரிகை என் வீட்டிற்கு வருவதென்றால்...

விலாசத்தைத் திருப்பிப் பார்த்தேன். 'சுயம் என்ற பெயரிருக்கவே விலாசம் தப்பு எங்களுக்கில்லை.' என்று நான் கூறிக் கொண்டிருக்கும் போது அவர் வந்துவிட்டார்.

'இப்படிக் கொடு; அந்தப் பத்திரிகை எனக்கு வந்தது' என்று கூறிவிட்டு முகத்தில் குறும்புச் சிரிப்புத் தாண்டவமாடக் கையில் பத்திரிகையை பெற்றுக்கொண்டார்.

'அப்படியானால் உங்கள் பெயர்......' வார்த்தையை முடிக்காமல் விழுங்கினேன்.

'சுயம்' எனது புனைபெயர்' என்று கூறிவிட்டு, அப்பால் நகர்ந்தார். என் மனம் ஒரேயடியாக அயர்ந்து விட்டது. அவர் எழுத்தாளராக இருப்பதனால் உனக்கென்ன நஷ்டமென்று நீ நினைக்கலாம். சாதாரண எழுத்தாளராக இருந்தால் நானும் அப்படித்தான் நினைத்திருப்பேன். ஆனால் 'பிரபல' என்ற அடைமொழியைத் தாங்கி வருபவரை அப்படி நினைத்து விட முடியுமா? இத்தனை வருஷமாகப் பாடுபட்டு இப்பொழுதுதான் காலே அரைக்கால் ஆசிரியையாக ஆகியிருந்த எனக்குப் பிரபல எழுத்தாளரின் முன் தலைகுனிவு ஏற்படுவதில் அதியசமென்ன இருக்கிறது?

இதுவரை நான் எழுதி வந்த எனது அரையே அரைக்கால் கதைகளைப் பிரமாதமாக நினைத்துக் கொண்டிருந்த எனக்கு அந்த நிமிஷமுதல் நாம் இனி பேனா பிடிக்கவே லாயக்கில்லை என்று தோன்றிவிட்டது. ஆனால் பழக்க தோஷம் காரணமாக அத்தனை லகுவில் பேனாவையும் பேப்பரையும் மறந்து விட முடியாமல் நான் திண்டாடிய நிலையை எப்படி வர்ணிப்பது?

அந்தச் சம்பவம் என் மனதில் பெரும் போராட்டத்தைக் கிளப்பி விட்டிருந்தது. எனக்குத்தான் அந்நிலை அவர் மட்டில் அந்தச் சம்பவம் எவ்வித மாறுதலையும் அளிப்பதாக இல்லை. வழக்கம் போல் காலை மாலை ஆபீஸ் செல்வதும் ஓய்வு நேரங்களில் உட்கார்ந்து கதைகள் எழுதுவதுமாக அவர் பொழுது போய்க் கொண்டிருந்தது.

நான் கதைகள் எழுதி வந்தது அவருக்குத் தெரியுமோ தெரியாதோ என்ற சந்தேகம் எழுந்துகொண்டேயிருந்தது. தெரிந்திருந்தால் இதுவரை அதுபற்றி ஏதாவது கூறியிருக்க மாட்டாரா.........? என்றெண்ணம் தோன்றுவ துண்டு. எதற்கும் நாமாகவே தெரியப்படுத்திப் பார்க்கலாமென்று பேச்சுக் கொடுத்தேன்.

'என் கதைகளைப் படித்திருக்கிறீர்களோ......?' ஆவல், பயம், வெட்கம், இத்தனையும் சூழ்ந் தெழுந்த அந்தக் கேள்வியை அவர் லட்சியம் செய்ததாகவே யில்லை.

'படித்திருக்கிறேன்......' என்று அசுவாரஸ்ய மாகக் கூறிவிட்டுத் தம் வேலையில் முனைந்து விட்டார். அவர் அப்படிக் கூறியது எனக்கு முகத்தில் அடித்தது போலிருந்தது.

'படித்திருக்கிறேன்' என்று அவர் கூறிய விதம், என்னைப் போன்ற பிரபலமானவர்கள் படிக்க இந்தக் கதைகளெல்லாம் தகுதியா என்று கேட்பது போலிருந்தது.

அப்போதுதான் என் மனதில் 'இருந்திருந்து எழுத்தாளரைக் கணவராக ஏன் அடைந்தோம். அதுவும் பிரபலமானவரை' என்ற எண்ணம் விதையூன்றத் தொடங்கியது. நீயே சொல்லு. இதே இடத்தில் எழுத்துலகில் இல்லாத வேறு தொழில் செய்யும் கணவனாயிருந்தால் தன் மனைவி எழுதிய கதை என்பதைக் கேட்டபோது எத்தனை ஆர்வத்தோடு கேட்பான். எத்தனை பெருமையுடன் அவைகளைப் பாராட்டுவான். இதையெல்லாம் நினைத்துப் பார்த்தபோது எனக்கு அந்த எண்ணம் தோன்றியதில் தவ றொன்றுமில்லையல்லவா?

என்னிடம் ஒரு பழக்கம் உண்டென்பது உனக்கே தெரியும். நான் ஏதாவது கதைகள் எழுதினால் முதலில் யாரிடமாவது கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொல்லுவேன். அவர்கள் படித்து, திருப்தி அடைந்து பத்திரிகைக்கு அனுப்பலாமென்று சொன்னால்தான் அனுப்பு வேன் என்பதும் உனக்குத் தெரியும். உன்னிடம் கூட எத்தனையோ கதைகளைக் கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொல்லியிருக்கிறேன். உன் அபிப்பிராயத்திற்குப் பிறகு பத்திரிகைக்கு அனுப்பியிருக்கிறேன்.

இங்கு வந்ததின் பிறகு ஒரு கதை எழுதி முடித்திருந்தேன். அதை யாராவது அபிப்பிராயம் கூறுமுன் பத்திரிகைக்கு அனுப்புவது வழக்கமில்லை யாகையால் அவரிடம் கொடுத்து படிக்கச் சொன்னேன். அதற்கு அவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா?

'சரிதான் போ. எனது வேலையே தலைக்கு மேல் நிற்கிறது, அதை முடிக்கவே பொழுது அகப்படவில்லை. கிடைக்கும் சிறிது பொழுதை யும் வியர்த்தமாக்க யோசனையா?' என்று கூறிவிட்டுத் தலைநிமிராமலே எழுதுவதில் முனைந்துவிட்டார்.

அவர் சொன்னை பொழுது என் கதையைப் படிப்பதினால் வியர்த்தமாகி விடுமாம். எப்படி யிருக்கும் எனக்கு அவர் பேச்சு? எனக்கு மிகுந்த வேதனை அளித்ததென்பதைக் கூறவும் வேண் டுமா?

எழுதுவதற்காகப் பேனாவைக் கையிலெடுத்தால் எப்பொழுதும் எனக்கு இந்த நினைவுதான். இந்தப் போராட்டத்தைத் தவிர்க்க எழுத்தாளர் அல்லாதவரை மணந்திருக்க வேண்டும். அல்லது அவர் எழுத்தாளர் என்று தெரிந்துகொண்ட பின் எழுதுவதை நிறுத்தியிருக்க வேண்டும். முன்னது அறியாமல் நடந்துவிட்ட விஷயம். இனி அதை மாற்ற முடியாது. ஆனால் பின்னது பழக்க தோஷம் எழுதாமலிருக்க முடியவில்லை.

அன்று கூறிய அலட்சிய மொழிக்குப் பிறகு அவருக்குத் தெரிய எழுதுவதில்லை. அவர் ஆபீஸ் சென்றபின் எழுதி முடிப்பேன். நானே படித் துப் பார்த்து மகிழ்ந்து கொள்வேன். எனக்காக உயர்வானவை என்று தோன்றுவதை மட்டும் பத்திரிகைக்கு அவ்வப்போது அனுப்பி வைப் பேன்.

இவ்வளவெல்லாம் எழுதியவள் அவரது உயரிய குணங்களைப்பற்றி எழுத மறந்து விட்டேனே, எனது எழுத்தைப் புகழ்வதில்லையே தவிர என் அழகைப் பற்றியும் என் சமையலைப்பற்றியும் அடிக்கொருதரம் புகழாமல் இருக்க மாட்டார். அதிலும் அவர் மனதிற்குப் பிடித்தமான சமையல் செய்து விட்டால் அன்று முழுவதும் அவர் புகழ் மொழியில் அகப்பட்டுத் திணறவேண்டியதுதான். அதேபோல் நான் எழுதும் கதைகளை அவர்

படிப்பதில்லையே தவிர, என்னை எழுத வேண்டாமென்றோ ஏன் எழுதினாய் என்றோ கேட்பதில்லை.

சமையலுக்குச் சற்று நேரமாகிவிட்டால் 'என்ன இன்றைக்கு ஏதாவது எழுதிக் கொண்டிருந்தாயாக்கும்' என்று மட்டும் கேட்பார். எழுதிக்கொண்டிருந்ததினால் சமையலுக்கு நேரமாகிவிட்டதென்பதற்காகக் கோபித்தது கிடையாது.

இந்த மட்டும் நேரமானதற்காகக் திட்டாமல் விட்டு வைத்தாரே என்று நன்றி தெரிவிக்கும் எண்ணம் எனக்குத் தோன்றுவதில்லை. அதற்குப் பதிலாக எழுத்தையும் கவனித்துக் கொண்டு சமையலையும் முடித்த என் திறனுக்காகப் பாராட்டுக் கிடைக்கவில்லையே என்பதை நினைத்து ஏங்கும் என் மனம்.

நானும் அவரைப் போலவே அவர் கொண்டிருக்கும் தொழிலையே கொண்டிருக்கிறேன். கணவன் மனைவி இருவரும் ஒரே தொழிலைக் கொண்டிருப்பதால் எங்கள் இடையே தொழில் போட்டி குறுக்கிடாதென்பது என்ன உறுதி? எழுத்தாளர்களுள் ஒற்றுமை மனப்பான்மைதான் முக்கியம், இருவரும் ஒரே இடத்தில் வசிக்க நேர்ந்தால்.........

நீ சொல்லலாம். 'நீ அவரோடு போட்டிக்கு நிற்காமல் சற்றுத் தாழ்ந்து போனால் என்ன? குறைந்தா போய் விடுவாய்' என்று கேட்பாய். அப்படியே தாழ்ந்து போகிறேன் என்று வைத்துக்கொள். ஆனால் அவர் மனம் என்ன நிலையில் இருக்குமோ, ஏதடா சனியன் நமக் கடங்கிய மனைவியே நமக்குப் போட்டியாகக் குறுக்கிடுகிறாளே என்று நினைக்கலாம் அல்லவா?

உதாரணத்திற்கு வேண்டுமானால் ஒரு சம்பவத்தைக் குறிப்பிடுகிறேன். 'தீந்தமிழ்' பத்திரிகையில் ஒரு தலைப்பைக் கொடுத்து இதற்கு உரிய சிறந்த கதை எழுதி அனுப்புவோருக்கு இனாம் ரூபாய் 100 ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தத் தலைப்புக்குகந்த நல்ல கதையொன்று என் மனதில் உருவகம் ஆகியிருந்தது. நான் அதற்கு எழுதி அனுப்பட்டுமா என்று கேட்டேன்.

'பேஷாக அனுப்பேன்' என்று கூறிவிட்டார்.

அவர் கூறிய விதத்தில் தாராளமாக எழுதி அனுப்பேன். ஆனால் பரிசு கிடைப்பதென்னவோ என் கதைக்குத்தான். என்று சவால் விடுவதின் அர்த்தம் தொனித்ததை உணராமலில்லை.

அவர் பேச்சினால் என் மனம் அதிர்ந்து போயிருந்தாலும் எப்படியோ ஒருவகையாக எழுதி அனுப்பிவிட்டேன். அவரும் எழுதி அனுப்பியிருந்தார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

போட்டியின் முடிவைக் குறித்து வெகு ஆவலுடன் காத்திருந்தேன். முடிவுத் தேதியும் வந்தது. வழக்கம்போல் பத்திரிகைக்காரன் 'தீந்தமிழை'க் கொடுத்துச் சென்றான்.

ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு பிரித்துப் பார்த்தோம், என்ன அதிசயத்தைச் சொல்ல! எனது கதையின் பெயர் போட்டியில் தேர்ந்தெடுத்து, கதையாகப் பொறிக்கப்பட்டு இருந்ததைக் கண்டதும் என் மனம் துள்ளிய துள்ளலையும் அவர் முகம் கருகிய விதத்தையும் எப்படி வருணிப்பேன்?

'உன் கதை அனுப்பியிருக்காவிட்டால் பரிசு நிச்சயம் எனக்குத்தான் கிடைத்திருக்கும் என்று அவர் கூறியதும் நாம் அனுப்பாமலாவது இருந்தோம் இல்லையே என்றுவருந்தத்தொடங்கினேன். அதோடு நிறுத்தியிருந்தாலும் பரவாயில்லை.

'பெண்ணின் பெயராக இருந்ததினால் ஆசிரியர் படித்துப் பாராமலே தேர்ந்தெடுத்தும் இருக்கலாம்.'

'இந்தச் சுடுசொல்லை எப்படித் தாங்கமுடியும்? அவர் என்னை மட்டும் சுடுவதாயிருந்தால் பரவாயில்லை. தேர்ந்தெடுத்த ஆசிரியரின் பெயருக்கே அல்லவா இழுக்கு வைத்துவிட்டார். இதே வார்த்தையை அன்னியர் கூறியிருந்தால் அத்தனை புண்பட்டிருக்காது மனம். கட்டிய கணவனே அதுவும் பிரபல எழுத்தாளரே அப்படிக் கூறுவது எப்படிச் சகிக்கமுடியும்? இந் நிலையில் எங்கள் தாம்பத்திய வாழ்வு எத்தனை இன்பத்தில் மிதந்து செல்லும் என்பதை நீயே யூகித்துக் கொள். இந்தக் கடிதத்தைப் படித்த பிறகாவது என் பாக்கியத்தைப் புகழ்ந்து எழுதமாட்டாயல்லவா?

இப்படிக்கு
நிர்மலா.



*  *  *

திருச்சி
28—3—53.

ஆருயிர்த் தோழி ரங்கத்திற்கு,

உன்னிடமிருந்து பதில் வருவதற்கு முன் மீண்டும் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். எனது இரண்டாவது கடிதத்தைக் கண்டதும் ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கிவிடப் போகிறாய். அதனுள் அடங்கிய விஷயத்தைப் படித்தாலோ அதைவிட ஆச்சரியக் கடலில் மூழ்கித் திக்கு முக்காடப் போகிறாய். விஷயத்தைச் சொல்லாமல் ஏதேதோ எழுதிக்கொண்டிருக்கிறேனே.

முன்பு ஒரு கடிதத்தில் ஒரு விஷயம் எழுதியிருந்தாயல்லவா, எழுத்தாளரைக் கணவனாக அடைந்த பாக்கியத்தைக் குறித்து? அதற்கு நான் மறுப்புக் கூறி எழுதியிருந்த கடிதத்தைப் பார்த்த பின்பு உன் மனம் என் நிலை அடைந்திருக்குமோ அறியேன். அதற்குள் மீண்டும் ஒரு கடிதம் என் அபிப்பிராயத்தைத் திருத்தி உன் அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளும் நிலையிலிருக்கும் என் உள்ளத்தை உடனே உனக்கு அறிவித்து விட்டேன். திடீரென்று எப்படி இந்த மன மாறுதல் ஏற்பட்டதென்று நினைக்கலாம். சொல்லுகிறேன் கேள்.

நாலைந்து தினங்களுக்கு முன் நானும் சில பெண்களும் மலைக்கோட்டைக் கோயிலுக்குப் போயிருந்தோம், பல பெண்களாகக் கூடியிருந்ததால் தமாஷாக உச்சி மலை வரை போய்வரத் தொடங்கினோம். இரண்டு பெண்கள் சேர்ந்தாலே வம்பு ஓயாது என்பார்கள். ஐந்தாறு பெண்கள் கூடினால் கேட்கவும் வேண்டுமா? ஒரே தமாஷாகச் சிரிப்பும் கும்மாளமுமாய்ப் படியேறும் சிரமம் தோன்றாதபடி உற்சாகமாய் வழி நடந்தோம்.

நாலைந்து திருப்பங்களுக்கு அப்புறம் இடையிடையே தோன்றும் வானவெளிகளில் சற்றுத் தங்கி, களைப்பாறுவதும் மீண்டும் படியேறுவதுமாகத் தாயுமானவர் கோயிலை அடைந்தோம். வலமாக வந்தோம் அந்தக் கோயிலையும் சுற்றிப் பார்த்து விட்டுப் போகலாமென்று நுழைந்தோம். கோயிலின் நாற்புறமும் பெரிய ஜன்னல் போலமைந்த திறந்த வெளியின் மூலம் ஊரைச்சுற்றிப் பார்த்தால் அந்தக் காட்சி கண்ணுக்கு எத்தனை ரம்மியமாக இருக்கிறது.

பிரமாண்டமான மாளிகைகளெல்லாம் சிறிய சிறிய குடில்கள் போலவும் பெரிய பெரிய நீண்ட ரஸ்தாக்களெல்லாம் சிறிய சந்து போல் வளைந்து நெளிந்து செல்லும் காட்சியும் பார்க்கப் பார்க்கப் பரவசம்.

அதன் மற்றொரு புறம் நின்று பார்த்தால் பல மைல்களுக்கு அப்பால் இருக்கும் ஸ்ரீரங்கமும் கொள்ளிடமும் கண் கொள்ளாக் காட்சியாக அழகுதரும்.

இப்படியே ஒவ்வொரு காட்சியாக ரசித்துச் சுவைத்து, கோவிலைச் சுற்றிப் பார்த்து விட்டு மீண்டும் பாதைக்கு வந்து உச்சி மலைக்குப் படியேறினோம். கிட்டத் தட்ட கடைசி மலைக்கு வந்து விட்டோம். ஒரு தரம் ஊரைத் திரும்பிப் பார்த்தால் தலை சுற்றி மயக்கம் வந்து விடுமோ என்னும் நிலையில் ஜாக்கிரதையாக நடந்து கொண்டிருந்தோம்.

எங்களுக்கு முன்பே பிள்ளையார் தெரிசனம் முடித்துவிட்டு இரண்டொரு பெண்கள் உச்சியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தனர். யாரோ என்று அசிரத்தையாக அவர்களைக் கடந்து சென்று கொண்டிருந்த போது எங்களோடு வந்த விமலா எதிரே வந்த பெண்ணிடம் அறிமுகம் ஆனவள் போல் பேசிக் கொண்டிருந்தாள். அவர்களுள் ஒரு பெண்ணை எனக்கு அறிமுகப்படுத்தி, 'நிர்மலா, இவள் உன் இனத்தைச் சேர்ந்தவள். பத்திரிகைக்குக் கதை கட்டுரை எழுத ஆரம்பித்திருக்கிறாள்' என்று எனக்கு அறிமுகப்படுத்திவிட்டு என்னை அவளுக்கு அறிமுகப்படுத்தினாள்.

விமலா குறிப்பிட்டபடி ஆரம்பதிசையானபடியால் எனக்கு அவளைப்பற்றி அதிகம் தெரிந்து கொண்டிருக்க மார்க்கமில்லை. ஆனால் அவள் என்னை நன்கு தெரிந்து வைத்திருக்கிறாள் என்பது அவள் பேச்சிலிருந்து தெரிந்தது. என்னைப்பற்றி விமலா கூறியதும் என்னோடு பேசப் பழகத் தான் விரும்புவதாகவும் அனுமதி அளித்தால் நாளை என் இருப்பிடத்திற்கு வர விரும்புவதாகவும் கூறினாள்.

'ஆசையோடு வரவேற்கிறேன்' என்று கூறிவிட்டு, நேரமாகிவிட்டபடியால் நிற்க முடியாமல் வழி நடந்தோம்.

என்னோடு வந்தவர்கள் மலையின் உச்சியிலிருந்தபடி நாற்புறமும் தெரியும் நகரத்தின் அழகை வர்ணிப்பதிலும், பிள்ளையார் அத்தனை உச்சியில் வந்து தங்கியிருப்பதின் காரணம் தனக்கே தெரிந்ததைப் போல் வர்ணிக்கும் காமாட்சியின் பேச்சை ரஸிப்பதிலும் வேடிக்கையாகப் பொழுதைப் போக்கினர். என் மனமோ மறுநாள் சந்திப்பதாகக் கூறிய உறையூர் சகோதரியின்பால் பூராவாய் லயித்துப் போயிருந்தது.

மறுதினம், சொன்னபடியே வந்து விட்டாள் ஜனதா. இதுதான் அந்தச் சகோதரியின் பெயர் என்பதை அவள் பேனாவில் பொறித்திருந்த பெயரிலிருந்து கண்டு பிடித்து விட்டேன்.

உங்களைச் சந்திக்க வேண்டுமென்று வெகு நாட்களாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். இப்பொழுதுதான் சந்தர்ப்பம் வாய்த்தது என்று

தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டாள். எழுத்தாள சகோதரிகளைக் காணுவதில் எனக்கு அளவு கடந்த ஆசையென்று என் எண்ணத்தைத் தெரிவித்தபோது அவள் வதனத்தில் திருப்தி நிலவுவதைக் கண்டேன். வரவேற்பு எப்படி இருக்குமோ என்று நினைத்து வந்த இடத்தில் சுமுகமான வரவேற்புக் கிடைத்தால் திருப்திக்குக் கேட்பானேன். சில மணி அவகாசம் பேசிக் கொண்டிருந்ததின்பின் அவள் கணவனது தொழிலைப்பற்றி அக்கரையோடு விசாரித்தேன்.

'அந்த விஷயத்தில் நீங்கள் பாக்யம்செய்தவர். கள். உங்கள் கணவரும் எழுத்தாளராக இருப்பதினால் உங்கள் எழுத்துக்கு ஒருவித இடையூறும் செய்யமாட்டார். என் வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறீர்கள்?

என் கணவர் வியாபாரி. அவர் ஒவ்வொரு நிமிஷத்தையும் பணமாக மாற்றும் தொழிலில் போக்குபவராகையால் கதை கட்டுரைகளைப் பற்றி அவர் அறிந்திருக்கவே நியாயமில்லை. புஸ்தகங்களுக்காகப் போடும் பணத்தை வியாபாரத்தில் போட்டால் அத்தனைக்கத்தனை லாபம் சம்பாதிக்கலாமே என்று நினைப்பவர் என் எழுத்தை எப்படி ரஸிப்பார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

புஸ்தக வாசனையே அறியாதவரோடு குடித்தனம் செய்யும் எனக்குமட்டும் எங்கிருந்து வந்தது இந்த எழுத்துப் பயித்தியம் என்று நீங்கள் அதிசயிக்கலாம்.

பக்கத்து வீட்டிற்கு லைபரெரியிலிருந்து பல புஸ்தகங்கள் வரும். பொழுது போகாத நேரங்களிலும் மனம் ஓய்ந்த நேரங்களிலும் இரவலாகச் சற்று வாங்கிப் படிப்பேன்.

நான் புஸ்தகம் படிப்பது தெரிந்தாலே வீடு நிர்தூளிபடும். அதற்காக அவர் இல்லாத நேரங்களில் படிப்பேன். படிக்கப் படிக்க எனக்கும் அதுமாதிரி எழுத வேண்டும் என்ற ஆவல் எப்படியோ பற்றிக் கொண்டு விட்டது. அதுதான் பூர்வஜன்ம வாசனை போலும். ஏதோ ஒன்றிரண்டு எழுதி, பத்திரிகையிலும் வந்துவிடவே என் ஆர்வம் மேலும் தூண்டப்பட்டு நிற்கிறது. எப்படியோ உங்களைப் போன்றவர்கள் ஆசீர்வாதத்தால் எனக்கும் நிறைய எழுத வேண்டுமென்ற ஆவல்' என்று கூறி முடித்தாள்.

'தன் திறமையால் எழுதி முன்னுக்கு வருவதற்குப் பிறர் ஆசீர்வாதம்என்று வீண்பழி போடாதீர்கள். எனக்குச் சிறு சந்தேகம்' என்றேன்.

'புஸ்தகம் படிப்பதற்கே தடையுத்தரவு போடுகிறவர் நீங்கள் பத்திரிகைகளுக்கு எழுதுவதை எப்படிச் சகித்துக் கொண்டு இருக்கிறார் என்று தானே கேட்கப் போகிறீர்கள்?'

'அதைத்தான் கேட்க நினைத்தேன்'

'படிக்க யார் புஸ்தகம் கொடுத்து உதவுகிறார்களோ, அவர்கள்தான் இதற்கும் உதவுகிறார்கள்.

'புரியவில்லையே' என்றேன்.

பக்கத்து வீட்டுப் பெண் ஜனதாவின் பெயரில் ஒளிந்துகொண்டு அவள் வீட்டு விலாசத்தின் மூலம் பத்திரிகையில் நடமாடி வருகிறேன். இந் நிலையில் என் எழுத்து எத்தனை தூரம் முன்னுக்கு வருமோ அறியேன்' என்று தனது குறையைக்கூறி நிறுத்தினாள்.

எப்படியிருக்கும் என் மன நிலை. ஜனதாவோடு என்னை ஒப்பிட்டுப் பார்த்தால் என் கவலை அர்த்தமற்றது என்று தோன்றியதில் அதிசயமொன்றுமில்லையல்லவா? என் கணவர் பிரமாதமாக என்னைத் தூக்கிவைத்துப் புகழவில்லை என்று நான் நினைத்திருந்த என் எண்ணம் அந்த நிமிஷமே சுக்கு நூறாக நொறுங்கிவிட்டது. இந்தமட்டும் ஜனதாவின் கணவரைப்போல் இடையூறு செய்யாதிருக்கிறாரே அதுவே பெரிய உதவியல்லவா என்று நினைத்து நான் திருந்திக் கொண்டிருக்கும் சமயம் அவரே வந்துவிட்டார்.

'இந்த வாரம் உனது கதைகள் சேர்ந்தாற்போல் நாலைந்து பத்திரிகைகளில் வந்திருக்கிறதே' என்ற அவரது வார்த்தைகளால் என்னை உற்சாகப் படுத்தும் விதம் கூறிக்கொண்டே வந்து சேர்ந்தார்.

'எல்லாம் உங்களை அடைந்த பாக்கியம்தான்' என்று சொல்வதைத் தவிர வேறு என்ன கூறியிருக்கமுடியும்?

ஜனதா என்னிடம் விடைபெற்றுச் செல்லும்போது 'எழுத்தாளரைக் கணவனாக அடைந்த உங்கள் பாக்கியமே பாக்கியம்' என்று கூறிச் சென்ற வாக்கியத்தை அப்படியே ஒப்புக்கொண்டது என் மனம். அதை உடனே உனக்கு அறிவித்தால்தான் என் மனம் அமைதியுறும் போலிருக்கவே அப்படியே எழுதிவிட்டேன்.

இனி உனக்கு என்ன எழுதுவதென்றே எனக்குப் புரியவில்லை. நேரில் வந்தால் பேசிக்கொள்ளலாம். வருகிறாயா? எப்பொழுது வருகிறாய்? வருகிற தேதியைக் குறித்து அனுப்பினால் எழுத்தாளர் தம்பதிகள் உன்னை வரவேற்க ஸ்டேஷனுக்கு வருவார்கள், அவசியம் எழுது.

இப்படிக்கு,
'நிர்மலா சுயம்'



# சூரியன் மறைந்தது!



இளம்பாரதி

அடேயப்பா! உண்மையை நிலைநாட்ட எத்தனை எத்தனை அல்லல்கள்! அந்த அல்லல்களையெல்லாம் இன்பமாக ஏற்றுக்கொண்டிருக்காவிட்டால் உண்மைக்கு இவ்வளவு வெற்றிகிட்டியிருக்குமா?

இன்பத்தை மையமாகக் கொண்ட அரசவாழ்வு இன்பத்திற்கும் எழிலுக்கும் இலக்கணம் கூறும் அருமை மனைவி யசோதரா; தன் முல்லைச் சிரிப்பால் வாழ்வை இலக்கியமாக்கும் மைந்தன் ராகுலன் —இந்த அரும்பெரும் பொருள்களையெல்லாம் துறந்துவிட்டு, இரவோடு இரவாகக் கானகத்தே அடைந்து, அங்கேயே எண்ணிறந்த நாட்களைத் தவத்தில் கழித்ததன் விளைவு?

சித்தார்த்தர் புத்தராக மாறியாகிவிட்டது!

அனுபவ ஏடுகளைப் புரட்டிப்பார்த்து நல்வாழ்விற்கான சித்தாந்தங்களை உலகோருக்கு எடுத்துச் சொன்னதும் முதலில் அவற்றையெல்லாம் நம்பிவிட உலகத்தாருக்குத் துணிவு இல்லை—ஞானமும் இல்லை, ஆனால் இடைவிடாத கடும உழைப்பிற்குப் பிறகு இப்போதுதான் புதுக் கொள்கைகளை உணர ஆரம்பித்திருக்கிறது இந்த உலகம்.

* * *

வேசாலி நகரத்திற்கு அடுத்தாற்போலுள்ள ஆசிரமத்தில் தன்னந்தனியாக உட்கார்ந்துகொண்டு தம் பழைய நாட்களைப்பற்றிச் சிந்தனையை செலுத்தியிருந்த புத்தர் தம் பிரதம சிஷ்யனான ஆனந்தன் குடிசைக்குள் நுழைந்த காலடிச் சப்தம் கேட்டுத் தலையைச் சிறிது நிமிர்த்திப் பார்த்தார். ஆனந்தன் அவருக்கு முன் வந்து நின்றான்.

"என்ன ஆனந்தா, ஏதோ சொல்வதற்காக வந்திருக்கிறாய் போலிருக்கிறதே?"

"ஆமாம், முக்கியமான விஷயம். இன்றைக்குப் புதிதாகப் பதினைந்து பேர் நம் ஆசிரமத்தில் சேர்ந்திருக்கிறார்கள். வேசாலி நகரத்தில் பஞ்சகௌரியைத் துன்புறுத்திக் கொடுமை செய்தாரே அந்த உழவுக்கார பிராமணரே மனம் திருந்தி ஆசிரமத்தில் சேர வந்திருக்கிறார்."

"பார்த்தாயா ஆனந்தா! முதலில் நாம் எந்தக் காரியத்தை நச்சாக வெறுக்கிறோமோ அதையே பின்னால் காலவெள்ளத்தைக் கடந்து நோக்கும் போது அமுதமாக மாறிவிடுகிறது. அந்தப் பிராமணர் பஞ்சகௌரியை அப்படி அடித்து இம்சை செய்திருக்காவிட்டால் அவருடைய மனம் இப்படி மாறியிருக்குமா? பஞ்சகௌரி அடிபட்டுக் கிடந்தபோது நீ என்னவோ அழுதழுது கலங்கிக் கிடந்தாயே, இப்போது உனக்கு எவ்வளவு மகிழ்ச்சி! அதனால்தான் ஆனந்தா, நேருகின்ற தோல்வியை எல்லாம் நாம் நினைத்து, சோகத்தை மறைத்து, சிரிப்பை வரவழைத்துக் கொள்ளவேண்டும்.........'

'இன்னொன்றுகூட உங்களிடம் சொல்ல வேண்டும்' குருஜி! அம்பாபாலி என்ற தாசி உங்களைச் சந்திக்க விரும்புகிறாள். இங்கே அழைத்து வரட்டுமா?'

'இதிலென்ன கேள்வி, ஆனந்தா? யாராக இருந்தாலும் அவர்களுடைய மனதிற்கு விரோதமாக நாம் போகலாமா? உடனே உள்ளே அழைத்து வா!'

'இதோ அழைத்து வருகிறேன்!'

'ஆனந்தா, புதிதாக வந்தவர்களுக்கு நம் கொள்கைகளை விளக்கித் தரும்படி தம்ம சேனாபதியிடம் சொல்லிவிட்டு வா'

'சொல்லிவிடுகிறேன், குருஜி!'

ஆசிரமத்து வாசலில் புதிதாக ஆசிரமத்தைத் தேடிவந்த பதினைந்து ஆண்கள் நின்றுகொண்

டிருந்தார்கள். அம்பாபாலி ஒரு ஓரத்தில் நின்று கொண்டிருந்தாள். மாமரத்து நிழலில் சிஷ்யர்களுக்கு வேதசிட்சை அளித்துக்கொண்டிருந்த தம்ம சேனபதியிடம் புதிதாக வந்திருந்த பதினைந்து பேரை அழைத்துச் சென்று உட்கார வைத்தான், பின்பு திரும்பிவந்து அம்பாபாலியைப் புத்தரிடம் அழைத்துச் சென்றான் ஆனந்தன்.

வண்ணப் புடவை சலசலக்க, வாசனைத்தைலம் மணத்தை எங்கும் பரப்ப, பொன் நகைகள் மின்னிட அம்பாபாலி புத்தரின் கால்களில் விழுந்து வணங்கினாள்.

'ஸ்வாமி வாழ்க்கையில் தாசியாக இருந்து கொண்டு புனிதரான உங்களைப் பார்க்க வந்ததற்கு மன்னிக்கவேண்டும். ஆனால்.........'

'அதனாலென்ன? பரம்பரையாகவே உங்கள் குடும்பம் தாசிக் குடும்பமா; உன்தாய் உன்னைப் போலத்தானா?'

'இல்லை பிரபு! என்தாய் முதலில் மாம்பழம் விற்று நேர்மையாக வாழ்ந்து வந்தவள் தான். அப்புறம் சந்தர்ப்பவசத்தில் தாசித் தொழிலை மேற்கொண்டாள். அந்தச்சூழ்நிலையில் நானும் தாசியாகவே மாறிவிட்டேன். அந்தப் பாபத்தைக் கழுவிக் கொள்ளத்தான் உங்களை இப்போது தரிசிக்க வந்திருக்கிறேன்.'

'என்னைப் பார்த்துவிட்டுப் போனால்மட்டும் உன் பாபங்களுக்கு விமோசனம் கிடைத்து விடுமா?'

'கிடைக்காதுதான், பிரபு! தாங்களும், தங்கள் சிஷ்யர்களும் இந்த ஆசிரமத்திற்கு வந்திருப்பதாக அயலார் சொன்னார்கள். முதலில் உங்கள் கூட்டத்துடனே ஒருசிஷ்யையாக மாறிவிடத் தான் தீர்மானித்தேன். ஆனால் என்தாய் என் திட்டத்தைத் தடுத்துவிட்டாள். அவளது பேச்சை மீறமுடியாத நிலையில் இருக்கிறேன். புண்ணியமூர்த்தியான உங்கள் திருமுகத்தைப் பார்த்தாலே பாபம் நீங்கிவிடுமென்று அம்மா சொன்னாள்; அயலாரும் சொன்னார்கள். ஆகவே வந்திருக்கிறேன்!'

'அம்பா! உன்குற்றத்தை நீ நெஞ்சில் உணர்ந்துவிட்டாயே, ஆகவே உன்பாபத்தைக் கரைத்துவிடும். திரும்பிப்போய் உன் புது வாழ்வை இன்றிலிருந்தேனும் துவங்கு, அது போதும்!'

'இன்னொரு விஷயம், ஸ்வாமி! நாளைக்கு என் வீட்டில் ஒரு விருந்து உங்களுக்காக நடத்தப் போகிறேன். அதற்கு நீங்களும் உங்களைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் கட்டாயம் வரவேண்டும். பக்தர்களுக்குப் பணிவிடை செய்தால் பாதிப் பாபம் நீங்கிவிடுமென்று உலகத்தில் சொல்வதில்லையா?'

'என்ன! வாழ்வு முழுதும் தாசித்தொழில் செய்து பாபத்தை மூட்டையாகக் கட்டிக் கொண்டு பாபத்தின் உருவாகவே மாறிவிட்ட அம்பாபாலியின் வீட்டிலா புத்த பகவானுக்கு விருந்து? இதை அவர் ஒப்புக்கொள்வாரென்று இவளுக்கு நெஞ்சிலே தைரியம் எப்படிப் பிறந்தது? இந்தப் பாபவசனங்களைக் கேட்கப் புத்தரென்ன சாதாரண மனிதரா—அவர் தூய உள்ளம் படைத்த ஞானியாயிற்றே! எப்படி அவளது வேண்டுகோளுக்கு அவர் இணங்குவார்?............'



இப்படி இன்னும் என்னவெல்லாமோ நினைத்து அதிர்ச்சி அடைந்திருந்தான் ஆனந்தன். அம்பாபாலியைப் பார்க்கவே அவனுக்குக் கூச்சமாக இருந்தது. புத்தரின் உத்தரவு அடுத்து என்ன பிறக்குமென்று ஆவலோடு அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

'சரி, நாங்கள் வருகிறோம் அம்பா!'

அம்பாபாலிக்கு மகிழ்ச்சி துள்ளி விளையாடிற்று. இதைக்கேட்டதும் அவளது முகம் ஒரு தனி ஒளியைப் பெற்றது. ஆனால் ஆனந்தன்?.........

'தன் குருவா இப்படி மாறிவிட்டார்? ஒரு வேளை அவளது அழகுதான் அவரைக் கெடுத்து விட்டதோ?' ஆனந்தனுக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. மௌனமாக நின்றுகொண்டிருந்தான்.

தான் விடைபெற்றுக்கொண்டு அம்பாபாலி வெளியே போய்விட்டாள். அவள் போன திக்கையே பார்த்துக்கொண்டு நின்றான் ஆனந்தன். தன் நிலைக்கு வருவதற்குமுன் அவன் ஒரு விநாடி திகைத்து நின்றான்.

ஆனந்தனின் நிலை புத்தருக்குச் சட்டென்று விளங்கிவிட்டது.

'ஆனந்தா!'

'ஸ்வாமி...'

'உன் நிலையை உன் குரலிலிருந்தே புரிந்து கொண்டுவிட்டேன், ஆனந்தா! அம்பாவின் முகத்தில் விழிப்பதே பாபமென்றுதானே நீ நினைக்கிறாய்; அது தவறு. பாபத்தைச் செய்தவன் திருந்தவே மாட்டானென்ற நியதி இருந்தால் கடவுள் ஏன் பாவத்தைப் படைக்கிறார்; பாபியை உண்டாக்குகிறார்?'

'.....................'

'எவர் ஒருவருடைய இதயத்தை நாம் சரியாகப் புரிந்துகொள்ளாமல் அவர்களுக்கு மனக் கஷ்டத்தைக் கொடுக்கிறோமோ, அப்போதே நாமும் பாபத்தைச் செய்தவர்களாகிறோம். அம்பா தாசித்தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் அவள் உள்ளத்திற்குள் அதை வெறுக்கிறாளென்று அவளது குரலே வெளிப்படுத்தவில்லையா?'

'.....................'

'ஏன் மௌனமாகிவிட்டாய், ஆனந்தா? சரி, நாம் நாளை விருந்திற்குப் போவதை எல்லோரிடமும் சொல்லிவிடு.'

'ஆகட்டும் ஸ்வாமி!'

பேச்சு அத்தோடு நின்றது. ஆனந்தன் வெளியே போனான்.

சிறிது நேரத்தில் ஆசிரமத்தில் பரபரப்பு ஏற்பட்டது.

'அவருக்கு வயது அதிகமாகிவிட்டதனால் தான் இப்படியெல்லாம் மூளை கெட்டுப்போய், தவறுகள் செய்கிறார். இல்லாவிட்டால் சாதாரண மனிதன்கூட விருந்து சாப்பிடப் போகாத தாசியின் வீட்டிற்குப்போக அவர் சம்மதிப்பாரா?' கோபத்தால் துள்ளிக்குதித்தெழுந்து புத்தருக்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்தான் தேவதத்தன். அவன் சித்தார்த்தருக்குப் பிறப்பில் ஒருவிதத்தில் நெருங்கிய உறவுக்காரன். புத்தருக்குப்பிறகு புத்தமதத்திற்குத் தலைவனாக வந்துவிடவேண்டுமென்று அவன் உள்ளத்தின் ஒருபுறத்தில் பதவிப்பேய் கூத்தாடிக்கொண்டிருந்தது. தன் சொல்லை உச்சத்தில் எடுத்துக்காட்டச் சந்தர்ப்பம் வாய்த்ததும் அவனுக்கு நிலைகொள்ளவில்லை பக்தர் கூட்டம் முழுவதும் புத்தரை நோக்கிச் சென்றது.

'தேவதத்தா, என்ன கோபம்?' புத்தரின் குரல் எப்போதும்போல் அமைதியாக இருந்தது.

'தாசியின் வீட்டிற்குப்போக நீங்கள் சம்மதித்துவிட்டீர்களாமே; இது உங்களுக்கே அறிவுள்ளதாகப்படுகிறதா?' உணர்ச்சிக் கொந்தளிப்பினால் படபடப்பாகப் பேசினான் தேவதத்தன்.

அவனைச் சமாதானப்படுத்த புத்தர் எவ்வளவோ சொல்லிப்பார்த்தார். ஆனால் தேவதத்தனின் கோபம் மட்டும் தணியவில்லை. ஆசிரமத்தை விட்டே வெளியேறிவிட்டான். மனம் மாறிய ஐந்நூறு புத்தசிஷ்யர்கள் அவனைப்பின் தொடர்ந்தார்கள். அந்தக்கூட்டம் அருகிலுள்ள ஒரு குன்றுக்குப் போய்ச் சேர்ந்தது. ஆனந்தனைப் போல் புத்தரின் மேல் முழுநம்பிக்கை கொண்ட பக்தர்கள் சிலர் புத்தருடன் ஆசிரமத்திலேயே தங்கிவிட்டார்கள்.

'குருஜி! தேவதத்தனின் கோபத்தை யாராலும் அடக்கமுடியவில்லை. அவனைப்பின் தொடர்ந்து சென்றவர்கள் நம் கொள்கையில் போதிய அனுபவம் பெறாத இளைஞர்தான். அதனால் அவர்களுக்குக் கொஞ்சம் உபதேசம் செய்தால் அவர்களெல்லாம் நம் வழியில் திரும்பி விடுவார்கள்' புத்த சிஷ்யர்களில் ஒருவனான சாரிபுத்தன் இதைச் சொன்னதும் மற்றவர்களும் அதை ஆமோதித்தார்கள்.

'சரி, மொகல்லானாவும் தம்ம சேனாபதியும் குன்றுக்குப்போய் அவர்களை அழைத்து வரட்டுமே......' என்று சொல்லிவிட்டு அவர்களிருவரையும் திரும்பிப் பார்த்தார் புத்தர்.

உடனே மொகல்லானாவும் தம்ம சேனாபதியும் குன்றை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்கள் போன நேரத்தில் தேவதத்தன் குகைக்குள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தான். அவன் விழித்துக்கொள்வதற்கு முன்பாகவே எல்லோரும் மனம் மாறி, தம்ம சேனாபதியின் தலைமையில் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்கள். தூக்கம் கலைந்து எழுந்த தேவதத்தன் நேர்ந்துவிட்ட குழப்பத்தால் அவமானமடைந்தான். புத்தரையும் அவரது கொள்கைகளையும் அழித்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு எங்கேயோ சென்றுவிட்டான்!

மறுநாள் புத்தரும் அவரைச் சேர்ந்த எல்லோரும் அம்பாபாலியின் வீட்டில் விருந்து உண்டார்கள். உலகம் போற்றும் ஞானிக்கு விருந்து வைத்த மகிழ்ச்சி அம்பாபலிக்கு; ஒரு ஆத்மா மகிழ்ச்சி அடைகிறதே என்ற மகிழ்ச்சி புத்தருக்கு.

காலதேவன் காலசக்கரத்தைச் சுழற்றிவிட்ட காரணத்தால் சில இரவு பகல்கள் கடந்தேறி விட்டன.

புத்தரும் பக்தர் கூட்டமும் பாவா நகரத்தில் ஒரு மாமரச் சோலையில் தங்கள் ஆச்ரமத்தை நிறுவினூர்கள். அந்த நகரத்திலுள்ள எல்லோரும் அவரைத் தொழுது சென்ருர்கள்.

'வேசாலியில் தாசி வீட்டில் சாப்பிட்டவர் நான் அழைத்தால் வராமலா போய்விடுவார்?' என்று திட்டமிட்டுப் புத்தரை அழைக்க வந்திருந்தான் சுண்டா என்பவன். ஊராரால் ஒதுக்கி வைக்கப்பட்ட பறையர் என்ற கீழினத்தைச் சேர்ந்தவன் அவன்.

புத்தரை வணங்கிக் தொழுதுவிட்டுத் தன் அபிலாஷையை வெளியிட்டான் சுண்டா. எப்பொழுதும்போல் இன்னெருவர் உள்ளத் துடிப்பை ஏமாற்ற விரும்பாமல் புத்தர் அவனது இஷ்டத்தைப் பூர்த்தி செய்யச் சம்மதம் தெரிவித்து விட்டார்.

மறுநாள் காலை சுண்டாவின் வீட்டில் ஒரே பரபரப்பு. விருந்தைப் பிரமாதமாகத் தயாரித்தான். சுண்டாவிற்கு மிகவும் பிடித்தமான உணவு பன்றி இறைச்சிதான். ஆகவே அதுதான் புத்தருக்கும் சுவையான உணவு என்று எண்ணிக் கொண்டான்.

விருந்துக்காக எல்லோரும் உட்கார்ந்தார்கள். மற்ற வகைகளைப் பரிமாறிவிட்டுப் பன்றி இறைச்சியைப் புத்தரின் இலையில் பரிமாறினுன் சுண்டா. இறைச்சி உணவைக் கண்டதும் ஒரு கணம் திகைப்படைந்தார் புத்தர். இதைக் கவனித்துவிட்டான் அவருக்கு அருகில் அமர்ந்திருந்த ஆனந்தன்:

'ஸ்வாமி, பன்றி இறைச்சியை நம் போன்றவர்கள் சாப்பிட்டால் பாபமல்லவா?'

'உண்மைதான் ஆனந்தா! ஆனுல் இதை நிராகரித்துவிட்டால் அவன் மனம் என்ன பாடுபடும் தெரியுமா? அதனுல் இதற்கு ஒரு வழி செய்கிறேன்; பொறுத்துப்பார்!'



சமையலறைக்குள் போய்விட்டு வந்த சுண்டாவைத் தம்மருகில் அழைத்தார் புத்தர்.

'சுண்டா! இங்கே வா. இந்த இறைச்சியை நான் சாப்பிடுவதற்கு முன் நீ எனக்கு ஒரு உறுதி மொழி தரவேண்டும். முடியுமா உன்னால்?'

'என் கையால் இட்டதை நீங்கள் சாப்பிட்டு விட்டீர்களானால் எனக்கு அதுவே பரமானந்தம்-மோட்சம்-எல்லாம். அதை அடைய நான் உயிரைக் கொடுக்கக்கூடத் தயார்! என்ன செய்ய வேண்டும் ஸ்வாமி?'

'அப்படியானால் கேள்; சொல்கிறேன். இந்த மாமிசத்தை நான்மட்டும்தான் சாப்பிடுவேன்; மற்றவர்கள் சாப்பிடமாட்டார்கள். இந்த விருந்திற்குப் பிறகு ஒரு நாளும் நீ மாமிசத்தைச் சாப்பிடக்கூடாது—தொடுவதற்குக்கூட மனம் இசையக்கூடாது. சரிதானா?'

'அப்படியே செய்துவிடுகிறேன், ஸ்வாமி! நீங்கள் சீக்கிரம் சாப்பிட்டு என் மனதைத் திருப்திப் படுத்துங்கள். அதுபோதும்!'

விருந்து சுமுகமாக முடிந்தது. சுண்டாவின் பக்தி அவனை அறியாமலே அவனை நல்லவனாக்கி விட்டது—பரிசுத்தனாக்கிவிட்டது. ஆனால் புத்தருக்கு எமனாக அந்த மாமிசம் உருவெடுக்கும் என்று முன் கூட்டியே அவன் தெரிந்துகொள்ள நியதியில்லையே!

அன்று மத்தியான்னம் புத்தரும் அவரைச் சேர்ந்தவர்களும் குசி நகரத்தை நோக்கிப் பயணம் கிளம்பினார்கள். மத்தியில் புத்தருக்கு வயிற்று வலி வந்துவிட்டது. வயிற்றை ஈட்டி கொண்டு கிழிப்பதுபோல் இருந்தது வயிற்றுவலி. தாகம் நாக்கை வறட்டிற்று. குடிப்பதற்குக் கொஞ்சம் தண்ணீர் வேண்டுமென்று ஆனந்தனிடம் சொன்னார் புத்தர். பன்றி மாமிசத்தைக் கொடுத்து, புத்தருக்குத் தீங்கு விளைவித்ததைக் குறித்து, சுண்டாவின் மீது ஆனந்தனுக்குக் கோபம் கோபமாக வந்தது. அதை உள்ளடக்கிக் கொண்டு அருகிலிருந்த சிற்றோடையில் இறங்கினான். சிறிதுநேரத்திற்கு முன்பு ஐந்நூறு மாட்டுவண்டிகள் அந்த நீரைத் தாண்டிச் சென்றதால் தேங்கிக்கிடந்த தண்ணீர் கலங்கியிருந்தது. அதனால் அதை எடுத்துவரத் தயங்கி நின்றான்.

'என்ன ஆனந்தா தயங்குகின்றாய்?'

இரண்டு போதி மரங்களுக்கிடையில் மற்ற சிஷ்யர்களுக்கு நடுவில் சாய்ந்து படுத்திருந்த புத்தர் ஆனந்தனை அமைதியான குரலில் விசாரித்தார்.

'நீர் கலங்கியிருக்கிறது, குருஜி!'

'அதைக் கலக்க வேண்டுமென்ற எண்ணத்தோடுதான் முன்னாலேயே கடவுள் அதைக் கலக்கி வைத்திருக்கிறார்; ஆகவே தைரியமாக அதையே எடுத்து வா!'

குருவுக்குக் கீழ்ப்படிந்து உடனே அந்தக் கலங்கிய தண்ணீரை எடுத்து வந்தான் ஆனந்தன். அதை மண்டியாகவே குடித்தார் புத்தர். இரவு நேரம் அதிகம் ஆக ஆக அவருடைய நிலையும் மோசமாகிக்கொண்டு வந்தது. இதைப் பார்த்துக்கொண்டிருந்த ஆனந்தனுக்குத் துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. அதை அடக்க முடியாமல் ஒரு குரல் அழுதே விட்டான். புத்தர் அவனைத் தேற்றுவதில் முனைந்தார்.

'ஆனந்தா, இந்த உலகில் எதுவுமே நிச்சயமற்றது என்ற உண்மை நீ அறியாததா, ஏன் இப்படிக் கலங்குகிறாய்? மற்றவர்களைவிட ஒருவேளை நீ என்னிடம் அதிகமாகப் பழகியவன். அப்படியிருக்க நீயே இப்படி அழுதால் மற்றவர்களை நான் எப்படித் தேற்றுவது?'

இதைக்கேட்டு ஆனந்தன் ஒருவாறு மனதைக் கட்டுப் படுத்தினான்.

அன்றைய இரவு எப்படியோ கழிந்தது. வெள்ளி முளைத்தது. இனி புத்தர் பிழைத்துக் கொள்வார் என்று ஆனந்தனின் இதயத்தின் மூலை அவனிடம் கூறிற்று. ஆனால் அவன் நினைத்தபடியெல்லாம் கீழ்ப்படிந்து கொண்டிருக்க யமனென்ன அவனுடைய வேலைக்காரனா? சிறிது நேரத்தில் தன் பாசக் கயிற்றைப் போட்டு, புத்தரைத் தன்னுடைய உலகுக்கு அழைத்துச் சென்று விட்டான் எமன். அவனுடைய உலகத்திலுள்ளவர்களைத் திருத்தி நல்லவர்களாக்கப் புத்தரின் உதவி அவனுக்குத் தேவையாக இருந்தது போலும்!

பொங்கிவந்த கண்ணீரை மற்றவர்களிடமிருந்து லாகவமாக மறைக்க ஆனந்தன் கிழக்குத் திக்கில் அடிவானத்தை நோக்கினான். சூரியன் வெளிக்கிளம்பி, சிறிது நேரத்தில் ஒருமேகக் கூட்டத்திற்குள் நுழைந்துகொண்டது. இனி அந்தச் சூரியன் எப்போது வெளிவருமோ?





# குறை தீர்ந்தது

ஸரோஜா ஸ்ரீநிவாசன்

பங்குனி மாதத்து வெயில் நெருப்பாய்த் தகித்துக்கொண்டிருந்தது. மணி அப்பொழுதுதான் பத்து அடித்து ஓய்ந்தது. முற்றத்தை ஒட்டினாற்போலிருந்த மேல் தாழ்வாரத்தில் உட்கார்ந்து விசிறிக்கொண்டிருந்தாள் காவேரிப் பாட்டி. 'அப்பாடா! என்ன வெயில் என்ன வெயில் ஆளையே பொசுக்கி வறுத்து எடுத்து விடும்போல இருக்கே. மணி பத்து ஆகிறதுக்குள்ளேயே ராமபாணம் போல் சுரீரென்று அடிக்க ஆரம்பிச்சுட்டது. இன்னும் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு எப்படிதான் கொளுத்தப் போகிறதோ தெரியல்லை." ஏண்டி மங்களம்! அவன் வெளியிலே போனானே எப்போ திரும்பி வரேன்னுட்டு சொன்னான்?' என்று உள்பக்கமாகத் திரும்பி நாட்டுப்பெண் மங்களத்தைக்கேட்டாள் பாட்டி.

பூஜை விளக்கைக் குனிந்தபடி ஏற்றிக்கொண்டிருந்த மங்களம், "போன இடத்திலே எத்தனை நாழியாறதோ. காரியத்தை முடிச்சிண்டு பனிரெண்டு மணிக்குள் வந்துவிடறதா சொன்னா... அவா வரவரைக்கும் நீங்க பட்டினி கிடக்க வேண்டாம் இலையைப் போடறேன், நீங்க சாப்பிட வாங்கோ'' என்று அடக்கமான குரலில் பதிலளித்தாள்.

'நன்னாயிருக்கு... எனக்கு இப்போ என்ன அவசரம்? குஞ்சுகளுக்கெல்லாம் முன்னாலே போட்டுவிடு. வயிறும் பிள்ளையுமா நீ இருக்கே... அவன் வேகாத வெயில்லே பிள்ளை பிறந்த வேளையை நினைச்சுண்டு, பெண்ணை பெத்த கவலையைத் தீர்க்க போயிருக்கான். உங்க இரண்டு பேரையும் விட்டுவிட்டு எனக்கு என்ன கோட்டாணுட்டமா? போன இடத்திலே என்ன ஆச்சோ? அந்த அம்பிகை ஜகதீச்வரிதான் கண்திறந்து பார்த்து ஒரு வழி விடணும். என் வயிற்றிலே பிறந்ததற்கு அவன் கண்ட சுகம் இதுதான்.' என்று பெருமூச்சுவிட்டாள் பாட்டி.

குழந்தைக்குச் சாதம்போடச் சமையலறைக்குச் சென்றாள் மங்களம். காவேரிப் பாட்டி கால்களை நீட்டியபடி தூணில் சாய்ந்துகொண்டாள். 'முத்தத்திலே காயற வெயிலெல்லாம் வீணாப் போறது. இந்தப் பெண்ணுக்கு ஒரு இடம் நிச்சயமானாலும் பருப்பை ஊறப்போட்டு அப்பளாம் இடலாம். எப்போதான் வழி பிறக்கப் போறதோ. ஆச்சு... பங்குனியும் முடிந்து சித்திரையும் பொறக்கப்போறது' என்று தனக்குள்ளாகவே முணு முணுத்துக்கொண்டாள்.

வெயிலினுடைய கானலினாலோ வெப்பத்தினாலோ பாட்டிக்கு மிகவும் அயர்வாக இருந்தது. அரைகுறையாகக் கண்களை மூடியபடி ஏதேதோ குருட்டு யோசனைகளில் மூழ்கி இருந்தாள். ஐந்து நிமிஷம்கூட ஆகியிருக்காது. முற்றத்துக் குறட்டுப் படியேறி யாரோ வரும் காலடியோசை கேட்டுத் திடுக்கிட்டுக் கண்களை விழித்தாள் பாட்டி. கையில் மஞ்சள், குங்குமச் சிமிழ், வெற்றிலை,பழம், புஷ்பத்தட்டு சகிதம் படியேறிக் கொண்டிருந்தாள் பாட்டியின் அருமைப் பேத்தி மீனா.

"ஏண்டி மீனு! நீ இன்னும் சாப்பிடப் போகல்லையா. குழந்தைகளோடு குழந்தைகளாய் ஒரே பந்தியாய்ச் சேர்ந்து உட்காரக்கூடாதோ? அவளும் ஒவ்வொருத்தருக்கா எத்தனை தடவை பரிமாறுவாள். நீ முன்னாடி சாப்பிட்டால் பின்னாடி எனக்கும் அவளுக்கும் பரிமாற லகுவாயிருக்கும். இத்தனை நாழி என்ன பண்ணினே?'' என்று செல்லமாகக் கடிந்துகொண்டாள் பாட்டி.

"துளஸியை நமஸ்காரம் பண்ணிவிட்டு இப்பத்தான் வரேன் பாட்டி. எனக்கு இன்னிக்கி என்னமோ பசிக்கவேயில்லை. நான் மெதுவா அப்பா வந்தப்புறம் கடைசியிலேதான் சாப்பிடப் போறேன். நீ சாப்பிடறதுக்கென்ன; நேத்திக்கு ஒருவேளை பலகாரம் பண்ணினது. மணி பதினொன்று அடிக்கப் போறது. வயிற்றை பசிக்கல்லையா' என்று அன்புடன் கேட்டபடி பாட்டியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள் மீனா.

அன்புடன் மீனுவின் தலையைக் கோதியபடி தன் மேல் சாத்திக்கொண்டாள் பாட்டி.

'இந்த வருஷமாவது குழந்தைக்கு எப்படியாவது ஒரு நல்ல இடத்தில் கல்யாணம் நிச்சயமாகணும். உடனொத்த பெண்களுக்கெல்லாம் கல்யாணமாயிடுத்து. இவளுக்கென்னு எங்கே தான் பிறந்திருக்கானோ? சமத்துக்கும் பொறுமைக் குணத்துக்கும் வரவன் குடுத்துத் தான் வச்சிருக்கணும். என் மீனு தங்க கட்டின்னு' என்று தனக்குள்ளாகவே முணுமுணுத்துக் கொண்டாள் பாட்டி.

'என்ன பாட்டி. தனக்குத்தானே பேசிக்கிறே; புரியறபடிதான் சொல்லேன்' என்று கேட்டபடியே பாட்டியின் மீது தலையை வைத்துப் படுத்தாள் மீனு.

வாசற்கதவைத் தடதடவென்று தட்டும் ஓசை கேட்டது. 'அப்பா வந்துட்டா போல இருக்கே ......?' பரபரப்புடன் எழுந்தாள் மீனு.

'சுருக்கப் போய் கதவைத்திறடியம்மா கௌரீ. அப்பா வந்துட்டான். சுருக்கப் போய் கால் அலம்ப ஜலம் எடுத்துவை' என்று இன்னொரு பேத்திக்குக் கட்டளையிட்டாள் பாட்டி.

நெற்றியில் வழிந்த வியர்வையை மேல் துண்டினால் துடைத்தபடி உள்ளே நுழைந்தார் சிவசாமி ஐயர். கடும் வெயிலில் வந்ததால் முகம் கன்றிப் போயிருந்தது, கால் அலம்பிக்கொண்டு அப்பாடா! என்று ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டார் ஐயர். அப்பாவிடமிருந்த மரியாதை, பயம் காரணமாகக் குழந்தைகளெல்லாம் சாப்பிட்டுக் கையலம்பி ஓசைப்படாமல் வெளியே கம்பி நீட்டிவிட்டனர்.

சிவசாமி ஐயர் ஆழ்ந்த யோஜனையில் மூழ்கியபடி ஊஞ்சல் கம்பியில் சாய்ந்து கொண்டிருந்தார். பிள்ளையைக் கண்டதும் பாட்டி தன் யதாஸ்தானத்தை விட்டெழுந்து ஊஞ்சலுக்கருகில் சாத்தியிருந்த விசிப்பலகையில் சாய்ந்து கொண்டாள். மங்களம் சமையலறை வாசற்படியில் கவலையே உருவாக நின்று கொண்டிருந்தாள். மீனு இடுப்பை வளைத்து ஒடித்தபடி ஊஞ்சல் கம்பியைப பிடித்தபடி அப்பாவின் அருகில் நின்று கொண்டிருந்தாள். நாற்காலியில் சாய்ந்தபடி அப்பாவின் வாயிலிருந்து என்ன வார்த்தைகள் வருகின்றனவோ என்று கவனித்தபடி புத்தகத்தில் முகத்தைப் பதித்துக் கொண்டிருந்தாள் கௌரீ.

எல்லோருடைய முகத்திலும் ஆவலும் படபடப்பும் மிகுந்திருந்தன. சிவசாமி ஐயர் எப்



பொழுது வாயைத் திறந்து என்ன சொல்லப் போகிறாரோ என்று அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். ஐந்து நிமிஷமாகியும் ஐயர் வாய் திறவாமல் மௌனமாயிருந்தது எல்லோருடைய ஆவலையும் அதிகரிக்கச் செய்தது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஐந்து நிமிஷம் அங்கு அசாதாரண அமைதி குடி கொண்டது. இந்த மோன நிலையைக் கலைத்தாள் பாட்டி.

'அம்மா மீனு......... அப்பாவுக்கு ஒரு டம்ளர் மோர் தூத்தம் பெருங்காய ஜலம் விட்டுக் கொண்டுவா. வெயிலிலே வந்திருக்கான்' என்று பேத்திக்குக் கட்டளையிட்டாள்.

பரபரவென்று உள்ளே சென்ற மீனு ஒரே நிமிஷத்தில் மோர் டம்ளருடன் திரும்பினாள். அப்பாவின் அருகில் ஊஞ்சல் ஓரமாக மோரை வைத்துவிட்டு ஒதுங்கி நின்று கொண்டாள்.

மோரை எடுத்து ஒரேமடக்கில் குடித்தார் ஐயர். வயிற்றினுள்ளே ஜில் என்று மோர் இறங்கினதும் அவருக்குச் சற்றுத் தெம்பு வந்தது.

'ஏண்டா சிவா! போன இடத்தில் காரியம் என்னவாச்சு? காயா? பழமா?' அதற்குள் பாட்டி பொறுமை இழந்துவிட்டாள்.

'காயுமில்லே......பழமுமில்லே. இரண்டுங் கெட்டான். என்னத்தை நம்பறது? எதை நம்பாமல் இருக்கிறது? இந்த தரகப் பசங்கள் பேசறது எல்லாமே முழுப்பொய்யும், புரட்டும், பித்தலாட்டமும் தான். நேரிலே பேசி முடிச்சுடலாம்...... ஆனா குதிரைன்னுன். கிட்டப் போனால் தான் எல்லா வண்டவாளமும் தெரியறது' என்றார் சலிப்புடன்.

'விஷயத்தை சுருக்க சொல்லி முடி...... சாப்பிட நாழியாறது' என்று குறுக்கிட்டாள் பாட்டி.

'முப்பத்தி நாலு வயசு தான் ஆகிறது. பார்த்தால் முப்பது வயசு தான் மதிக்கலாம், அப்படின்னுன் அந்த தரகன். ஆனா நேரிலே பார்த்தால் முப்பத்தெட்டு வயசு இருக்கும் போலிருக்கு. கண்ணுக்குச் சுமாராக இருக்கான். மூத்தாளுக்கு குழந்தை குட்டி ஒண்ணும் இல்லையாம். ஏதோ கொஞ்சம் சொத்து இருக்கு. நல்ல வேலை. தேவலைதான். அப்புறம் வந்து சொல்றேனுட்டு வந்துட்டேன், என்ன இருந்தாலும் இளையாளா இருக்கேன்னு யோஜனையாயிருக்கு. 'பதினைந்து வயசு வித்தியாசம்' என்று பெருமூச்சுவிட்டார் ஐயர்.

'நன்னயிருக்குடா நீபேசறது, முப்பத்தெட்டு வயசு ஒருவயசோடே சேத்தியா? அந்த நாளிலே உங்கதாத்தாவுக்கு முப்பத்தஞ்சு வயசு. பாட்டிக்கு பத்து வயசு. மூணும் இளையாளாகத்தான் குடுத்தா. கல்யாணம் ஆச்சு...அவ என்னத்திலே குறைஞ்சா. அவளைப்போல சீரும், சிறப்பும், நகையும் நட்டுமா பெருமையா யார் இருப்பா? அஞ்சு பொண்ணும் நாலு பிள்ளையும் அவளுக்கு பொறந்தது. பேரனும் பேத்தியுமாய் வீடு நிறைய கண்டு களிச்சா. இளையாளாக இருந்தால் என்ன? நம்ப மீனு அதிர்ஷ்டமாயிருக்கப் போறு...... இளையாளாய் வாக்கப் பட்டு ஏத்தமடிக்கணும். எனக்கும் உங்க அப்பாவுக்கும் பதிமூணு வயசு வித்தியாசம். நாங்கள்ளாம் என்ன கோணிண்டா போயிட்டோம். யோஜனை பண்ணுமல் இந்த இடத்தை முடிச்சுண்டுவா. காதும் காதும் வச்சாப்போல கல்யாணத்தை முடிச்சுடலாம்' என்று மூச்சு விடாமல் பேசிமுடித்தாள் காவேரிப்பாட்டி.

மாமியார் வார்த்தைக்கு மறுவார்த்தை சொல்லாமல் வாய்திறவாது எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள். மங்களம், தன் மாமியார் சொல்வது எதுவும் நன்மைக்குத்தான் என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் வெகுவாக ஊறிக் கிடந்தது.

நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தகௌரி அடிபட்டபெண் புலிபோல் சீறி உறுமிக் கொண்டிருந்தாள். அப்பாவுக்கு எதிரில் பாட்டியிடம் வாதாட அவளுக்குத் தைரியமில்லை. கூண்டில் அடைபட்ட சிங்கம்போல் அப்பா எப்போது எழுந்து போவார், பாட்டியிடம் ஒரு பாட்டம் சண்டை போட்டுத் தீரலாம் என்று பொருமிக் கொண்டிருந்தாள்,

'அப்படின்னு முடிச்சுடுங்கறயா அம்மா!' என்று வினவினார் ஐயர்.

'பின்னே என்னப்பா நமக்கு மாத்திரம் சின்னஞ்சிறு பிள்ளையாப் பார்த்து கொடுக்கணுங்கிற ஆசையில்லையா? அதற்குத்தகுந்த காசு பணமும், ஐவேஜும் இருந்தால்தானே. உனக்கு உங்கஅப்பா தாத்தா யாராவது சொத்து சேத்துத்தான் வச்சிருக்காளா? ......என்னவோ இரண்டு பொண்ணை நன்னு குடுத்தாச்சு. இப்போ கை நொடிச்சு சிரமப்படறே. இன்னும் குஞ்சும் கொழந்தைகளும் இருக்கு. இதுதான் பிராப்தம்னு முடிச்சுடு' என்றாள் உறுதியான குரலில் பாட்டி.

சிவசாமி ஐயர் ஒரு தீர்மானத்திற்கு வந்தவராய்ச் சாப்பிட எழுந்தார். பாட்டியும் பின் தொடர்ந்தாள்.

வெகுநேரம் வரை காமரா அறையிலிருந்து மீனுவின் விம்மல் ஒலி கேட்டுக் கொண்டேயிருந்தது.

இந்தா பாட்டி!.........உனக்கு மூளை கீளை இருக்கா? எதுக்கு எடுத்தாலும் எங்க நாள், எங்கநாள்னு ஏன் இப்படி வாய் ஓயாமல் சொல்லிண்டு காரியத்தை குட்டிச்சுவராக்கறே ...... உங்க நாளைக் கொண்டு போய் உடைப்பிலே போடு. உங்க நாள் கல்யாணத்தை இந்த நாள் கல்யாணத்தோடு ஒப்பிட்டுப் பேசாதே. ஐம்பது வருஷம் முந்தி நடந்ததை இப்போ சொல்லி என்ன பிரயோஜனம்? இது கலியுகம்னு...... அந்தக் கர்நாடக கல்யாணத்தைப் போலவே மீனுவுடைய கல்யாணத்தையும் நடத்தணும்னு பார்த்தால் அப்புறம் மீனு ஆயுசு முழுக்க அழுது வடிஞ்சுண்டுதான் இருக்கணும்' என்று காரசாரமாகக் கோபத்துடன் பாட்டி மீது பாய்ந்தாள் கௌரி.

'ஏண்டியம்மா! எங்க காலத்துக் காரியம் என்ன கோணிப் போச்சு. பெரியவாளா பார்த்துத் தேடி பண்ணி வச்சது எல்லாம் நன்னாகத்தான் விளங்கறது. இந்தக் காலம்தான் தலைகீழா மாறிப் போச்சு. அந்த நாளிலே உங்க அப்பாவுக்கு அத்தை நாலாம் இளையாளா வாக்கப்பட்டு......'

'போரும் போரும்...... அந்த நாள் கதை. அந்த நாளிலே காலேஜ் படிப்புத்தான் உண்டா? காதல் கல்யாணம்தான் உண்டா? நாலு அஞ்சு வயசிலே வாழைப்பழத்தையும், கல்கண்டு கட்டியையும் கொடுத்து குழந்தைகளுக்கு ஒரு கல்யாணத்தை முடிச்சுட்டா. அதுவும் திருமங்கலியச் சரட்டை சட்டைக்கு மேலே போட்டுண்டு, மூக்கையும் ஒழுக விட்டுண்டு......... பாண்டி ஆடி......... ஐயய்ய! சகிக்கலை. என்ன கல்யாணம் வேண்டிக்கிடக்கு. காதல்னு என்னன்னு தெரியுமா பாட்டி உனக்கு......லட்சியக் கணவன்...... இன்ப நினைவு......கற்பனைக் கோட்டைகள்...இந்த வார்த்தையெல்லாம் கேட்டுத்தான் இருக்கியா? என்னவோ...... மூணும் இளையாளோ முப்பதாம் இளையாளோ, எப்படி இருந்தாலும் சரி. வயத்துக்குச் சோறு கிடைச்சு நிறையச் சொத்து இருந்தால் போரும். கிணத்திலே தள்ளறாப் போல தள்ளிவிட வேண்டியது. அப்படித்தானே பாட்டி' கோபத்துடன் எகத்தாளம் நிறைந்த குரலில் படபடவென்று வார்த்தைகளைக் கொட்டினாள் கௌரி.

'அந்த பணங்காசும் வயத்துக்கு இல்லாமையும் தானேடி கண்ணா நாம் இப்போ சிரமப்படறோம். அதுதானே இப்போ முக்கியமா வேண்டியிருக்கு? அதுக்காக கிழம்கட்டைன்னு கொண்டு குடுத்து விடுவோமா? மீனுவுக்குப்பார்த்திருக்கிற பிள்ளை சிறுபையனா நன்னாத்தான் இருக்கானும். அவளை எப்படியாவது இந்த இடத்திலே குடுத்துட்டா நாளைக்கே அவனே உனக்கு சிறுபையனா பார்த்து, தன் செலவிலே கல்யாணத்தை பண்ணி குடுத்துடுவான். நாமும் கொஞ்சம் சுகப்படலாம்' என்றாள் அனுதாபக்குரலில்.

'பசுவைக்கொன்னு செருப்புத்தானம் பண்ணினாலும் ஒரு முட்டாள். அதுபோலத்தான் இருக்கு உங்க காரியம். எனக்குக் கல்யாணம் ஒண்ணுதான் குறைச்சல்' என்று வெறுப்புடன் சொல்லிவிட்டு, அதற்குமேல் தர்க்கிக்க விரும்பாமல் விர்ரென்று அவ்விடத்தை விட்டகன்றாள் கௌரி.

* * *

காவேரிப் பாட்டி சிவராம தீக்ஷிதருக்கு வாழ்க்கைப் பட்ட போது பெரிய இரண்டு கட்டு வீடு, மஞ்சள் காணிநிலம், தோட்டம் துரவு, பாங்கில் குட்டி போட்டு கொண்டிருந்த ஐயாயிரம்—ரூபாய் எல்லாவற்றிற்கும் எஜமானியாக இருந்தாள். வீட்டிலே லக்ஷ்மி தேவியின் பரிபூர்ண கடாக்ஷம் நர்த்தனமாடிக் கொண்டிருந்தது. குஞ்சும் குளுவானுமாக நாலு பெண்களும், மூன்று பிள்ளைகளுமாக வீடு நிறையச் சந்தான பாக்கியம் நிறைந்து நின்றது. தீக்ஷிதருக்கும் காவேரிக்கும் பகவான் ஒருகுறையும் வைக்கவில்லை.

பணக்கார இடத்திலே ஒரு பெண்ணைக் கொடுத்துச் சம்பந்தம் பண்ணினாள் காவேரி. பணத்தை ஜலமாகச் சீர்வரிசையில் வாரி இறைத்தாள். பணமும் கொஞ்சம் கரைந்தது. நாலுவருஷம் பெண்ணும் பிறந்தகம் வந்துபோய்க் கொண்டிருந்தாள். இரண்டு குழந்தைகளையும் பெற்று அப்பா அம்மாவிடம் சீராட விட்டாள். அவளுக்குப் புதுப்பணம் வந்து குவிந்தது. அன்றிலிருந்து பிறந்தக உறவும் அவளுக்கு அடியோடு விட்டு விட்டது. இன்னொரு பெண்ணை வடக்கே ஒருமூலையில் மத்திய சர்க்காரில் வேலையிலிருக்கும் ஒரு பையனுக்குக் கொடுத்தாள். கல்யாணமான மூன்றும் மாதமே அவன் எல்லார் தலையிலும் கல்லைப்போட்டு விட்டு எங்கோ கண்காணாத ஊரிலே முகமறியா மனுஷர்கள் நடுவில் வெந்து எரிந்து சாம்பலானான். மதுரை மீனாக்ஷி போலிருந்த ஒரு பெண்ணைப் பிரசவ அறையில் யமன் வாரிக் கொண்டு போய்விட்டான். கடைசி பெண்ணுக்குப் பதினாறு வயதில் திடீரென்று பைத்தியம் பிடித்தது. கரைந்ததுபோக மீதமிருந்த சொத்தை வைத்தியனுக்கு வாரி இறைத்தாள். ஒருநாள் பாயைச் சுரண்டிக் கொண்டு பிராணனை விட்டது பைத்தியம். இந்த கண்ணராவிக் காட்சியை இன்னும் கண்டு கொண்டிருக்க மனமில்லாமல் தீக்ஷிதர் உள்ளம் உடைந்து கண்ணை மூடினார். பாகப் பிரிவினைப் போராட்டம் நடந்து, குடும்பமே சீர் குலைந்தது. ஒருபிள்ளை பாகத்தை பிரித்துக்கொண்டு ஓடிவிட்டான். இன்னொரு பிள்ளை அக்கரைச் சீமையிலே எவளோ ஒருத்தியுடன் வாழ்ந்து கொண்டிருந்தான். இத்தனை சுகத்தை அனுபவித்தும் இன்னமும் காவேரி ஒடிந்த உள்ளத்துடன் உடலில் ஜீவனை ஒட்டவைத்துக் கொண்டிருந்ததற்குப் பூரண காரணகர்த்தா சிவசாமி

தான். சிவராம திக்ஷிதரின் வம்ச ரத்தம் அவர் ஒருவர் உடலில்தான் ஓடிக்கொண்டிருந்தது. சத்புத்திரனாக விளங்கினார்.

நன்றாயிருந்த நாளிலேயே காவேரிக்கு மங்களம் சாதுவாய், அடங்கின நாட்டுப் பெண்ணாய் வந்து வாய்த்து விட்டாள். சீரும் சிறப்பும், பணமும் காசும் சிதறிப் போனபிறகு சிவசாமிக்குக் குடும்பம் பெருத்தது. அபார சம்சாரியாகி விட்டார். நாலு பெண்ணும் நாலு பிள்ளையும் பெற்றுக்கொண்டார். இரண்டு பெண்களுக்குக் கல்யாணத்தையும் நடத்தி விட்டார். கடைசியாக எஞ்சி நின்றது வறுமையும், மற்றப் பெண்களை ஒருவன் கையில் ஒப்படைக்க வேண்டிய மகத்தான பொறுப்பும் தான்.

காவேரிப் பாட்டியின் சுருங்கிய கண்களின் ஓரத்தில் இருசொட்டுக் கண்ணீர்த் துளிகள் துளித்து நின்றன. தான் நன்றாயிருந்த நாளை நினைத்துக் கொண்டாள். இன்று 'அவரும்' இருந்து, சமத்தும் சூடிகையுமான பேரக் குழந்தைகளையும், கல்யாணக் காட்சிகளையும் காணக்குடுத்து வைக்கவில்லையே என்று பொருமிநைந்து உருகிற்று அவள் நெஞ்சு.

இன்று 'அவர்' இருந்தால் மீனுவை இந்த இடத்திலே கொடுக்க சம்மதிச்சிருப்பாரா?......' காவேரிப் பாட்டியின் நினைவுச் சுழலின் வேகம் முட்டிச் சிதறித் தடைப்பட்டு நின்றது.

* * *

'பாட்டி! நமஸ்காரம் பண்றோம்...' ரோஜாப்பூ மாலையும் கழுத்துமாக மீனுவும் அவள் கணவனும் சாஷ்டாங்கமாகப் பாட்டியின் காலில் விழுந்து நமஸ்கரித்தனர். 'நன்னா தீர்க்காயு சோடே பதினாறும் பெத்து, பெருவாழ்வு வாழ்ந்திண்டு இருங்கோ' என்றாள். ஏனோ பாட்டியின் குரல் கரகரத்தது.

பேத்தியை நிமிர்ந்து பார்த்தாள். மீனுவின் முகத்தில் எவ்வித சலனமும் இல்லை. அங்கு அசாதாரண சாந்தமும் புன்னகையும் குடிகொண்டிருந்தன. பேத்தி அகமுடையானைப் பாட்டியின் கண்கள் எடைபோட்டு அளந்துகொண்டிருந்தன. 'பையன் ஒன்றும் மோசமில்லை... கிராப்புத் தலையும், மூக்குக் கண்ணாடியும், ரிஸ்ட் வாச்சும், பஞ்சன்கீர் வேஷ்டியும்... பார்க்க ராஜா மாதிரிதான் இருக்கான்...' பாட்டியின் கண்கள் திருப்தியில் நிறைந்தன.

ஒரு கையால் மீனுவை அணைத்துக்கொண்டாள் பாட்டி. "மீனு மனசிலே ஒன்னும் தத்துப் பித்துன்னு நினைச்சுண்டு வருத்தப்படாதே. பையன் ராஜாமாதிரி இருக்கான். உன்னைக் கையிலே வச்சிண்டு தாங்கிடுவான். முதல் காரியமா மெள்ள

ஒரு குழந்தையை பெத்துக்கோ... அப்புறம் சரியாப் போயிடும்...''

மீனு சிலையாக உட்கார்ந்திருந்தாள்.

அந்த அறையிலேயே மூலையோடு மூலையாகச் சுருண்டு கிடந்த கௌரி காரணமின்றி ஏனோ மீனுவுக்காக விம்மிக்கொண்டிருந்தாள்.

மீனுவும் தன் கணவனுடன் புதுக் குடித்தனம் நடத்தப் புக்ககம் போய்விட்டாள்.

நெற்றியிலே விபூதியும், கையிலே ஜப மாலைமாகக் கண்மூடியபடி சிவப்பழமாய் ராமஸ்மரணை பண்ணிக்கொண்டிருந்தாள் காவேரிப் பாட்டி. அவள் எதிரில் பல விக்கிரகங்கள் அடங்கிய சம்புடம் ஒன்று திறந்துகிடந்தது. பாட்டிக்குச் சற்றுத் தூரத்தில் நாற்காலியில் ஒய்யாரமாகச் சாய்ந்தபடி அன்றைய பேப்பரை புரட்டிக்கொண்டிருந்தாள் கௌரி. ஒருவாறாகப் பூஜையை முடித்துவிட்டு நமஸ்காரம் செய்தாள் பாட்டி. தொப் என்று அம்பாள் படத்திலிருந்து ஒரு புஷ்பம் சம்புடத்தின்மீது விழுந்து வரப்போகும் சுப சூசகத்தைக் காட்டிற்று. திடுக்கிட்டு நிமிர்ந்தாள் பாட்டி. புஷ்பத்தைக் கண்டதும் அவள் முகத்தில் சந்தோஷம் அரும்பிற்று.

'அடியே மங்களம்! இன்னிக்கி அப்பாள் புஷ்பத்தைக் கொடுத்து நல்ல சகுனம் காட்டியிருக்காடி. எல்லாம் நல்லதுக்குத்தான். நம்ப கௌரிக்கு ஏதாவது வரன் தகைஞ்சாலும் தகையும். கல்யாணம் வரதோ என்னவோ' என்று பல்லெல்லாம் தெரிய உவகையுடன் சொன்னாள்.

'ஏன் ஏதாவது கிழத்தின் ஜாதகம் கிடைச்சிருக்கோ'' என்று கசப்புடன் முணுமுணுத்தாள் கௌரி.

'இன்னிக்கி பேப்பரிலே என்ன விசேஷம் கௌரி?' என்று கேட்டுக்கொண்டே பேத்திக்கு அருகில் வந்து உட்கார்ந்துகொண்டாள் பாட்டி.

'நியூஸ் கேட்கிறயா பாட்டி... வந்து... பட்டணத்திலே எவனோ ஒருத்தன் தன் பெண்டாட்டி மேலே சந்தேகப்பட்டுண்டு, அவளுக்கு உடந்தையாயிருந்தவனை ரொம்ப ஆச்சரியப் படும்படியாய் கத்தியாலே குத்திக் கொலைசெய்து விட்டான். முன்னாடி அவன் தலையை வெட்டிச் சமுத்திரத்திலே எறிஞ்சுட்டு அவன் உடம்பை வந்து........

'ஐயையோ! சிவா சிவா...... நிறுத்தேண்டி பொண்ணே. என்ன கண்றாவி' என்று காதைப் பொத்திக்கொண்டாள் பாட்டி.

'நல்ல விஷயமா ஏதோ கல்யாணம் கார்த்திகைன்னு இருக்கான்னு கேட்டால் கொலையும் சாவையும் படிச்சுண்டு... ராம ராம' என்றாள் பாட்டி.

''கல்யாணமா பாட்டி... இரு; இதோ சொல்றேன்... ஒரு பதினெட்டு வயசு பொண்ணை எவனோ விதியத்துப்போய் அவ இஷ்டமில்லாமல் ஐம்பது வயசு கிழத்துக்குக் கொடுத்தான். அந்தப் பொண் வாழ்க்கையே பிடிக்காமல் கிணத்திலே விழுந்து செத்துப்போயிடுத்தாம்.'

'ராம ராம.........ஏண்டி கொலையும் சாவும் தவிர பேப்பரிலே ஒண்ணுமே இல்லையா எதோ நல்ல உபந்யாசம், கதை, கால க்ஷேபம், கோவில் உற்சவம் — இப்படி ஏதாவது நல்ல விஷயமா படிச்சு சொல்லுன்னா எதோ இழவைப் படிக்கிறாய்' என்றுபேத்தியைக் கடிந்து கொண்டாள்.

'அப்படியா பாட்டி........அதை முன்னாடியே சொல்லக் கூடாதோ' என்று கிண்டலாக விஷமச் சிரிப்புடன் கேட்டாள் கௌரி.

வாசற்கதவைத் திறந்துகொண்டு பரபரவென்று உள்ளே நுழைந்தார் சிவசாமி ஐயர். அவர் கையிலே நாலு மூலையிலும் மஞ்சள் தடவிய கடிதம் இருந்தது. 'அம்மா! உன்பேத்தி மீனு நாலுமாசமா ஸ்நானம் பண்ணலையாம் இன்னும் நாலுநாளில் வரதா கடிதம் போட்டிருக்கா' என்று உற்சாகமாய்ச் சொன்னார்.



'மங்களம், நான் சொன்னது சரியா போச்சுடி கார்த்தாலே காக்கா கத்தித்து. நல்லசகுனமா பூவேறே விழுந்தது. எப்படியோ பெத்து பொழைச்சு நன்னா இருக்கணும் என் மீனு' என்றாள் உணர்ச்சி பொங்கும் குரலில் பாட்டி.

கௌரியின் முகத்தில் மாத்திரம் ஏனோ ஆச்சரியம் நிறைந்த ஒருகேள்வி தோன்றி மறைந்தது.

* * *

மீனு வந்தாள் பொங்கி வழியும் பூரிப்புடன் வயிறும்பிள்ளையுமாக. வீடே கலகலத்தது. பாட்டி விதம் விதமான பக்ஷணங்கள் செய்து கொடுத்தாள் பேத்திக்கு. ஆனால் கௌரி மாத்திரம் ஏனோ ஒன்றிலும் ஒட்டிக் கொள்ளாமல் விலகியே இருந்தாள். அவள் மனதில் ஏதோ ஒரு கேள்வி சுற்றிச் சுழன்று கொண்டேயிருந்தது. மீனுவுக்கு அவள் கணவனிடமிருந்து தினம் ஒருகடிதம் வந்தது. மீனுவும் அவருக்கு வரிந்து வரிந்து பதில் எழுதிக் கொண்டிருந்தாள். தான் வாழ்விலே ஓரளவு மனதுக்கிசைந்தவனை மணக்காமல் ஏமாந்து விட்டாள் என்ற ஏமாற்றமே அவள் முகத்தில் காணப்படவில்லை. இதையெல்லாம் கண்ட கௌரியின் ஆச்சரியம் பன்மடங்காகப் பெருகிற்று. 'அப்படியானால்......... மீனுவுக்கு வாழ்வில் ஒரு குறையும் இல்லை. அவள் சந்தோஷத்துடன்தான் தன் கணவனுடன் இன்ப வாழ்வு நடத்துகிறாள். அதற்கு அத்தாட்சியாக அவள் தாங்கி வந்திருக்கும் அன்புச் சின்னம் ஒன்றே போதுமே... மீனுவைக் குறித்து, அவளுக்கு வாய்த்த கணவனைப் பற்றி நான் அதிகமாகவே நினைத்து முட்டாள்தனமாகப் பச்சாதாபப் பட்டுவிட்டேன். இதற்காகப் பாட்டியிடம் எத்தனை சண்டை பிடித்தேன்... மீனுவின் மனம்தான் எத்தனை விசித்திரமானது?"...... இப்படியாக ஓடிற்று கௌரியின் சிந்தனை. நிம்மதியாக ஒரு நீண்ட பெருமூச்சு கௌரியிடமிருந்து வெளிப்பட்டது.

'அடியே நம்ப கௌரிக்கு அடிச்ச அதிர்ஷ்டத்தைப் பார்த்தாயாடி! நம்ப ஊர் போஸ்டாபீஸுக்கு புதிசா ஒரு பையன் டெம்ரரியாக பட்டணத்திலிருந்து மாத்தலாகி வந்திருக்கான். அவன் நம்ப கௌரியை இரண்டு மூன்று நாளாகவே கவனிச்சுப் பார்த்திருக்கான். உடனே பிடிச்சுப் போயிடுத்தாம். இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குக் கேட்கணுமா? தானே நேரே போஸ்டுமாஸ்டர் கிட்ட நம்மைப்பற்றி விசாரிச்சிருக்கான். அவர் என்னைக் கூப்பிட்டனுப்பிச்சு விஷயத்தைச் சொல்லி, அடுத்த முகூர்த்தத்திலேயே முடிச்சுவிடச் சொல்லிவிட்டார். பையன் ரொம்ப நன்னா இருக்கான். இருபத்துநாலு வயது. அப்பா, அம்மா யாருமில்லையாம். செலவில்லாமல் கௌரியைக் கல்யாணம் பண்ணிண்டு மறு ரயிலிலே பட்டணத்துக்கு அழைச்சிண்டு போறானாம். அப்பாடா! இந்தப் பொண்ணுக்காவது ஜாதகக் கட்டை தூக்கிண்டு, கால் செருப்புத் தேய, வேகாத வெயிலிலே மண்டை எரிய வரன் தேட வேண்டிய தொல்லை இல்லாமல் போச்சு. நம்ப குட்டி ரொம்ப அதிர்ஷடசாலிடி. அவ ஜாதகமே நல்ல ராசி' என்று குதூகலத்துடன், எதிர்பாராமல் மாப்பிள்ளை கிடைத்த சந்தோஷத்துடன் சொன்னார் சிவஸ்வாமி ஐயர்.

'அவ சமத்துக்கும், படிப்புக்கும், அழகுக்கும் எவனாவது ஒருத்தன் இந்த மாதிரி வந்து கொத்திண்டு போயிடுவான்னு எனக்கு அன்னிக்கே தெரியும்' என்று வாயெல்லாம் பல்லாகத் தெரியச் சொன்னாள் பாட்டி.

கௌரி ஆச்சரியத்திலே மூழ்கித் தவித்துத் திணறிக்கொண்டிருந்தாள்.

பொங்கிப் பூரிக்கும் உள்ளத்துடன் வாசுவின் கரம் பிடித்தாள். அவன் கரம்பிடித்த மறுநிமிஷமுதலே அவளுக்குப் பாட்டி முதல் கடைக்குட்டித் தம்பி கண்ணன்வரை யாவரும் வேண்டாதவர்களாகி விட்டார்கள். வாசுவுடன் பட்டணம் போகத் துடிதுடித்தாள். அவள் ஆவலை அதிகப்படுத்த விரும்பாத வாசுவும் உடனே வீடுபார்த்துத் தனிக் குடித்தனம் நடத்தக் கௌரியைக் கையோடு அழைத்துக்கொண்டு போனான்.

வீடே கலகலப்பின்றி வெறிச்சோடிப் போயிற்று.

* * *

மூன்று வருஷங்கள் ஒளிந்து மறைந்தன.

'இந்த பொண்ணு கல்யாணமாகி போச்சே, அகமுடையானைக் கண்டதும் நாமெல்லாம் மறந்து போச்சே?......இந்த மூணு வருஷத்தில் ஒரு நடை வந்து ஒரு மாசம் இருந்துட்டு போகக் கூடாதா? என்னைக் கூடவா மறந்து போயிட்டா. என்னவோ அவ வயத்திலேயும் ஒரு புழு புழுக்க கூடாதோ...... மூணு வருஷமாயிடுத்து...... இந்த மாதிரி மரமா நிக்கறத்துக்கு யாரைக் கொண்டாளோ? நம்மாத்திலே அக்காமார்கள், தாயார் பாட்டி - எல்லாரும் குழந்தையும் குஞ்சுமா இல்லையா? மீனுவை இளையாளா கொடுத்தேன்னு ஆயிரம் சண்டைபோட்டு இளப்பம் காட்டினா... அவளும் மூணு குழந்தையைப் பெத்துண்டுட்டா. நம்ப குடும்பத்துக்கே கௌரிதான் அதிசயமா இருக்கா' என்று அங்கலாய்ப்புடன் தவித்துத் தண்ணீராய் உருகினாள் பாட்டி.

'அம்மா! உன் பேத்தியும் பேத்தி அகமுடையானும் நாளைக்கு பட்டணத்திலிருந்து வராளாம். மாப்பிள்ளை தந்தி அடிச்சிருக்கார். கவலைப் படாதே. இனி உன்பாடு குஷிதான்' என்று சந்தோஷ சமாசாரத்துடன் உள்ளே நுழைந்தார் சிவசாமி ஐயர்.

'நிசமாவாடா சிவசாமி! இப்பத்தான் சொல்லி வாயை மூடினேன். அடியே மங்களம், பட்டணத்து மாப்பிள்ளை வரானாம். முறுக்குக்கு அரிசி எடுத்து ஊறவை' என்றாள் சின்னஞ்சிறு பெண்ணைப் போன்ற உற்சாகத்துடன்.

பேத்தியையும் மாப்பிள்ளையையும் வரவேற்கப் பாட்டி ஓடி ஆடி, காரியங்கள் செய்தாள். கௌரியும் வாசுவும் வந்துசேர்ந்தார்கள். பாட்டி வாசுவுக்கு ராஜோபசாரம் செய்தாள். வீடு கலகலப்படைய ஆரம்பித்தது. சிறுகுழந்தையைப் போலக் கௌரி துள்ளிக்குதித்து வீட்டைவளைய வந்தாள். பாட்டி பாட்டி என்று பழைய செல்லத்துடன் பாட்டி மடிமீது தலைவைத்துப் படுத்து ஊர் சமாசாரங்களைப் பற்றி வம்படித்தாள்.

'இதென்னடி! இந்த கௌரி இன்னும் சின்ன குழந்தையாகவே இருக்கா. எல்லாரைப்போல காலா காலத்திலே பெத்திருந்தால் இத்தனை நாழிக்கு காலை இரண்டு சுத்துமே!' என்று அங்கலாய்த்து அதிசயித்தாள் பாட்டி.

வீட்டின் கலகலப்பை அதிகப்படுத்த மீனுவும் குழந்தைகள் சகிதம் கௌரியைப் பார்க்க ஊரிலிருந்து வந்தாள். வீடு திமிலோகப்பட்டது. மணி மணியாகச் சமர்த்துடன் விளங்கும் மீனுவின் குழந்தைகளை வாரி அணைத்துக் கொஞ்சிக் குலாவினாள் கௌரி. ஏனோ தம்பி தங்கைகளின் அருமை அப்போதுதான் தெரிந்தது கௌரிக்கு.

ஒருமாதம் ஓடி மறைந்தது.

கௌரி வாசுவுடன் பட்டணம் திரும்பினாள்.

* * *

காமரா உள்ளே அடுத்த ரேழித் தாழ்வாரத்தில் முடங்கிக்கிடந்தாள் மங்களம். வெகுநேரமாக அவள் கண்ணீர் விட்டதன் அடையாளமாகத் தரையிலே கண்ணீர்த்துளிகள் வண்ணக் கோலமிட்டதுபோல் சிதறிக்கிடந்தன. 'ஈசுவரி!' என்று முணுகியபடி திரும்பிப் படுத்துக்கொண்டாள். ஏனோ அவளைத் தெய்வம் சோதித்துக் கொண்டிருந்தது. வீடுநிறையச் சின்னதும் பெரிசுமாக ஏழெட்டுக்குழந்தைகள்வளைய வர, இன்னொரு குழந்தைக்குத் தாயாராகிக் கொண்டிருந்தாள் மங்களம். ஏதோ தவிர்க்க முடியாத குற்றத்தைச் செய்துவிட்டவள் போல் அவமானத்திலே சுருங்கிக் கிடந்தது அவள் முகம்.

சமையலறையிலிருந்து தடுமாறியபடி வெளியே வந்தாள் பாட்டி. தன் அருமை நாட்டுப் பெண் சுருண்டு கிடப்பதைக் கண்டதும் அவள் நெஞ்சு நெகிழ்ந்து போயிற்று.

''ஏண்டியம்மா மங்களம்! இதுக்கெல்லாம் இப்படி வருத்தப் படுவாளா? சிவசாமி இருக்கிற வரைக்கும் எனக்குப் பேரனோ பேத்தியோ குறைவில்லாமல் பிறந்துண்டுதான் இருக்கும். ஏதாவது தகாத வழியிலே போயிட்டாயா என்ன? இதிலே என்ன அவமானம் இருக்கு?.........அந்த நாளிலே எங்க சின்ன மாமியார் பதினெட்டுப் பெத்தா. பத்தாவதுக்கே இப்படி அலுத்துக்கறயே. எழுந்திரு......... நாளைக்கு குழந்தை மீனுவும் வரா......... அவளுக்கும் தை தான் மாசம் போலிருக்கு. எப்படியோ பெத்துப் பிழைச்சு நன்னா இருக்கணும்'' என்றாள் பாட்டி. அவள் குரலில் அளவற்ற கவலையும் ஆதங்கமும் கலந்து ஒலித்தன.

'எந்தக் கோவிலிலே போய்த் தவங் கிடந்தேன் இது வேணும்னு......... என் வயிற்றிலே பிறந்த குழந்தை—கௌரி—அவ துடைச்சு வச்சு ஒன்றும் இல்லாமல் நிற்க, ஏன் என்னை தெய்வம் இப்படி ஆட்டறது? பெண்ணுக்கு ஜோடியா நான் இன்னும் குழந்தை பெத்துண்டு இருக்கிறதைப் பார்த்தால் ஊரார் ஏச்சும் பரிகாசமும், இளப்பமும் தான் காட்டுவார்கள்.'' அடிவயிற்றிலிருந்து அளவு மீறிய வெறுப்புடன் குமைந்து வந்தன வார்த்தைகள்.

'அசட்டுப் பிசட்டுன்னுப் பேசாதே......'என்று கடிந்துகொண்டு உள்ளே சென்றாள் பாட்டி.

* * *

பூம் பூம் என்று அலறியபடி வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. யார் வந்திருப்பார்கள் என்று யோசித்தபடி பரபரவென்று திண்ணையைவிட்டு இறங்கினாள் பாட்டி. சர்வாலங்கார பூஷிதையாய், அழகு பிம்பமாய், காரிலிருந்து கூஜாவும் கையுமாக இறங்கினாள் கௌரி. அதிசயத்துடன் திறந்தவாய் மூடாமல் வியப்படைந்துபோய் நின்றாள் பாட்டி.

'பாட்டி!' என்று அன்பு குழைய அழைத்தபடி ஓடிவந்தாள் கௌரி.

'கண்ணே!' என்று வாரி அணைத்துக் கொண்டாள் பாட்டி.

குழம்புக் கரண்டியும் கையுமாக ஓடி வந்தாள் மங்களம். மீனு, குழந்தைகளெல்லோரும் கௌரியைச் சூழ்ந்து கொண்டனர்.

'என்னம்மா கௌரி! சொல்லாமல் கொள்ளாமல் ஒரு தந்திகூட அடிக்காமல் இப்படி திடுதிப்புனு வந்து நிக்கறயே' என்றார் ஆதங்கத்துடன் சிவசாமி.

'முக்காலணவுக்கு ஒரு வரி கடிதாசு வரேன்னு முன்னாலேயே எழுதக்கூடாதோடி. அப்பா ஸ்டேஷனுக்கு வந்திருப்பாரே...... தனியாகவா வந்தே...' என்றாள் அங்கலாய்ப்புடன் மங்களம்.

'அப்படின்னா முன்னறிவிப்பில்லாமல் இனிமே பிறந்தகத்துக்கு வரக்கூடாதாக்கும்' என்றாள் கிண்டலாகக் கௌரி.

'என் கண்ணே! அப்படிச் சொல்லாதேடி. குழந்தை தனியா வந்திருக்காளேன்னு அக்ஞானத்துடன் கேட்டாடி'' என்று சொன்னாள் நாட்டுப் பெண்ணுக்குப் பரிவாகப் பாட்டி.

'என்னவோ......... நினைச்சுண்டேன் பார்க்கணும்னுதோணித்து. புறப்பட்டு வந்தேன். 'அவருக்கு' லீவுகிடைக்கல்லே' என்று சொல்லியபடி கூடத்துக்கு வந்தாள் கௌரி.

'மீனு.........அத்திம்பேர் குழந்தைகள் சௌக்கியமா? பிறந்த குழந்தை எங்கேடி...... காட்டக்கூட மனசில்லாமல் ஒளிச்சு வச்சி ருக்கயோ?' என்றுள் சிரித்தபடி கௌரி.

கூடத்திலே தொங்கிய இரட்டை தூளி கௌரியின் கவனத்தைக் கவர்ந்து ஆச்சரியத்தைப் பன்மடங்காக்கிற்று. அதிசயத்துடன் கண்களைக் கூடம் முழுவதும் சுழலவிட்டாள். தூண் ஓரத்திலே கொழுகொழு வென்று, சின்னஞ்சிறு கண்களைக் கொட்டக்கொட்டப் பார்த்தபடி கால் விரலைச் சப்பியவாறே விளையாடிக் கொண் டிருந்த குழந்தையைக் கண்டதும் வியப்பில் ஆழ்ந்து போனுள். மறுகணமே அவளுக்கு விஷயம் புரிந்துவிட்டது.

'பாட்டி! இந்த ராஜாப்பயல் எப்போபிறந்தான்? எனக்கு கடுதாசேபோடலீலயே. மீனுவுக்குபெண் பிறந்ததுன்னுதானே எழுதி இருந்தே' என்று கேட்டபடி வாரி எடுத்துக்கொண்டாள் கௌரி.

'உனக்கு தம்பி தாண்டி.........என்னமோ மங்களம் எழுத வேண்டாம்னுட்டா. எனக்கும் இஷ்டமில்லை.........அதனுலே எழுதலை' என்று சூள் கொட்டினுள் பாட்டி.

மத்தியானம் ஒருமணி இருக்கும். சாப்பாடு ஆனபிறகு எல்லாரும் கூடத்திலே உட்கார்ந்து வம்பு அடித்துக் கொண்டிருந்தார்கள்.

'கௌரி! ஸ்நானம் பண்ணிண்டு வரயா உடம்பு 'விச்சா' இருக்கயா' என்று சாவதானமாகக் கேட்டாள் பாட்டி.

கௌரி காதில் விழாதவளாய்ப் பதில் சொல் லாமல் பேச்சைவேறு வழியில் திருப்பினுள்.

'மங்களம்! இந்த பொண்ணு காரண மில்லாமல் அகமுடையானை விட்டுப் பிரிஞ்சு ஒரு நிமிஷம்கூட தங்கமாட்டாளே. ஒருகால்......'

மூஞ்சிகூட வெளுத்திருக்காப் போல இருக்குடி' என்றுள் ரகசியக் குரலில் மங்களத்திடம்.



திடீரென்று பரபரப்புடன் எழுந்தாள் கௌரி. வேகமாய் ஓடி முற்றத்திலிறங்கி, குறட் டோரமாய்க் கடகடவென்று வாந்தி எடுத்தாள்.

மங்களம் ஓடிப்போய்ப் பெண்ணைத் தாங்கிக்கொண் டாள்.

'அடியே, நான் சொன்னது சரியாய்போயிட்டதுடி. அவ எங்கிட்ட மறைக்கப்பார்த்தா லும் முடியுமா? அந்த அம்பி கைதான் கண்திறந்து பார்த்து கலி தீர்த்து வச்சா. என் குறை தீர்ந்ததுடி....அஞ்சிலே ஒண்ணு சோடையா போயி டுமோன்னு பயந்தேன். இனிமே என் நெஞ்சு வேகும்' என்றுள் உணர்ச்சி நிறைந்த குரலில் பாட்டி.

தன்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டே செல்லமாக வெட் கத்துடன் பாட்டியிடம் வந்து சாய்ந்து கொண்டாள் கௌரி.

'பாட்டியை நீ ஏமாத்தப் பார்த்தே. ஆனு என் மாப் பிள்ளை சமத்துடி.... விஷயம் தெரிஞ்சுதான் சமத்தா முன் னடியே அனுப்பிச்சு வச்சிருக் கான். அடேய்! சிவசாமி...... மாப்பிள்ளைக்கு ஒரு கடுதாசு போட்டுவிட்டு, சாஸ்திரிகளை யும் பார்த்து வளைகாப்புக்கு முகூர்த்த நாள் பார்க்கச் சொல்லு...' என்றுள் தனக்கே உரிய அதிகாரமும் அன்பும் கலந்த குரலில்......

தொடர் கதை:

# லக்ஷ்ய புருஷன்

கே. சுந்தரம்மாள்

'ஹேமா'

'வேண்டாமென்பது போல் மண்டையை ஆட்டினுள்'

'நீ இவ்விடம் விட்டுப் போகமுடியாது. ஒன்றே ஒன்று.........'

'அப்படியென்ன? இதுவரையிலிருந்தது போல் இன்னும் கொஞ்சநாள்'

'இதுவரைக்கும் காரணம், நாம் முதன் முதல் சந்திக்கும்பொழுது யௌவன திசையிலிருந்திருந்தோமானுல் கவர்ச்சிக்கு அடிமைபட்டுத்தானிருப்போம். சிறுபொழுதிலிருந்து வளர்ந்த பாசமானதால் அன்பு மட்டும் மிஞ்சி கவர்ச்சி குறைந்திருந்தது. இன்று கட்டுப்பாட்டை நாமே தளரவிட்டோம்' என்று எழுந்து உட்கார்ந்து கொண்டு நாளை அம்மாவினிடம் நீயே சொல்லிவிடு' என்ருன்.




'ஏனே நான் மாட்டேன் நீங்கள் சொன்னுல்தான் நம்புவார்கள். ஆனந்தம் அடைவார்கள்.'

''எப்படிச் சொல்லுவதென்று தயங்குகின்றது மனம். சிவஸ்வாமியிடம் சொன்னுல் போதும்'' என்று சொல்லியவாறே அவன் கேட்டதை எடுத்துக்கொண்டு விட்டான்.

'ஸ் இதென்ன விடுங்கள்' என்று பலவந்தமாக விடுவித்துக் கொண்டாள்.

'இதுவா? இதுதான் மனிதசுபாவம்' என்ருன். கஜானுவில் மணி மூன்றடிக்கும் சப்தம் கேட்கவே ஐயோ மூன்றடித்து விட்டதே என்று பதறியவளாக எழுந்து நின்ருள்.

'ஏனிப்படி நடுங்குகிருய், அம்மா ஒன்றும் நினைக்கமாட்டாள்' வீட்டில் அம்மா மட்டுமில்லை. எண்ணிக்கையில் நூறுபேருக்கு மேலாகிறது.

'நீங்கள் முதலில் சென்று கதவைத்திறந்து வராந்தாவில் ஒருவருமில்லையா என்று பாருங்கள். நான் சென்றுவிடுகிறேன்.'

'இருவரும் கதவருகில் வந்ததும், ஒரே ஒரு விஷயம்' என்ருள் ஹேமா.

'என்ன?'

'மனதில் ஓர் தீர்மானமான எண்ணத்தை வைத்துக்கொண்டு, அடிக்கடி என்னைக் கேள்வி கேட்டு மடக்கப்பார்த்தீர்களே? எதற்காக? மேலும்தாங்களும் மனம் தடுமாறுவது போலிருந்ததெல்லாம் நடிப்பா?'

'நடிப்பில்லை ஹேமா உண்மையில் லக்ஷ்யத்திற்கும், இயற்கைக்கும் பெரும் போர் நடந்து கொண்டேயிருந்தது. இயற்கையின் பக்கம் ஜயம் தோன்றும் பொழுது லக்ஷ்யத்திற்கு நீ பக்கபலம் அளித்துவந்தாய். இப்படியே நாட்கள் சென்று கொண்டிருக்கலாம். அந்த நிலைமை மூர்த்தியின் மூலம் மாறிவிட்டது. நாமாக ஒரு நாளும் மாற்றியிருக்க மாட்டோம்'' அவ்வளவு தான். உன் தகப்பனர் மட்டுமே எனது உண்மை நிலையை உணர்ந்திருந்தார்.'

'சரி வெளியே பாருங்கள் நாழியாகிறது'

'எதற்காகப் பயப்பட வேண்டும். பார்த்தாலென்ன? நாம் இனி கணவன் மனைவி தானே'



'அந்த விஷயம் இனிமேல்தானே அவர்கள் அறிவார்கள். இந்த நிலை?'

'சொன்னால் சொல்லட்டும்.'

'உங்களுக்கு அப்படித் தோன்றுவது சகஜம். எனக்கோ இதுமாதிரி ஒரு வார்த்தை காதில் விழுந்தாலும் பிராணனை விட்டு விட்டால் என்ன என்று தோன்றுகின்றது. தயவு செய்து இந்த ஒரு இரவு மட்டும் என் மானத்தைக்காப்பாற்றுங்கள்.'

'அட அசடே, ஏனிப்படி பயந்து சாகிறாய்? பார்க்கிறேன். உன் கன்னம் ரொம்ப வலிக்கிறதா சொல்லு.'

'இல்லை' இப்பொழுது எனக்குக் கீழே போனால் போதும்'. கதவைத்திறந்தான். சுவர் பக்கமாக சிவஸ்வாமி வந்து கொண்டிருந்தான். நிலைப் பக்கமாக நின்ற ஹேமாவிற்கு வாசற்படிக்கு வெளியே தெரியாதபடி வாசற்படியில் நின்று கொண்டு இடதுகையினால் வெளியே சிவஸ்சாமியை தள்ளிப்போகும்படி ஜாடை காட்டிக் கொண்டு, வலதுகையினால் அவள் கன்னத்தைத் தடவியவாறு காலையில் 'வெந்நீரில் ஸ்நானம் செய். குளிர்ந்த ஜலத்தில் குளிக்காதே' என்று முகத்தருகில் குனிந்து சொல்லி விட்டு, திரும்பிப் பார்த்து, 'சரி நீ போகலாம்' என்றான்.

'வரும் பொழுது சோர்வுடன் வந்தேன். போகும் பொழுது ஆனந்தத்தில் நடனமிடுகிறது உள்ளமும் உடலும்' என்றாள் ஹேமா.

''நான் வரும் பொழுது கோபத்தால் என் தேகமே பற்றியெரிந்தது. இப்பொழுது உனது ஸ்பரிசத்தினால் என் மனமும்உடலும் ஆனந்தத்தினால் துள்ளுகிறது.'

"நான் வரட்டுமா? "

"உம்" தயங்கித்தயங்கி அவனைப் பார்த்தவாறே சென்று படிகளிலிறங்கிச் சென்றாள். அவள் மறைந்ததும் வெளி வந்து சிவஸ்வாமி, "ஏண்டா பிரும்மஹத்தி! இது என்ன?" என்றான் "எல்லாம் நல்லதுதான் சொல்லுகிறேன், என் அறைக்குவா; கட்டிலில் படுத்த வண்ணம் பேசலாம்" என்று அவன் கையைப்பற்றி நடந்தான்.

## 11

பூனைபோல் சத்தப்படாமல் வந்து படுத்துக் கொள்ள வேண்டுமென்றுதான் வந்தாள். இவள் அறைக்குள் வருவதும், ராஜாவின் தாய் ஸ்விட்சைப் போடுவதும் ஒன்றாய் நிகழ்ந்து விட்டன. இப்போழுதுதான் வருகிறாயா? பத்துமணி வரைஆடிவிட்டு, இப்படி மூன்றுமணி வரை கண் விழித்தால் உடம்பு என்னத்திற்காகும்? அவனுக்கென்ன எட்டுமணி வரை தூங்குவான். விடிந்தால் நமக்குவேலை தலைக்குமேல் இருக்கிறதே' என்று சொல்லியவாறு அருகில் வந்தவள் ஹேமாவின் கன்னத்தைப் பார்த்து விட்டாள். பதறியவளாக, "என்ன? கன்னத்தில் அடிக்கவா செய்தான்? எதற்காக? உன்னைத் தொட்டு அடிக்க அவனுக்கு அவ்வளவு தைரியமா? நானும் பொறுத்துக்கொண்டே வருகிறேன். இனிமேல் அப்படியிருக்க முடியாது. இப்பொழுதே சென்று

இரண்டிலொன்று தீர்த்துவிடுகிறேன்' என்று திரும்பினாள்.

'வேண்டாம் அம்மா' 'என்றாள்.

'ஏன் வேண்டாம். உன்னால்தான் அவன் இப்படி ஆடுகிறான்' என்று புறப்பட்டவளைத் தடுக்காவிட்டால் விபரீதம்? ஆனால் விஷயத்தைச் சொல்ல முடியாமல் லஜ்ஜை வந்து தடுத்தது. ஒருவாறு சமாளித்துக்கொண்டு,

'அடித்தாலும் பிறகு நன்மை ஏற்பட்டதம்மா' என்றாள்.

'என்ன சொல்லுகிறாய்? புரியச் சொல்லு.'

'கல்யாணத்திற்கு ஒப்புக்கொண்டுவிட்டார்' என்று தலையைக் குனிந்தபடியே சொன்னாள்.

'நிஜமாகவா?'

'ஆமாம்' என்று நடந்த விஷயங்களைச் சுருக்கமாகக் கூறி முடித்தாள்.

'அம்மாடி ராமச்சந்திர பிரபு கண் திறந்தார்' என்று கையெடுத்துக் கும்பிட்டாள்.

காலையில் ஹேமா ராஜா இருவரும் ஸ்னானம் செய்து உடுத்துக்கொண்டு, தாயாரின் பூஜை அறைக்குள் வந்தார்கள். ஸ்வாமியையும் தன்னையும் நமஸ்கரித்த இருவருக்கும் மங்களாக்ஷதை தூவி விட்டு, 'நீங்கள் இணை பிரியாமல் வாழவேண்டும்' என்று ஆசீர்வதித்தாள்.

'அம்மா, உன் பேச்சைத் தட்டினேன். அதற்காக உன் மனம் மிக வருந்தியிருக்கிறது. அப்பொழுதெல்லாம் அதுபற்றித் தோன்றவில்லை. என்னை மன்னித்துவிடு' என்றான்.

'நடந்ததை மறந்துவிடு ராஜா! இனிமேல் தான் நீ வாழ்வின் ஜோதியைக் காணப் போகிறாய்' என்றாள். அறையைவிட்டு வெளியே வரும் பொழுது எதிரில் வந்த சிவஸ்வாமி, 'ஹேமா! இந்த மடையனது வெறிச்செய்கைக்கு இரண்டு தடவை ஆளாகிவிட்டாய். பழிக்குப்பழி இன்று அவன் கன்னத்தை நன்றாகக் கடித்துவிடு. யாவரும் அவனை என்னவென்று கேட்கட்டும். அப்பொழுது தான் புத்திவரும்' என்றான்.

அவனை நிமிர்ந்து பார்க்க லஜ்ஜைப்பட்டவளாக விர்ரெனச் சென்றுவிட்டாள்.

'ஏண்டா பழிகாரா! இப்படிச் சத்தம் போடுகிறாய்?' என்றான் ராஜா.

'நான் சொன்னது ஒருவர் காதிலும் விழாது. ஏதோ அடித்தேனென்றாய்; சுமாராக இருக்குமென்று நினைத்தேன். கன்னம் கன்றிப்போய் வீங்கியிருக்கிறதே. லக்ஷ்ய புருஷன் செய்கையா இது. வெறிக்கு இடமளிப்பது மனிதத் தன்மையா? ஜாக்ரதையாய் நட. பெற்றதாய் இருந்தால் பார்த்துச் சகிப்பாளா? ஒருவருமில்லையென்று துள்ளாதே. விஜயாவும் நானும் ஆயிரம், தாய்தந்தையர்க்குச்சமானம்' என்றான்.

'அடபாவி! ஏண்டா சத்தம் போட்டு என் மானத்தை வாங்குகிறாய்? இனிமேல் இவைகளுக்கு இடமிருக்காது.'

சிவஸ்வாமி பூஜையறைக்குச் சென்றதும், ராஜா பின்பக்கம் சென்றான். கிணற்றடியில் மூர்த்தியும் ஹேமாவும் நின்று பேசுவதைக் கண்டு மறைவில் நின்றுவிட்டான்.

'சகோதரி! சிவஸ்வாமி யாவையும் சொன்னார். சந்தோஷம். என் முயற்சியினால் ஒரு நன்மை யேற்பட்டதுபற்றிச் சந்தோஷம். என் மீது ராஜாவிற்கு வருத்தமிருக்கலாம். அது பற்றி நான் சிந்திக்கவில்லை. பழையபடி நட்டுவனாரிடமே சென்று வசிக்கிறேன். நடனத்திற்குப் பாடுவதுகூட இஷ்டமிருந்தால் செய்கிறேன். அவரைத்தவிர மற்ற யாரும் என்னைக் குறை கூற முடியாது. இரண்டு மாதத்திற்கு முன், சிவஸ்வாமி, நட்டுவனார் இரண்டு பேருமே என்னைக் கேட்டுக்கொண்டபடி உங்களிடம் அன்று சொல்லிவிட்டு, சகஜபாவம் கொண்டாடி நடித்தேன். நேற்றும் வேண்டுமென்றுதான் சிவஸ்வாமியும் நட்டுவனாரும் சேர்ந்து, 'காதலி ராதை' ஏற்பாடு செய்தார்கள். எது எப்படியானாலும் இனிமேல் ஊர்க்காரர்களின் வாய்க்குப் பூட்டு ஏற்பட்டுவிடும்.'

'உங்களுக்கு என் நன்றி. அதைத் தவிர வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை' என்றாள் ஹேமா.

'நான் சொல்லுகிறேன் மூர்த்தி!, என்று வெளி வந்தான் ராஜா.

ஹேமா திடுக்கிட்டாள். 'உன்னுடைய அன்பிற்கு வந்தனம். நிலைமை நீடிக்காமல் செய்தது உன் முயற்சி. அதைப் பாராட்டுகிறேன். நீ என்றும் என்னுடனேயே இருக்க வேண்டும். சென்றதை மறக்க வேண்டும். கூடிய சீக்கிரம் மாலதியை உனக்கு மணமுடித்து, எங்களுடன் என்றென்றுமே தங்க ஏற்பாடு செய்துவிடுகிறேன். நீ எனது சகோதரன்' என்றான்.

''வந்தனம் உங்கள் சித்தம் என்பாக்யம். நான், வரட்டுமா? சிவஸ்வாமி பத்தரைமணிக்குநடக்கும் நிச்சயதார்த்தத்திற்கு வேண்டிய ஏற்பாடு செய்ய வேண்டும்'என்று சொன்னார்.

அவன் சென்றதும் திரும்பினான். இரண்டு கன்னத்தையும் இரண்டு கைகளினால் மூடிய வண்ணம் நின்றாள் ஹேமா.

'ஏன், கன்னம் வலிக்கிறதா?

# "இது உண்மை...
## லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்தால் நீங்கள் அதிக அழகோடு விளங்குவீர்கள்"

என்று கூறுகிறார்

## மங்களம்



மங்களம் கூறுவதாவது: "லக்ஸ் டாய்லட் சோப்பின் சருமத்திற்கு ஊட்டமளிக்கும் சக்தி என் சருமத்தில் அற்புத மாறுதலை ஏற்படுத்தியிருப்பதைக் காண்கிறேன். இந்த சுத்தமான, வெண்மையான டாய்லட் சோப்பை நான் தினமும் உபயோகிப்பதால் என் சருமம் மிகவும் மென்மையாக இருக்கிறது."




# லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 373-X30 TM

# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது

டால்டாவிலிருந்து
பெறும் சக்தியால் இவன்
ஆரோக்கியமாகவும் நாள்முழுவதும்
குதூகலமாகவும் இருக்கிறான்.










நமது உணவில் விடமின்கள் ஏன் அடங்கியிருக்கவேண்டும்?
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353,
பம்பாய் 1

உங்கள் குடும்பத்தினருக்கு டால்டாவில் தயாரித்த உணவை அளியுங்கள். இப்படிச்செய்வதால், டாக்டர்கள் ஒவ்வொருவர் தினசரி உணவிலும் அவசியம் தேவை என்றுகூறும் சக்தியளிக்கும் கொழுப்பு அவர்களுக்குக்கிடைப்பதை உறுதிப்படுத்திக்கொள்கிறீர்கள். காற்றுப்புகாத சீல் செய்த டின்னில் அடைக்கப்பட்ட டால்டா மிகவும் சுத்தமானது, புதிதானது. மேலும் மிகவும் சிக்கனமானது.




# டால்டா

உங்களை ஆரோக்கியமாகவைத்திருக்கும் சமையல்-கொழுப்பு

10, 5, 2, 1, பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 190-X52 TM

'இல்லை' இப்பொழுது அவனுடன் பேசிய தற்காக இந்தக் கன்னத்தில் அடிவிழுந்தால்?'

'சொல்லு சொல்லு, கேட்டுக் கொள்ள வேண்டியதுதானே முட்டாள்தனத்திற்கு' என்றான்.

'இப்படிப் பேசாதீர்கள்; இனிமேல் சொல்ல வில்லை. மன்னித்துவிடுங்கள்'

'எப்படி இருக்கிறது பார்க்கலாம்?' என்று அவள்கையை எடுக்கப்போனான். 'ஸ்' இடம் பொருள் ஏவல்' பார்க்க வேண்டும், என்று சொல் லியபடி விர்ரெனச் சென்று விட்டாள்.

அன்று பத்து மணிக்கு, அம்மண்டபத்தில் அவ்வூரே கூடியிருந்தது என்று சொல்லாம். நிச்சயதார்த்த வேலையை ராஜாவின் மாஜி மாமனாரும் சிவஸ்வாமி மூர்த்தி மூவரும் முனைந்து நாளைத்தள்ளிப் போட்டால் அவன் மனம் மாறி விடலாம்' என்று அன்றே ஏற்பாடு செய்து விட்டார்கள். சடங்குகள் பூர்த்தியானதும், மாஜி மாமனார் எழுந்து நின்று, நாமெல்லோரும் விரும்பி எதிர்பார்த்த கல்யாணம் நடக்கப் போகிறது. ஸ்ரீநாத சர்மாவின் ஆசிபெற்றபின்பு தான் ஹேமாவின் கல்யாணம் என்பது வாக்கு உறுதியாம். அதனால் இன்று இரவே ராஜா, ஹேமா, சிவஸ்வாமி, முதலியவர்கள் புறப்பட்டு, காசி சென்று ஆசி பெற்றுவருவார்கள். இன்று புதன் அல்லவா இன்று பத்தாவதுநாள் வெள்ளிக் கிழமை, எனது கிரஹத்தில் எனது பெண்ணாகவே, ராஜாவின் அந்தஸ்திற்குக் குறை இல்லாத நிலைமையில் ஹேமா, ராஜா கல்யாணம் நடைபெறும். நாம் இவ்வளவு முயற்சித்தது, உத்தமர் ஈசுவர சர்மாவின் நிமித்தம். அவர் அருபியாக இருந்து ஆசீர்வதிப்பார்' என்று கூறினார். அந்தச்சமயம், வெளியிலிருந்து வந்த மூர்த்தி சிவஸ்வாமியின் காதைக் கடித்தான். சட்டெனச் சிவஸ்வாமி எழுந்திருந்து, மாஜி மாமனார் காதைக் கடித்து விட்டு, ராஜா அருகில் வந்து உட்கார்ந்தான். உடனே அவர் 'இப்பொழுது ஒரு நல்ல சமாசாரம் வந்திருக்கிறது. நமது ராஜா லக்ஷ்யப் பிரகாரம், ஸ்ரீநாத சர்மா இரண்டாவது பரிசு ஹேமாவிற்குக் கிடைக்கும் சமயம் வந்து விட்டது. அவர் கலைவிழா கொண்டாடப் போவதாகவும், அதில் பங்கெடுத்துக் கொள்ள இவர்களை வரும்படி ஆள னுப்பியிருக்கிறார். இதோ அவர் வந்து கொண் டிருக்கிறார்' என்று நிறுத்தினார். மணையில் அமர்ந்திருந்த ராஜா பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஹேமாவின் பக்கம் திரும்பி, அவள் காது மட் டும் கேட்கும்படியாக, 'என்னுடைய இந்த ஒரு லக்ஷ்யமாவது நிறைவேறட்டும்' என்றான்.

அந்த ஆள் வந்ததும், ஸ்ரீநாத சர்மா நடன விழாவில் கலந்து கொள்ள வேண்டுமாதலால், வெள்ளிக்கிழமை முகூர்த்தத்தை இன்னும் பத்து நாள் தள்ளி வைத்திருக்கிறது என்றார். பிறகு யாவருக்கும் சந்தனம் தாம்பூலம்வழங்கப்பட்டது.

* * *

அம்மா! அப்பா வந்துட்டார்' என்று உரக்கக் கத்திய வண்ணம் ஓடி வந்த பிரதிபா வைக் காரிலிருந்து இறங்கிய ராஜா தூக்கி முத்த மிட்டுக் கொஞ்சியவண்ணம் தன் அறையில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

அடுத்த நிமிஷம் காப்பி டம்ளருடன் அருகே வந்து நின்ற ஹேமா 'இதென்ன சோர்வாக இருக்கிறீர்களே? காரணம்?'

'காப்பியை வாங்கி இரண்டு வாய் உறிஞ்சி விட்டு. அம்மாடி' என்று சொல்லும் பொழுதே மடி மீது உட்கார்ந்திருந்த பிரதிபா அவன் வாங்கி வந்த பொம்மையைக் காட்டி 'அப்பா' இதை எப்படித் திருக வேண்டும்?' என்றாள். அதைத் திருகிக் காட்டிக் கீழே விட்டான். அத னுடன் விளையாட மடியை விட்டுக் கீழே இறங்கி விட்டாள் குழந்தை. 'தொடர்ந்து பத்து நாட் கள் உன் கையினால் கொடுக்கும் காப்பி சாப் பிடாமலும், குழந்தையையும் உன்னையும் பார்க் காமலுமிருந்ததே காரணம்' என்றான்.

'இன்றும் வராமலிருந்து விடுவீர்களோ வென்று மிகுந்த கவலையாக இருந்தது,'

'ஏன்?'

'ஏன்? இன்று நமது கல்யாணம் நடந்து சரி யாக ஒரு வருஷமாகிறதல்லவா. அந்தத் தேதி யில் நாம் பிரிந்திருக்கக்கூடாது என்பதே.'

'இன்னும் தங்கினால் தேவலை என்பது தான் அவர்களது அபிப்பராயம். மஹா நாட்டின் முக்ய வேலையாகிவிட்டது. வேண்டுமானால் நான்கு நாள் கழித்து வருகிறேன், என்று சொல்லிப் புறப்பட்டேன். உன் வேண்டுகோள் வீணா குமோ? அது சரி, அம்மா என்று வருகிறாள்? ராமநவமிக்கு ஊருக்குப் புறப்பட வேண்டுமே?'

'இன்று சாயங்காலம் வந்துவிடுவார். இரண்டு நாளில் புறப்பட வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருக்கிறார். உத்ஸவம் இவ்வருஷம் பிந்தி விட்டது. முதலில் அம்மா போனால், பிறகு தான் நாம் போக முடியும் போலிருக்கிறது.'

'ஏன்?'

'இது வரையிலுமில்லாதவிதம் ஒரு விஷயம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.'

'என்ன? பீடிகை பலமாகப் போடுகிறாய். விஷயத்தைச் சொல்லு. என்னிடம் கூடத் தயங்க வேண்டுமா ஹேமா' என்று அவள் கையைப் பற்றித் தன் பக்கமிழுத்தான்.

'ஜட்ஜ் மாதவன்.........நிதிக்காக, என்னை நட னம் செய்யும்படி அவரே நேரில் வந்து கேட்

டார். உங்களுக்குக் கடிதம் எழுதிக் கேட்கக் கூட அவகாசமில்லை. நான் நீங்களின்றி இது வரை ஒத்துக்கொண்டதில்லை என்று சொல்லிப் பார்த்தேன். அதற்கு அவர், 'அவர் ஒன்றும் ஆக்ஷேபனை சொல்ல மாட்டார். கலை ஆர்வ முள்ளவர், மேலும் இந்த நல்ல காரியத்தில் பங்கெடுத்துக் கொள்ளுவதுபற்றி மிக்க சந் தோஷப்படுவார். 'இன்று நேற்று பழக்கம். உனது பத்தாவது வயதில் அரங்கேற்றம் நடக் கும் பொழுது தலைமை வகித்தது முதல் நானும் ராஜாவும் அந்தரங்க நண்பர்கள். உலகம் அவர் கொள்கையைப் பரிகசித்த பொழுது, என் மனம் கொள்கையை ஆதரித்தது. அவரும் நானும் இது பற்றி எவ்வளவோ பேசியிருக்கிறோம். என் வேண்டுகோளை மறுக்கமாட்டார். நான் இன்றே முடிவு செய்து சொன்னால்தான் மற்ற ஏற்பாடு கள் குறிப்பிட்ட தினத்திற்குள் முடியும்' என் றார். நான் சொன்ன விஷயங்களுக்கெல்லாம் சமாதானம் சொல்லிவிட்டார். அதற்கு மேல் மறுத்தால் உங்கள் மீது தப்பபிப்பிராயம் கொண்டால்?.........என்று அம்மாவைக் கூட வைத்துக்கொண்டு ஒப்புக்கொண்டேன். ஒத் துக் கொண்டேனே தவிர மனம் சமாதானமடை யவில்லை' என்று நிறுத்தினாள்.

'பேஷ்! பேஷ்! இனி என் உதவியின்றியே கலைத்தொண்டு செய்யலாம் போலும். மற் றொன்று யார்?'

'அதுவும் அவருடைய ஏற்பாடுதான்.' இது பற்றி என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்' என்றாள்.

'எதற்காக மன்னிப்பு?' என்று கேட்டானே தவிர மனம் சிந்தனையிலீடுபட்டது. இன்ன தென்று சொல்ல முடியாத வேதனை. 'என்னைக் கேட்காமல் எப்படி ஒத்துக் கொண்டாய்?' என்று கேட்க வேண்டும் போன்ற உணர்ச்சி. ஆனால் ஓர் லக்ஷ்ய புருஷனின் கேள்வியா அது' என்ற உணர்வும் உடன் தோன்ற, விளையாடும் குழந் தையையே உற்றுப் பார்த்த வண்ணமிருந்தான்.

'இவனது மௌனத்தைக் கண்டதும் அவள் மனம் துணுக்குற்றது, 'என்ன? பேசாமலிருக்கி றீர்களே, என் மீது கோபமா?' என்றாள்.

'கோபமா? எதற்கு? பிரதிபா விளையாடுவதை விட அந்தப் பொம்மையின் அமைப்பு எப்படி என்று திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண் ருக்கிறாள் பார். அதைக் கவனித்தேன்;'

'ஆமாம், அவள் மனம் அங்கேதான் செல்லு கிறது. டாக்டருக்கோ எஞ்சினீருக்கோ படிக்க வைக்கலாம் என்று சில சமயம் நான் நினைத்துக் கொள்ளுவேன்'

'சரிதான்' இஞ்சினீர் ஒன்றுக்குத்தான் இது வரை பெண்கள் போட்டியிடவில்லை. நீ அதற் கும் தயாராகிவிட்டாய் போலும்' என்று சிரித் துக் கொண்டே கூறியபடி தன் பக்கத்தில் உட் காரும்படி இழுத்தான்.

'ஸ், வேண்டாம். இப்பொழுதே சாம்பு வந் தாலும் வரலாம். பூட்ஸைக் கழற்றிவிடுகிறேன். சற்றுப் படுத்து இளைப்பாறுங்கள்' என்று காலடி யில் உட்கார்ந்து கழற்றியபடி, 'நீங்கள் இந்த மாதிரி இடங்களில் தனியாக உட்கார்ந்திருக் கும் பொழுது வர வர வருவதற்கே பயமாக இருக்கிறது' என்று சிரித்தவாறு கூறினாள்.

'ஏண்டியம்மா அப்படி? பேயா பிடித்திருக்கி றது?'

'ஆமாம் ஒருவிதத்தில் அப்படித்தான். ஐந்து வருஷ காலம் பழகிய ராஜாவுக்கும், இப்பொழுது ஒரு வருஷ காலமாக இருக்கும் ராஜாவிற்கும் ஏணி வைத்தால் கூட எட்ட முடியாது போலி ருக்கிறது. மனதை மயக்கும் நிலவொளியில் பக்கம் பக்கமாக உட்கார்ந்து பேசும்பொழுது கூட ஒருவர் கை மற்றவர் மீது படாமல் ஐந்து வருஷம் (மூன்றே தடவை கேள்வி கேட்டிருக் கிறீர்களே அதைத் தவிர) எப்படிக் கழித்தீர் கள் என்று எனக்கு நினைக்க ஆச்சர்யமாக இருக்கிறது. கன்னத்தில் அன்றிரவு அடித்த துமே இந்தப் பேய் உங்கள் மனதில் புகுந்து விட்டது போலும். பக்கத்தில் வந்தால் கை பிடிப்பது என்பது சர்வசகஜமாகிவிட்டது. உட் காரும்படி வேறு. யாரும் வருகிற இடம் திடீ ரென வந்துவிட்டால்? என் மனம் குன்றிப் போய் விடுகிறது.'

'மனிதனுக்குக் கட்டுப்பாடு என்பது தான் உறுதி கொடுக்கும். என் மனம் அதில் அடங்கி என் வசத்திலிருந்தது. என்றைக்கும் இருந்திருக் கும். அன்று இரவு மனம் வசமிழந்ததற்குக் காரணம் நீ தான். மற்றப் பேர் சொல்லில் என் மனம் மாற முடியாது. அழுதவாறு மடமட வென்று பேசினாயல்லவா? அந்தச் சொற்களும் உன் முகமும் என் மனதை அடியுடன் மாற்றி விட்டன. கட்டுப்பாடு சிதறிவிட்டது. அதனா லென்ன? யார் பார்த்தாலென்ன? கணவன் மனைவி தானே?'

'கணவன் மனைவி என்றாலும்?'

'சரி, தேவி. உன் உத்தரவுப்படி நடக்கிறேன்' என்று விளையாட்டாகப் பேசினாலும் இருவர் மனதிலும் சொல்ல முடியாத ஓர் வேதனை. ஸ்னானம் சாப்பாட்டை முடித்துக்கொண்டே இளைப்பாறல் தூக்கமெல்லாம்' என்று எழுந் தான்.

'ஒரு விசேஷம் மறந்துவிட்டேனே. மூர்த்தி யும், எனது பார்ட்டனர் மஞ்சுளாவும் கல்யா ணம் செய்து கொள்ளப் போகிறார்கள், நட்டுவ னரின் சம்மதத்துடன்'

'சபாஷ். சரியான ஜோடிதான். ஆட்டமும் பாட்டும் ஒன்று சேர்ந்தால் அமைதியான வாழ்க்கை நடத்தலாம். இருவருமே நம்முடனிருப்பதில் உனக்கும் அம்மாவிற்கும் ஆக்ஷேபனையிருக்காது என்று நினைக்கிறேன்.'

'எங்களுக்கு ஆக்ஷேபனையில்லை. ஆனால் நட்டுவனார் நமது பக்கத்துச் சிறுவீட்டில் அவர்கள் தனியாக வசிக்க வேண்டுமென்று சொல்லுகிறார். அதிலிருப்பவர்கள் மாற்றிப் போகிறார்களல்லவா?'

'எனக்கு யாதொரு ஆக்ஷேபனையுமில்லை; சரி, வா போகலாம்' என்று அவள் இடுப்பில் கைபோட்டு இழுத்தான். இருவரும் சிரித்தார்கள்' கலை ஆர்வம் கொண்டவன்' என்று அவன் நண்பர்கள் யாவரும்! அவனைப் படக் கமிட்டியில் முக்ய மெம்பராக நியமனம் செய்து விட்டார்கள், கல்யாணமாகி ஒரு வருஷம் அமைதியும் ஆனந்தமுமான வாழ்க்கை நடத்தினார்கள். வருஷக் கடைசியில் இப்பதவி யேற்றதும், அடிக்கடி வெளியூர் செல்ல வேண்டியிருந்தது. வக்கீல் தொழிலிலும் பிரபலம் அதிகமாயிற்று. யாவும் ஹேமாவின் அதிஷ்டமென்று சொல்லிக் கொண்டார்கள். என்றாலும் தம்பதிகளுக்கு அவ் விஷயங்கள் மன அமைதியைக் கொடுக்கவில்லை. எல்லா இடங்களுக்கும் ஹேமாவை அழைத்துச் செல்ல முடிவதில்லை. மேலும் குழந்தையைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்ட படியினால் அவளை விட்டு வர ஹேமாவிற்கே மனமில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில், இவர்களின் குழுவினர் சில சமயம், பார்வதி பரிணயம், மேக சந்தேசம், சாகுந்தலம், வாசவதத்தா முதலிய நாட்டிய நாடகங்கள் நடத்துவார்கள். அதில் ஹேமாவிற்குத் தான் முக்யஸ்தானம் என்று சொல்லத்தேவை இல்லை. அந்தக் குழுவிலிருந்த இரு பெண்கள் விவாகமாகி அயல் நாடு சென்று விட்டபடியினால் புது ஆள் சேர்க்கப் பழக்க வேண்டியிருந்தது. நட்டுவனாருக்கு வேலை அதிகமாகவே, அவர் ஹேமாவின் உதவியை நாடினார். அந்தச் சமயம் அவளுக்கும் ஆர்வம் தோன்றினது.

இது வரை வசைச் சொல்லின் வேதனை மனதை அரித்து வந்தது. இப்பொழுது யார் என்ன சொல்ல முடியும்? கணவன் மனைவி. எங்காவது இருவரும் புறப்படுவதாக இருந்தால் முன்பெல்லாம் 'போகவேண்டுமே' என்று சோர்வு தோன்றும். இப்பொழுது குழந்தையுடன் அவனோடு புறப்படுவதால் மனதிற்கு எவ்வளவு ஆனந்தம்? கண் நிறைந்தகணவன், தங்கவிக்ரஹம் போன்ற குழந்தை, நினைத்தபடி செலவு செய்யப், பொருள், அரண்மனை போன்ற பங்களா, கார், குடும்பபாரத்தை வஹிக்க மாமியார். இவ்வளவும் அமைந்திருக்கும் பொழுது மனதில் சந்தோஷம் தாண்டவமாடுவது வியப்பல்லவே. ஆனாலும் அவன் அடிக்கடி வெளியூர் செல்லவாரம்பித்ததும் அவளுக்கு மனஅமைதியில்லை. அந்தச் சமயம் நட்டுவனார் அவளின் உதவியை நாடியது அவளுக்கு மன அமைதியைக் கொடுத்தது. வேண்டுமென்று செய்வது போல், அவர்களது கோஷ்டி நடனமும் ஹேமாவின் பரதநாட்டியமும் அடிக்கடி நடக்க ஏற்பாடாயின. இதனால் அநேகமாகப் பகல் பொழுது நாட்டிய சாலையிலேயே கழிந்தது. ஹேமாவிற்கு ராஜா ஊரிலிருக்கும் சமயங்களில் கூட அவ்விதம் செல்ல வேண்டிய அவசியம் நேரிட்டு விட்டது. ஒருநாள், மத்யானம் சென்று விட்டு மூன்றுமணிக்கு வீடு திரும்பிவிட்டு, அன்று ஸ்டேஜில் இயற்கையாக ஒத்திகை நடத்தப் போவதால் மறுபடியும் போக வேண்டியிருந்தது. இவள் புறப்படும் சமயம் ராஜா வந்தான். அவனுக்கு டிபன் காப்பி எடுத்துச்சென்றவளிடம்,

'உடுத்தித் தயாராக இருக்கிறாய், புறப்படலாமா?' என்றான்.

'எங்கே?'

'நாம் உலாவச் சென்று பத்துநாளைக்கு மேலாகி விட்டது. இன்று பீச்சுக்குச் செல்ல வேண்டுமென்ற திட்டத்துடன் வந்தேன். என் மனதை அறிந்தவள் போல் தயாராகி விட்டாய்'

இப்பதில் அவளைத் திடுக்கிடச் செய்தது. சற்றுநேரம் அவனையே பார்த்தபடி நின்றாள். என்ன பதில் சொல்லுவது? என்ற நினைப்பில். 'என்ன? ஒருமாதிரியாகப் பார்க்கிறாய்? புறப்படுவதில் ஆக்ஷேபனையுண்டா?'

'ஆமாம்' என்றாள் நாக்குழற.

'காரணம்?'

'மன்னித்துவிடுங்கள்' என்று விஷயத்தைக் கூறிவிட்டு, நீங்கள் போகும் பொழுது சொல்லி இருந்தால் இந்த ஏற்பாட்டை நாளை வைத்து இருக்கும்படி சொல்லியிருப்பேன். இன்று எல்லாம் ஏற்பாடாகிவிட்டன. இப்பொழுது உங்கள் மனப்படி வரமுடியவில்லை என்று கலங்குகிறது' என்று சொல்லியபடி அவன் அருகில் சென்று இருதோள்களிலும் கையைவைத்து, இன்று நீங்களும் என்னுடன் வந்தால் யாவரும் சந்தோஷப்படுவார்கள். ஏன்? நீங்களும் விரும்பும் விஷயந்தானே?'

அவன் மனம் அன்று உலாவச் செல்லவே விரும்பியது, என்றாலும் ஹேமாவின் பணிவான வேண்டுகோளை மறுக்கவும் மனம் தயாராக இல்லை. 'சரி அங்கேயே செல்லுவோம். ஆனால் நாளை நீ வேறு ஒரு காரியமும் ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது. இப்பொழுது கொஞ்ச நாட்களாக முன்போல் நாம் நினைப்பதைச் செய்ய முடியாமல் போய்விடுகிறது. காரணம் நமக்கே புலப்படமாட்டேனென்கிறது.'

'காரணம் புலப்படாமலென்ன? பொது வேலையில் பங்கெடுத்துக் கொண்டால் சுயநலம் பாதிக்கப்படுவது இயற்கை தானே?'

'இதனால் உன் மனதில் மாறுதலொன்றும் ஏற்படவில்லையா?'

'உற்சாகமே தோன்றுகிறது. அதுவும் உங்களின் அன்பினால் தான் ஏற்பட்டது. ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்? உங்கள் மனதிற்குச் சமாதானமில்லையா?'

'வேலை செய்யும் பொழுது உற்சாகமாகத்தானிருக்கிறது. ஆனால் அதனால் நமது பிரிவு அதிகமாகும் பொழுது அலுப்புத் தோன்றிவிடுகிறது.'

'அப்படியானால்உங்கள் கலையார்வம் குறைந்து வருகிறதா? கலை தானே உங்கள் உயிர் நிலை?'

'ஆம், கலைதான் உயிர்நிலை. நீ தான் கலை. கலை தான் நீ. என்றே என் மனம் எண்ணுகிறது' என்ற பேச்சை முடித்துவிட விரும்பி, 'வா போகலாம்' என்று எழுந்திருந்தான்.

மேலே பேச்சு வளர்ந்தால் மனநிலை வெளிப்பட்டு விடுமென்று புறப்பட்டாளே தவிர, அன்று உண்மையில் அவள் மனம் ஆட்டத்தை ரசிக்க முடியாது போலிருந்தாலும், அங்குச் சென்ற பின் மனம் அமைதி பெற்றுவிட்டது.

முன்பெல்லாம் இருவரும் ஒரு துறையில் பங்கெடுத்துக் கொண்டதினால் மனதில் வேற்றுமைக்கே இடமில்லாமலிருந்தது. ஏற்கனவே கேட்ட வசைச் சொல்லிற்குத் தூபம் போட்டது போலாகக்கூடாது என்று அவளாக ஒன்றுமே செய்யமாட்டாள். இப்பொழுது கல்யாணமாகிவிட்டது. நிம்மதியாக எந்த வேலையையும் செய்யத் துணிவு தோன்றிவிட்டது. அவன் படக்கமிட்டி மெம்பரானதும், இருவரும் பிரிந்து வேலை செய்யும்படி ஏற்பட்டுவிட்டது. ஸ்ரீநாத சர்மாவின் இரண்டாவது பரிசும் பெற்ற பின்பு அவள் புகழ் பதின் மடங்காகப் பெருகினது. நட்டுவனாருக்கோ அதற்கு மேல் புகழ். அந்தப் பெருமையில் அவர் சமாளிக்க முடியாதபடி மாணவிகள் வந்து குவிந்தனர். ஹேமாவும் உற்சாகமாக அவர் வேலையில் பங்கு கொண்டாள். கல்யாணமாவதற்கு முன்பிருந்த குடும்பப் பொறுப்பு இப்பொழுது அறவே அகன்றுவிட்டது. குழந்தையின் பராமரிப்பை மட்டுமே கவனிக்க முடிந்தது. முதலில் கொஞ்ச காலம் ராஜா செல்லுமிடத்திற்கு, அவளையும் குழந்தையையும் அழைத்துச் சென்று வந்தாள். நாளாக நாளாக அவன் கூப்பிடும் சமயம் புறப்பட முடியாதபடி நாட்டியம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். எந்த நிதிக்கும், ஹேமாவின் தனி நாட்டியமோ குழுவினர் நாட்டிய நாடகமோ, ஹேமாவின் பெயர் சொல்லிவிட்டால் வசூல் எதிர் பார்த்ததற்கு மேல். ஹேமாவோ ஓர் தம்பிடி கூட வாங்கமாட்டாள். அதனால் நிதிக்கு நாட்டியமாடுவதே மாதத்தில் நாலைந்து தடவைக்கு மேலேயே ஏற்பட்டு வந்தது. இதில் வெளியூருக்குச் செல்லவும் வேண்டிவரும். அவன் தன்னுடன் அழைத்துச்செல்ல விரும்பும்பொழுது இவளுக்கு இன்னொரிடத்திற்குப் போக வேண்டியிருக்கும். ஆரம்ப காலத்தில் அவனில்லாமல் அவள் ஒத்துக் கொள்ளும் நாட்டியம் குறைவாக இருந்தது. வர வர, அவனிருந்து ஒத்துக் கொள்ளும் நாட்டியமே குறைவு என்ற நிலைமை ஏற்படலாயிற்று. ராஜாவின் அநுமதியை அவள் எதிர்பார்க்காமலேயே சென்று வரலானாள். இப்படி நேரும் பொழுது அவன் மனம் மிக்க வேதனையடையும். அவள் 'அப்படித்தான் செய்வேன்' என்று எதிர்த்துப் பேசினால் பளிச் சென்று என்னிஷ்டத்திற்கு விரோதமாக நடக்கக் கூடாது. என்று கண்டிக்கலாம்' என்று தோன்றும். ஆனால் அவளிடத்தில் காணும் பணிவு வாய்க்குப்பூட்டுப் போட்டு மனதைச் சமாதானம் செய்துவிடும்.

'உன்னை என்னுடன் அழைத்துப் போக விரும்பினேன். நீ.........'

'எனக்கும் உங்களுடன் வரவே விருப்பம். தானே வலையில் சிக்குவதுபோல் ஒத்துக் கொண்டாய் விட்டது. மனம் சஞ்சலமடைகிறது. நீங்கள், மனமில்லையென்று சொல்லி விட்டால் என் பொறுப்புத் தீர்ந்துவிடும். இந்தத் தடவை விட்டுவிடுங்கள். இனிமேல் மெல்ல விலகப் பார்க்கிறேன். சம்மதந்தானா?' என்று அவன் தோள்களைப் பற்றிய வண்ணம் முகத்தருகில் குனிந்து கேட்கும் பொழுது உள்ளம் குழைந்து விடும். நமது லக்ஷ்யம் அவள் நடனந்தானே என்றநினைப்புத்தோன்றும். அவ்வளவே, அவளைக் கூட நின்று அனுப்பிவிட்டுப் பிறகு தான் செல்லுவான்.

(அடுத்த இதழில் முடியும்)

# விஞ்ஞானத் துணுக்குகள்

நா. கி. நாகராசன்

## வலிவூட்டிய வைக்கோல்

மேல்நாடுகளைப் போலன்றி நம்நாட்டுக் கால்நடைகளின் தீவனத்தில் வைக்கோலே முக்கியப் பகுதியாக உள்ளது. கால்நடைகள் இதை ஜீரணிப்பது கஷ்டம் என்பதோடு இதிலுள்ள உலோகப் பொருள்களை அவை பூரணமாக ஏற்க முடியவில்லை. இக்குறைகளைத் தவிர்க்க இஸ்ஸத்நகரிலுள்ள கால்நடை ஆராய்ச்சிக்கழகத்தில் ஒரு முறை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தண்ணீரில் 1% சோடாக் காரத்தைக் கரைத்துப் பெரிய தொட்டிகளில் இட்டு அதில் வைக்கோலை ஊறவைத்து, 24மணி நேரத்திற்குப்பின் அதை வெளியில் எடுத்து, நீரில் நன்ருகக் கழுவி, உலர்த்தி இந்த வைக்கோலைக் கால்நடைகளுக்குப் போட்டு வந்தார்கள். இதனுல் வைக்கோலிலுள்ள உணவுச் சத்துக்கள் 45% அதிகமாக ஜீரணமாவதைக் கண்டார்கள். இந்த வைக்கோலை உண்டு வளர்ந்த கன்றுகள், சாதாரண வைக்கோலை உண்டவைகளைவிடச் சுமார் முக்கால் பங்கு அதிக வளர்ச்சி பெற்றன. சோடாக்காரத்தில் ஊறவைப்பதற்குப் பதிலாக வைக்கோலைச் சுண்ணும்பு நீரில் ஊற வைப்பதினுலும் நல்ல பயன் விளைகிறது எனக் கண்டிருக்கிருர்கள். இப்பொருள்கள் எதுவும் இல்லாமல் வைக்கோலைச் சாதாரண நீரில் ஊற வைத்து, உலர்த்துவதாலேயே அதிலுள்ள ஜீரணமாகாத பொருள்களில் பெரும்பகுதி அகற்றப்பட்டுவிடுகிறது.

## குழாயிலிருந்து கொட்டும் நிலக்கரி!

வீட்டிலுள்ள குழாயைத் திருப்பினுல் அதிலிருந்து தண்ணீர் கொட்டுவதைப் போலவே தொழிற்சாலையிலுள்ள குழாயிலிருந்து நிலக்கரி கொட்டும் காலம் வந்துவிட்டது! சுரங்கங்களிலுள்ள நிலக்கரியைத் தொழிற்சாலைகளுக்கு அனுப்ப அதிகமாகச் செலவாகிறது. இதைக் குறைக்கப் பல முறைகள் ஆராயப்பட்டு வருகின்றன. நிலக்கரியைச் சிறுகட்டிகளாக உடைத்து அதை நீருக்குள் இட்டு அந்நீரைக் குழாய்களின்வழியே அனுப்பும்முறை பிரான்சில் வழக்கத்திற்கு வந்துள்ளது. இம்முறையில் நிலக்கரியை அனுப்ப ஒரு டன்னிற்கு ஓர் அணுவிற்கும் குறைவாகச் செலவாகிறது. தற்காலத்தில் பெட்ரோலியம் எண்ணெய்க் கிணறுகளிலிருந்து எடுக்கப்பட்டு நூற்றுக் கணக்கான மைல் தொலைவிற்குக் குழாய்களின்வழியே அனுப்பப்பெறுகிறது. நிலக்கரியும் இதேவகையில் வருங்காலத்தில் அனுப்பப்படலாம். இங்கிலாந்திலுள்ள மின்னுக்க நிலையம் ஒன்றில் சாம்பலை அப்புறப்படுத்த அது நீரில் கலக்கப்பட்டுக் குழாய்களின் வழியே 3½மைல் தொலைவு அனுப்பப்பட்டு, பெரும் குழிகளுக்குள் கொட்டப்படுகிறது.

## உயிர் காக்கும் தையல் எந்திரம்

ரஷ்யவிமானக் கலை நிபுணரான கூடோவ் (Gudov) என்பவர் புதுவகைத் தையல் எந்திரத்தைக் கண்டு பிடித்திருக்கிருர். துணி தைப்பதற்குப் பதில் இது உடைந்துபோன ரத்தக் குழாய்களைத் தைக்கிறது! 1941இல் விமானப்படையின் வேலை நிமித்தம் கூடோவ் ஒரு பிரயாணம் செய்துகொண்டிருந்தார். அவர் சென்ற வண்டியில் போரில் காயம்பட்ட வீரர்கள் பலரைக் கண்டார். அவர்களைக் கண்காணித்த தலைமை மருத்துவரை இவர் சந்தித்துப் பேசினுர், "காயங்களால் இவர்கள் பலருடைய ரத்தக் குழல்கள் அறுந்துபோயிருக்கின்றன. அவற்றைத் தைக்க நெடுநேரம் செல்லும். இந்த நிலையில் இவர்களது உயிருக்கே இதனுல் ஆபத்து நேரலாம். ஆகையால் அதைவிட இவர்களது கை கால்களை வெட்டுவதே மேல் என்று முடிவு நேரலாம்" என்று மருத்துவர் கூறினுர். அது முதல் ரத்தக் குழல்களை விரைவில் செப்பனிடும் எந்திரத்தை அமைப்பதில் இவர் ஈடுபட்டார். ஐந்தாண்டுகள் உழைத்தபின்னர் இவர் சாதாரணச் சித்திரத் தையல் ஊசிபோன்ற எந்திரத்தைக் கண்டு பிடித்தார். இது நொடிப்பொழுதில் பல ரத்தக் குழல்களை மெல்லிய உலோகக் கம்பியினுல் தைத்து விடுகிறது. ரஷ்ய ஆஸ்பத்திரிகளில் இக்கருவி இப்போது வழக்கத்தில் உள்ளது. முன்னர் முடமாகவும், நொண்டியாகவும் ஆகவேண்டிய பலர் இப்போது இக்கருவியினுல் அங்கஹீனம் அடையாது தப்புகிருர்கள்.

## எறும்புகளின் ராஜபோகம்!

எப்போதும் சமையற்காரன் இருக்கும் வீடுகளில் உள்ள சீமாட்டிகளுக்குச் சமையற் கலையில் பழக்கமே இல்லாது போவது இயற்கைதானே. ஏதாவதொரு அசந்தர்ப்பத்தினால் சமையற்காரன் வராது போய்விட்டால் வீட்டிலுள்ளவர்கள் பாடு திண்டாட்டமாகப் போய்விடுகிறது! அமெசான் நதி தீரத்தில் வாழும் ராட்சஸ எறும்புகள் தம்மைவிடச் சிறிய வேறு எறும்புகளைப் பிடித்துவந்து தமக்குக் குற்றேவல் புரியும் அடிமைகளாக ஆக்கிக் கொள்கின்றன. இந்த அடிமைகள் தமது எஜமானருக்குத் தேவையான இரையைத் தேடிவந்து அதைமென்று அவற்றிற்கு ஊட்டுகின்றன! வழிவழியாக இந்த ராஜ போகத்தில் வாழ்ந்துவரும் இவ்வெறும்பு களின் உடலமைப்பே மாறிவிட்டது. இதனால் இவை தாமாக உணவைப் பொறுக்கி எடுத்துத் தம்வாய்க்குள் போட்டுக் கொள்ளும் திறமை அற்றவை. ஆகையால் ஏதோவொரு காரணத்தால் அடிமைகள் இல்லாமற் போய்விட்டால் இந்த எறும்புகள் பட்டினி கிடந்து சாக நேருகிறது! அரச வாழ்விலும் தொல்லைகள் இருக்கத்தான் செய்கின்றன. சமையற்காரனையும், வேலைக் காரனையுமே நம்பி இருந்தால் பட்டினி கிடக்க நேரிடும்.

## மாய மருந்து மலிவாகியது

முடக்கு வாதம் போன்ற நோய்களுக்குச் சில ஆண்டுகளுக்கு முன் கார்டிஸோன் (Cortisone) என்ற மருந்து கண்டுபிடிக்கப் பட்டது. எருதுகளின் பித்தப் பையிலிருந்து தயாரிக்கப்படும் இம் மருந்து மிக விலையுயர்ந் தது. ஒருவரது சிகிச்சைக்குத் தேவையான மருந்தைப் பெறப் பலநூறு எருதுகளின் பித்தப் பைகள் தேவையாகின்றன! ஆகை யால் இதற்கு எவ்வளவு செலவாகும் என விளங்கும். சிலமாதங்களுக்கு முன் என் நண்பர் ஒருவர் தம் தங்கைக்கு இந்தச் சிகிச் சையைச் செய்தார். அவளது நோய் குண மாகுமுன் சுமார் 2000—ரூபாய் செலவா யிற்று! மலிவான வேறொரு முறையில் இதைத் தயாரிக்க அமெரிக்காவில் வழி கண்டுபிடித்திருப்பது மகிழ்ச்சிதரும் செய்தி யாகும். ஊசிப்போன உணவுப் பொருள் களின்மேல் தோன்றி வளரும் பூஞ்சை (Mould) ஒன்றிலிருந்து இதைத் தயாரிக்க முடியும் என்று கண்டிருக்கிறார்கள். இத னால் இதன் விலை நூற்றிலொரு பங்காகக் குறைந்துவிடக் கூடும். இம் முறையில் இந்த மருந்தைப் பெரிய அளவில் தயாரிக்க அமெரிக்காவில் 16 லட்ச ரூபாய் செலவில் ஒரு தொழிற்சாலை நிறுவப்பட்டு வருகிறது. வாத நோய்களுக்கு மாய மருந்தாகப் பயன் படும் கார்ட்டிஸோன் ஏழை எளியவர்க்கும் பயன்படும் காலம் விரைவில் வருமென எதிர் பார்க்கலாம்.

## "டெலிபோன் சமையல்"

பெர்லின் நகரில் மணம் செய்துகொண்டு புதுக் குடித்தனம் நடத்தும் பெண் களுக்கு இனிச் சமைக்கத் தெரிய வேண்டிய தில்லை! அவர்கள் டெலிபோனில் குறிப்பிட்ட தொரு நம்பரைக் கூப்பிட்டாலே போதும். அது தானாக இயங்கி அன்றைக்குச் சமைக்க ஏற்ற சில பதார்த்தங்களின் பெயர்களைச் சொல்லி அவற்றைத் தயாரிக்கும் முறையை யும் கூறிவிடுகிறதாம்! இத்தகைய "டெலி போன் சமைய"லைச் சாப்பிட நேர்ந்த கண வன்மாரது கதியைப்பற்றி இதுவரை ஒன் றும் தெரியவில்லை! இதில் இன்னொரு ஆபத் தும்கூட. சில சமயங்களில் டெலிபோனில் ஒரு நம்பரைக் கூப்பிடப்போய்த் தவறான நம்பர் பிணைக்கப்பட்டுவிடுவதுண்டு, காத லிக்காக ஏங்கியிருக்கும் ஒரு இளைஞன் தன் காதலியைக் கூப்பிடப்போக தவறுதலாக, 'சமையல் நம்பர்' கிடைத்துவிட்டால் என்ன நேரும் என்று யோசித்துப் பாருங்கள்! நம் பர் கிடைத்ததும் ஹைதராபாத் ஹல்வா வும், பாலக்காட்டு போண்டாவும் செய்யும் முறை அவன் காதில் விழுந்தால் அவன் விஷ யந் தெரியாமல் தன் காதலிக்குப் பைத்தி யம் பிடித்துவிட்டது என்றுதானே நினைப் பான்? எந்திர நாகரிகத்தின் போக்கே விசித்திரந்தான்!

## பிறவிக்குணம் போச்சு!

மனிதர்களது பிறவிக் குணத்தைப்போல் சில பொருள்களுக்கும் இயற்கையாக அமைந்துள்ள பண்புகள் உண்டு, ரப்பர் வெப்பத்தையும், மின்சாரத்தையும் கடத்து வதில்லை. இதனால்தான் மின்சாரத்தைக் கடத்தும் கம்பிகளுக்கு ரப்பர் உறைபோடப் படுகிறது. ஆனால் இப்பண்பு சில சமயங் களில் ஒரு குறையாகப் போகிறது. விமா னத்தின் கீழுள்ள சக்கரங்களில் மின்சாரம் தோன்றுகிறது, ரப்பர் மின்சாரத்தைக் கடத்தாத பொருளாகையால் இது சக் கரத்தைவிட்டு அகலாமல் அதிலேயே தங்கி

விடுகிறது. பறக்கும் விமானம் கீழறங்கித் தரையை அடையும்போது இந்த மின்சாரத் திறல் பொறிகள் தோன்றி தீ விபத்திற்குக் காரணமாகலாம். மோட்டார் வண்டிகளின சக்கரங்களில் தோன்றித்திறனும் மின்சாரத்திறலும் தீ விபத்தும், பிரயாணிகளுக்கு அதிர்ச்சியும் நேரலாம், டயரில் ரசாயன விளைவுகள் நிகழ்ந்து அதுவெடித்து விடுவதுண்டு. இத்தொல்லைகளைத் தவிர்க்க ரப்பரின் பிறவிக்குணத்தைப் போக்கி, அது மின்சாரத்தைக் கடத்துமாறு செய்வது அவசியமாகிறது. ரப்பருடன் கரித்தூளைக் கலந்து, அது மின்சாரத்தைக் கடத்தும் பண்புள்ளதாகச் செய்கிறார்கள், இத்தகைய ரப்பரை மேற்கூறிய பயன்களுக்கும் வேறு பலவகைகளிலும் பயன்படுத்துகிறார்கள்.

## மரத்தூள் தரும் மது

எல்லாவகைகளிலும் எதில்ஆல்கஹால் (Ethyl Alcohol)என்ற ரசாயனப்பொருள் உள்ளது; பல தொழில்களுக்கு இது இன்றியமையாத மூலப்பொருளாகும். நம்நாட்டில் இது கருப்பஞ்சாற்றிலிருந்து சர்க்கரையைப் பிரித்தெடுத்தபின் எஞ்சும் திரவத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது. இத்திரவத்திற்குப் பாணி (Molasses) என்று பெயர். பாணியிலிருந்து பெறும் ஆல்கஹாலைப் பெட்ரோலுடன் கலந்து மோட்டார்களுக்கு எரிபொருளாகப் பயன்படுத்துகிறார்கள். பெட்ரோல் வசதி குறைவான நம்நாட்டில் இது மிகப் பயனுள்ள பொருளாகும். ஆனால் இதன் விலையே இது அதிகமாகப் பயன்படாது தடுக்கிறது, ஆனால் இதை வேறொரு முறையில் தயாரிக்கத் தற்போது வழி கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. ஆல்கஹால் தயாரிப்பிற்கு மூலப்பொருளான பாணியைச் சர்க்கரை இல்லாமலே பெறும் முறையொன்று வகுக்கப்பட்டுள்ளது. இதில் கழிவுப் பொருள்களான மரத்தூள், மரச்சக்கை முதலியவை பாணியாக மாற்றப் படுகின்றன. பாணியிலிருந்து ஆல்கஹால் தயாரிக்கப்படுகிறது. சர்க்கரைப் பாணியிலிருந்து ஆல்கஹாலைத் தயாரிக்க ஆகும் செலவைப் போல் இதில் மூன்றிலொரு பங்கேஆகும். கழிவு மரத்திலிருந்து தயாரிக்கபடும் பாணி கால் நடைகளுக்குத் தீவனமாகவும் பயனாகிறது. மரத்தூளைக் கந்தகாமிலத்துடன் வினைப்படுத்திப் பாணி தயாரிக்கப்படுகிறது. இதை யொத்த முறையில் ஜெர்மானியர் மரத்தூளிலிருந்து சர்க்கரையையே தயாரித்த காலமும் உண்டு!

## தமிழகத்திற்கு ஒரு செய்தி

தென்னாட்டில் இரும்புத் தாதுக்கள் போதிய அளவு உள்ளன. ஆனால் இதிலிருந்து இரும்பைப் பிரித்தெடுக்கத் தேவையான நிலக்கரி வடக்கில்தான் உள்ளது. ஆகையால் இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழில் தமிழ்நாட்டில் தோன்றி வளரத் தற்போது வசதி இல்லாமல் உள்ளது, இரும்பைப் பிரித்தெடுக்க உயர்ந்த ரக நிலக்கரியுடன் அதைக்கலந்து பெரிய கோபுரம் போன்ற உலையில் அதை இட்டு அதைச் சுடுகிறார்கள். மட்டரக நிலக்கரியையும், மட்டரகத் தாதுக்களையும் இம்முறையில் பயன்படுத்த வழி இல்லை. ஆனால் பெல்ஜியம் நாட்டில் அண்மையில் செய்யப்பட்ட சில சோதனைகளிலிருந்து நமது ராச்சியத்திலும் இத்தொழிலைத் தொடங்க முடியும் என்ற நம்பிக்கை தோன்றக்கூடும். உலையில் தாதுவைச் சுடும்போது அதற்குள் ஆக்சிஜன் வாயுவைச் செலுத்தினால் கரியானது இன்னும் சீராக எரிந்து உயர்ந்த வெப்பம் தோன்றும் என்று அங்குக் கண்டார்கள். ஆகையால் மட்டரகக் கரியும் இதற்குப்போதுமானது, தென்னார்க் காடு ஜில்லாவில் கிடைக்கத்தக்க பழுப்பு நிலக்கரியைக் கொண்டே இம்முறையில் இரும்பைப் பிரித்தெடுக்கலாம். இம்முறை வழக்கத்திற்கு வந்தால் சேலம்-விருத்தாசலம் ரயில்பாதை நாட்டின் கேந்திர வழிகளில் ஒன்றாக ஆய்விடும்!





# பட்ணம் பார்!

ஆர். பி. அய்யங்கார்

அனா விலாசம் இராது; ஆனால், 'ல' காரத்தில் முழங்குவார்கள். வானை வில்லாக வளைப்பார்கள், மணலைக் கயிறாகத் திரிப்பார்கள், கடையிசில் குறி மட்டும் கொரக்கலி வாங்கிவிடும். வெட்டிப்பேச்சுப் பேசியே பொழுதைப் போக்கும் இத் 'திண்ணைக் குத்தகைக்காரர்கள்' கிராமத்தோடு தங்கி விட்டதாக எண்ணியிருந்தேன். பட்டணத்துப் பீச்சிலும் பரவியிருக்கிறார்களென்பதைப் பார்த்ததும் எனக்குக் கிராமமே பலகோடி நூறாயிரம் மடங்கு தேவலையெனத் தோன்றியது.

அந்தி மங்க ஆரம்பித்ததும் திருவல்லிக்கேணி ரேடியோ பீச்சில் ஜேஜேன்னுகும்பல் சேர்ந்துவிடும். ஆங்காங்கே நான்கைந்து பேர்களாகக் கூடி உட்கார்ந்து அரட்டைக் கச்சேரிகளுக்கு ஸ்வரம் இழுப்பார்கள். தம்படிகாசு பெறாத சமாசாரமானாலும் வம்பர் மகாநாடுகளில் இடம் பெறாது போகாது. ஒன்றை ஒன்பதாக்கிப் பேசுபவர்களும் உண்டு. காது, மூக்கு வைத்துப் புரளி கட்டி விடுபவர்களுக்கும் குறைச்சலில்லை. சன்னக்குரலில் சாவகாசமாகப் பேசுபவர்கள் கடைசி வரையில் 'தாக்கு' பிடித்து, கச்சேரிகளுக்குக் களை கொடுத்துக்கொண்டிருப்பார்கள். ஓங்கியடித்துப் பேசிவிட்டு தொண்டை வறண்டதும் ஓய்ந்துவிடுவார்கள் சிலர். மகாநாடுகள்நடக்கின்றன என்பதற்குக் கோடையிடிக்காரர்களின் கூச்சல்தான் கொடி பிடித்துக்காட்டும். அக்கம் பக்கத்தில் நடமாடுபவர்கள் அனைவரும் அரை விநாடியாவது அத்தகைய பேர்வழிகளின் பிரசங்க 'மாரியில் நின்று 'நனையாமல்' நகரமாட்டார்கள். வாதப் பிரதி வாதங்கள் தடிக்கும் போது மகாநாடுகளில் முறுக்கேறும் கோபக் கனல் பறக்கும். 'தஸ்ஸு புஸ்ஸு'னு மேல் மூச்சு கீழ்மூச்சுவாங்க, சிலர் தாங்கள் பிடித்த முயலுக்குமூன்றேகாலெனஸ்தாபிக்க முனைந்து விடுவார்கள். ஹாஸ்ய வெடிகளைக் குத்தலாக விட்டெறிந்து எரிச்சலூட்டிய பின் பேசாமடந்தைகளாக மாறிவிடுவார்கள் வேறுசிலர். இந்த நிலைமையில் மகாநாடுகளே பேச்சுச்சூடு தாங்காது பொசுங்கஆரம்பித்து விடும். 'வம்பளக்க வந்த இடத்தில் வீண் சண்டை எதற்கு?' ஞானோதயம் பிறக்கச் சற்று நேரம் பிடிக்கும். பிறகு கோபம் தாபம் எல்லாம் தணிந்து மகாநாடுகள் இனிது கலையும். ஆண்டிகள் மடம் கட்டினாற் போல் கவைக்குதவாத பேச்சுகள்தான் முழுவதுமே. ஆனால் சமூகத்துக்கு அரட்டைக்கல்லிகளை உற்பத்தி செய்யும் இந் நித்ய மகாநாடுகள் யார் தடுத்தாலும், தடுக்காவிட்டாலும் நீடூழி வாழுமென்பதில் ஐயமென்ன?

வம்பளப்பவர்களுக்குப் பீச்சுக்கு வராமலிருந்தால் வீட்டில் தூக்கம் வராது. சுண்டல் விற்பவர்களுக்கோ அவர்களைக் காணாமல் போனால் கண் பூத்துவிடும். அநேகமாக, 'தேங்காய், மாங்காய்,' பட்டாணிச் சுண்டலை, சுவைத்துச் சாப்பிட்டு 'சபாஷ்'

சொல்லும் வாடிக்கைக்காரர்கள் அம்மகா நாட்டினரே, மெம்பர்களின் எண்ணிக்கையன்று, இரைச்சலே வம்பளப்ப வர்களது கும்பலே மகாநாடென விவரிக்கத் தூண்டுகிறதென்பதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். கைப்பிடி சுண்டலை கூர் பொட்டலமாகக் கட்டிக்கொடுத்து அரட்டைக்காரர்களுக்குச் சரிசமானமாக வாய்அடி அடித்துவிட்டு, காசை இடுப்பில் சொருகிக் கொண்டே விற்பனையாளர்கள் 'லொங்கு லொங்குனு' ஓடுவது ஓர் வேடிக்கையே. ஆனால்அவர்கள் பிழைப்பு அப்பேர்ப்பட்டது; குறைந்தது மூன்று மணி நேரமாவது ஓடி அலைந்தால்தான் ஓரிரு ரூபாயாவது கையில் காணமுடியும்.

சுண்டலை விட வறுத்த வேர்க்கடலை வியாபாரம் இன்னும் அதிக மும்முரம். பெரிய ஆட்களைவிட 'நண்டுசுண்டுகள்' நாலெட்டில் சுற்றித் திரிந்து கடலை முழுவதையும் மளமளவென விற்று விடுகின்றனர். சொல்வதென்னவோ சூடான வேர்க்கடலை, வாயில் போட்டுக்கொண்டால் தான் அதன் வண்டவாளம் புரியும்.

இவர்கள் எல்லோரையும்விட கொஞ்சம் கண்யமானவர்களோ 'பொடாடோ சிப்ஸ், நெய் முறுக்(கு), காஷ்யுனட்' என்று நாஸூக்காகக் கூவிய வண்ணம் நடந்து செல்கிறார்கள். ஓடுவதே கிடையாது. 'மரீனு' நெடுக நிறுத்தபட்டிருக்கும் கார்களை அணுகினால் இவர்கள் சரக்கு சுளுவாகப் பறந்து விடுகிறது. என்றைக்கும் வியாபாரம் சீராக இருக்க முடியுமா? ஒருநாள் இல்லாது ஒருநாள் சில பொட்டலங்கள் மிஞ்சிவிடும். மறு தினம் அவற்றை முதலில் தள்ளிக் காசாக்கிவிடவே முயற்சிப்பார்கள். யோக்யமாக உள்ளதைச் சொல்லி இவர்கள் விற்கலாம். ஆனால் ஜனங்கள் வாங்காமல் திரஸ்கரித்தால் நஷ்டப்பட ஏழைக்குத் திராணி ஏது?

ஞாயிற்றுக்கிழமை வந்து விட்டால் பட்ணம் பீச் அல்லோல கல்லோலப்படும். ஜனசமுத்திரம்அலைபாயும். நிஜசமுத்திரமோ எம்பிஎம்பிக் குதித்து எக்காளம் செய்வது போல் தோன்றும். குழந்தைகள் இதைக் கண்டு கும்மாளம் போடுவார்கள். வயதானவர்கள் முகத்திலோ குதூகலம் பொங்கும்.

இளம் தம்பதிகளோ இன்பலாகிரியில் இப்பிரபஞ்சத்தை மறந்து மிதப்பார்கள்.

விதம்விதமான வர்ணக்கார்கள் வரிசையாக 'மரீனு'வில் நிறுத்தப்படும் காட்சி கண் கொள்ளாக் காட்சியே. 'காடிலாக்', ப்யூக் கார்களில் ஹாய்யாக வரும் கனதனவான்கள் கீழே இறங்காமலேயே காற்று வாங்கு வார்கள். பணம் குவிந்தால் தேகம் சொகுஸை நாடுவதில் ஆச்சரியமென்ன? நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்து, தேகத்தில் 'வைரம்' பாய்ந்திருக்கும் பாட்டாளிகளை அலையடிக்கும் கரையண்டைதான் காணலாம். வேகமான குளிர்ந்த காற்றை வாங்கும் சக்தி அவர்களுக்கு உண்டு. பணக்காரர்களுக்கு இல்லை என்று சொல்லவில்லை, பருமனாக இருக்கலாம்; பூஞ்சையாக இருப்பார்கள், குளிர்ந்தகாற்று உள் சென்றால் மார்புச்சளி கட்டிக்கொள்ளும். வீணுக்கு வியாதியை வாங்காம விருப்பதற்காகத்தான் கார்களிலேயே தங்கி விடுகிறார்கள் போலும்!

பட்டணத்தைச் சுற்றிப் பார்த்து ஒருவர் அலுத்துவிட்டால் கடைசியாக அவருக்கு உற்சாக மூட்டக்கூடியது இக்கடற்கரையே. உலகிலேயே இரண்டாவது ஸ்தானம் இதற்குத் தரப்பட்டிருக்கிறது. இப்புகழ் நிலைக்குமா? எனக்குச் சந்தேகமே. காரணங்களை அடுத்த கட்டுரையில் காட்டுகிறேன்.

* * *

சந்தேகத்துக்கான காரணம் ஒன்றல்ல. முக்யமாக மூன்றைக் குறிப்பிட விரும்புகிறேன்.

பட்டணத்தில் பண டம்பத்தின் வெளித் தோற்றத்தைக் காண வேண்டுமானால் அடையாறு, தியாகராயநகர் வீதிகள் வழியே சென்றால் போதும். புது மோஸ்தரில் பல வித பங்களாக்கள் எழும்பி நிற்பதைச் சற்றே சிந்திப்போமேயானால் எவ்வளவு லக்ஷ ரூபாய்களை அவை ஏப்பம் விட்டிருக்கக் கூடுமென்பது புரியும். சினிமா வானில் ஜ்வலிக்கும் நக்ஷத்திரங்கள், வியாபாரத்துறையில் ராக்கட்வேகத்தில் முன்னேறியிருப்பவர்கள், ரிடயராகவிருக்கிற உயர்தர சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், பிரைவேட் கம்பனிகளின் ஸீனியர் அதிகாரிகள் முதலியோர் சொந்தத்தில் கார்களை வைத்துக்கொண்டு அப்பகட்டான கட்டிடங்களில் வாழ்கிறார்கள். அவர்களிடம் புதுப்பணம் புரண்டோடுகிறது. வற்றாது புரண்டோடட்டும், விக்கல் எடுக்காது அவர்களும் வாழ்ந்து பிறரையும் வாழவிடட்டும். இல்லை, வாழுவே

வைத்தால் இன்னும் விசேஷம், இது நிற்க, சரித்திரத்தின் பின் ஏட்டைப் புரட்டிப் பார்ப்போம். கட்டுமரங்களைக் கட்டிக் கொண்டு கடலில் மீன் பிடித்து ஜீவனம் செய்யும் செம்படவர்கள் இருக்கிறார்களே அவர்கள்தான் பட்டணத்தின் ஆதிகுடிகள் என்பது புலனாகும். பரம்பரை, பரம்பரை யாகச் சுவடு மாறாது அவர்கள் தொழில் புரிந்து வருபவர்கள். அசகாய சூரர்கள். 'அன்னிகண்ட மேனிக்கு அழிவில்லாமல்' இருந்தாலும் அடையாறு, தியாகராயநகர் வாசிகளைப்போல புதுப்பணம் அவர்க ளிடையே உருண்டோடுவதாகக் காணோம். மீன் காசு மடிமுடிச்சுக்குக்கூடப் போதாமல் 'கஞ்சித்தண்ணியை' குடித்துவிட்டுக் கடலே கதியெனக் காலட்சேபம் நடத்துகிறார்கள்.

அவர்கள் தினம் அதிகாலையிலே எழுந்து கடல் வேட்டை யாடக் கிளம்புவதையும் அந்திமங்கும் சமயத்தில் கரை திரும்பு வதையும் காண, கண் இரண்டு போதாது. பிஞ்சுக்காலூன்றும் குழந்தைகள்முதல் கழி பிடித்து நிற்கும் கிழவர்கள்வரை எல்லோரும் என்றென்றுமே வேடிக்கை பார்க்கக்கூடிய அதிசயக் காட்சியாகும். ஆனால் கட்டு மரங்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கரை சேரச் சேர, காற்று வாங்க மணலில் வீற்றிருக்கும் பல்லாயிரக்கணக்கான பொது மக்களுக்கு உபத்திரவம் உடலை உலுக்கி யெடுக்கும்.

செம்படவர்களது வலைகளில் விழுந்த மீன் களுக்குப் பிராணன் போய்ப் பலமணி நேர மாகிவிடுகிறபடியால் துர்நாற்றம் அவற்றி னின்று வீசத் தலைப்பட்டு விடுகிறது. புலால் உணவு புசிப்பவர்களானாலும் சரி, அதைப் புறக்கணிப்பவர்களானாலும் சரி, எல்லோருமே மூக்கை மூடிக்கொள்ளத்தான் செய்கிறார்கள். ஒவ்வொரு கூடையாக மீன் களை வாரிப் போட்டுக்கொண்டு பீச் கூட்டத் தின் நடுவே கட்டுமரக்காரர்களோ, அவர் களுடைய கூலியாட்களோ விழுந்தடித்து மார்க்கெட்டுகளை நோக்கி ஓடுவதை, 'அநாக ரிகம்' என்றுதான் எவருக்கும் சொல்லத் தோன்றும். ஓடும்போது கால் மணல் பறக் கிறது, மீன் கூடை சொட்டுகிறது. கவிச்சி நாற்றம் வேறு. எல்லாவற்றையும் பொது மக்கள் பொறுமையுடன் சகித்து வருகிறார் கள். வாட்ட சாட்டமான ராக்ஷஸ மீன் கள் ரத்த விளாரியாக எடுத்துச் செல்லப்படு வது கண்ணராவியே. சில நாட்களில் மீன்கள் பீச்சிலேயே உலர்த்தப்படுவதால் உட்கார்ந் திருப்பவர்கள் உள் வேதனை தாங்காமல் உடனே எழுந்து வீடு திரும்புவதும் உண்டு. குறுக்கு நெடுக்காகக் காற்றாட வலைகளும் ஆங்காங்கே மணலில் விரிக்கப்படுவதால் ஜனங்கள் தாராளமாக நடமாட முடியாமல் சலிப்படைவதையும் பார்க்கலாம். குடிசை கள்வேறு, நட்ட நடுவில் சில இடங்களில் அலங்கோலமாகச் சரிந்து கிடக்கின்றன. பரந்த மணல் மெத்தையின் அழகுக்குத் திருஷ்டிப் பரிகாரம் போலும்!

மீன் பிடிப்போருக்குத் தனியே சங்கம் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அச் சங்க நிர்வாகிகள் சுயமாகவே முன்வந்து பொதுமக்களின் நலனை உத்தேசித்து இத் தகைய இடைஞ்சல்களுக்குக் கூடியமட்டில் பரிகாரம் தேடினால் நல்லது.

இரண்டாவதாக, ஆறேழு கக்கூஸ்கள் பீச்சில் உள்ளடங்கி, சௌகரியமாகக் கட்டப் பட்டிருந்தும் வெளியே பலர் விவஸ்தையில் லாமல் பொழுது புலருவதற்கு முன்பாகவும், பொழுது சாய்ந்த பின்னரும் மலஜலம் கழிப் பதைக் காட்டுமிராண்டித்தன மென்றுதான் சொல்லவேண்டும். கார்ப்பரேஷன் அல் லது சர்க்கார் அதிகாரிகள் இதை அறவே தடுக்கக் கடும் நடவடிக்கைகள் எடுக்கவேண் டும். குறிப்பாகக் கடலோரவாசிகள் இக் கெட்ட பழக்கத்தைத் தாங்களாகவே விட்டுவிட்டால் கண்யமாக இருக்கும். சமூகத்தில் சுயகட்டுப்பாடு மிகவும் அவசியம். சுகாதாரச் சூழ்நிலையைச் சுயமாகக் கட்டிக் காப்பது சுதந்திர இந்தியனின் கடமை யாகும். இதில் பட்டணமா, கிராமமா, எது வழி காட்டப்போகிறது?

மூன்றாவதாக, பிச்சைக்காரர்களின் தொல்லை, வீட்டு வாசல், வீதிகளில் அவர் கள் உபத்திரவம் சொல்லிமுடியாது. போதாக் குறைக்குப் பீச்சிலும் கையேந்த வந்துவிடுகிறார்களே யென்று அநேகருக்கு எரிச்சலாக இருக்கிறது. கைப்பிடி அரிசி, காலணா, அரையணா காசு தர்மம் செய்வதால் கொஞ்சத்துக்குக் கொஞ்சம் பணப்புழக்கம் உள்ளவர்கள்கூட சரிந்துவிடமாட்டார்கள். தரித்திரர்களைக் கண்டால் பச்சாத்தாபப்பட வேண்டியதுதான். ஆனால் எதற்கும் எல்லை யுண்டல்லவா? எங்குச் சென்றாலும் பிச்சைக் காரர் பிடுங்கல் என்றால் எவருக்கும் பொறுமை பறந்தோடாமலிராது. கப்பரை யேந்தும் கர்நாடக பிச்சைகாரர்களைப் பட்டணத்தில் காண்பதரிது. பிச்சையெடுப் பதையே தொழிலாகக் கொண்டு திரிகிறார்கள்

பலர். (அரிசி வாங்க அழகான பெரிய காலி பிஸ்கட் டப்பாக்களை எடுத்து வருகிறார்கள். இரண்டரையணாவுக்குச் சிரிப்பாய்ச் சிரிக்கும் குட்டி பிளாஸ்டிக் பர்ஸுகளையும் சிலர் கையில் கண்டேன்) அவர்கள்தான் மரீனா பக்கமும் முற்றுகையிடுகிறார்கள். பொய் சொல்லி, ஏமாற்றுவதில் கைதேர்ந்தவர்கள். அவர்களை அங்கு வரவொட்டாமல் போலீஸார் தடுத்தால் உளவறிந்து நடக்கும் களவுகள்கூடக் குறையும். உண்மையில் உழைத்து உருப்பட முடியாதபடி ஊனமாகவும், உற்றார் உறவினர் இல்லாது நிர்க்கதியாகவும் இருப்பவர்களை ஒன்று திரட்டி, பிரத்யேக விடுதியில் சர்க்கார் பராமரித்து வந்தால் சமூகம் சிறப்புறும். சமுத்திரக் கரையிலும் விவரிக்க வொண்ணாத விசேஷ சாந்தி நிலவும்.

பீச்சின் பெருமை பாடிய கையோடு பெரும் குறைகளையும் நான் காட்டியது சிலருக்கு விகல்பமாகப் படலாம். கரையில் 'கறைகள்' படிந்திருப்பதென்னவோ பிரத்யக்ஷம். சுட்டிக்காண்பிப்பதில் தப்பென்ன?



---

# அவன் அறிவன்

**ரா. ஸ்ரீ தேசிகன்**

இயற்கை அழகை மாந்துவதில் எனக்குள்ள ஆசைக்கு அளவே இல்லை, காற்றின் மெல்லிய மடியில் உட்கார்ந்துகொண்டு நீலவானைச் சுற்றிப் பார்க்க விழைவேன். மின்னற்கொடி பிடித்துக் குமுறி அதிர்ந்தோடும் முகில்தேரில் உட்காரப் பல காலம் நான் விரும்பினது உண்டு. அலைகள் இன்னிசை பாடி ஆட்டக், கடல் தொட்டிலில் இன்பமாய்த் துயின்றுகொண்டே நான் யாத்திரை செய்யும் கனவைப் பலதரம் காண்பேன், ஆற்று வெள்ளத்தை எதிர்த்து நீந்த எனக்கிஷ்டமில்லை; ஆனால் ஆறு போன வழியே மிதந்துபோகும் இன்பத்தைவிட வேறு இன்பம் உண்டோ? என்று அடிக்கடி என்னையே வினவுவேன், என்னுடைய விருப்பமெல்லாம், கனவெல்லாம், லட்சியமெல்லாம் போராட்டத்தில் இல்லை. 'சுதந்தரம், சுதந்தரம்' என்று முழக்கஞ் செய்கிறார்கள். அதற்காகப் போராடி வெற்றிவாகை சூடுகிறவர்கள் மீது நான் குறைகூறவில்லை. ஆனால் சுதந்தரம் வேண்டாம், வேண்டாம் என்று என் மனம் என்னிடம் சொல்லும்,

மேல்காற்றைப் பார்த்து, 'உன்னைப்போல் அடங்காமல் விரைவாய்த் தருக்குடன் திரிந்த காலம் எனக்கிருந்தது; இப்பொழுது எங்கே? நான் வாழ்க்கை முட்களில் விழுந்து அல்லலுற்று ரத்தஞ் சொரிகின்றேன்' என்று ஷெல்லி புலம்புகின்றார், மேல்காற்றுக்கு முன் பறந்து செல்லுகிற சருகைப்பற்றி அவர் கவலைப் பட்டதில்லை, அதன் இன்பத்தை அவர் நுகர முடியுமோ? அந்தப் பாக்கியம் எனக்கு வாய்த்து விட்டது. அவர் காணாத காட்சியை நான் கண்டு விட்டேன். சருகு என் ஞானக்கண்ணைத் திறந்து விட்டது. சருகை மிதித்து அலட்சியமாய் நடனமாடின காலமுண்டு. ஆனால் சருகு தான் எனக்கு இப்பொழுது ஞானச் சின்னமாய் விளங்குகின்றது. அதைக்கண்டு வணக்கஞ் செய்கிறேன்.

எங்களூர் நீர்வளம் நிலவளம் மிகுந்த ஊர். பொழில்களில் பறவைகள் இன்னிசைபாடும்; வண்டினம் முரலும்; பலவர்ணப்பூக்கள் காட்சி அளிக்கும்; மலர் மணம் எங்கணும் வீசும்.

எங்களூர் ஆற்றங்கரைமீது உட்கார்ந்து நோக்கினால், இயற்கை அன்னையின் எழில் நடம் நம் முன் விரியும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. ஆற்றங்கரை இரண்டு பக்கங்களிலும் செறிந்த மரங்களுண்டு. அம் மரங்களிலிருந்து இலைகள் இடையறாது உதிர்ந்துகொண்டே இருக்கும். சில இலைகள் ஆற்றுவெள்ளத்து மீது மிதந்து ஒய்யாரமாய்ச் செல்லும்; வேறு சில இலைகள் காற்றின் முன் இன்பமாய்ப் பறந்து செல்லும். இலைகள் மரங்கள்மீது காற்றில் நடனஞ் செய்யும்; சில இலைகள் கீழே விழுந்துகொண்டே இருக்கும்; மற்றுஞ் சில இலைகள் கீழே விழுந்து ஆற்றங்கரையைப் போர்த்துவிடும். இந்த அகண்ட இயற்கைத் திட்டத்தில் சூரியனுக்கு இடமுண்டு, சந்திரனுக்கு இடமுண்டு, விண்மீன்களுக்கு இடமுண்டு, காடு, மலை, ஆறு, கடல்—இவைகளுக்கெல்லாம் இடமுண்டு, இந்தக் கால் அடியில் கிடக்கின்ற சருகுகளுக்கு என்ன இடமிருக்கப் போகிறதென்று? நான் நினைப்பேன். ஆனால் ஆண்டவன் படைப்பில் சிறியது, பெரியது என்றது உண்டா?' என்ற எண்ணம் என் மனத்தகத்தே பாயும், சருகின இசை யெழாமலிருந்தால் சிருஷ்டியின் தெய்வகானத்தில் ஒரு சுருதி குறைந்து தானே நிற்கும் என்ற எண்ணமும் வராமலில்லை.

இலைகள் தளிர்க்கும்; முதிரும்; பழுக்கும்; உதிர்ந்துவிடும். இந்தக் காட்சி மாறி மாறி வரும். வாழ்க்கைப் பெரும் மரத்தில் பல கோடி ஜீவராசிகள் தோன்றி மறைகின்ற நிலையை இக் காட்சி எனக்கு அடிக்கடி நினைவூட்டும்.

எத்தனையோ இயற்கைக் காட்சிகள் என் மனத்தைத் தொட்டாலும், காற்றுக்கு முன் சருகு புரிகின்ற தெய்வ நடனத்தை நான் மறவேன்.

காற்றின் சுருதிக் கேற்றவாறு உலர்ந்த இலைகள் எப்படி நடனம் புரிகின்றன பார்

என்று எனக்குள்ளே பேசிக்கொள்வேன். நான் ஒருசருகாயிருந்தால் எத்தனை ஆனந்தம் என்று நினைப்பேன்.

காற்றில் சருகுகள்வட்டமிடும் போதெல்லாம் என்சிந்தை அம்பிகாபதி யூருக்குத் திரியும். அங்குள்ள தெய்வச் சுனைகள் நிறைந்த மலை உச்சியில் பகவதி கோயில் ஒன்று இருக்கிறது. அதன் அடி வாரத்தில் ஓர் ஆசிரமம் காட்சி அளிக்கும். இயற்கை வனப்பின் முழுத்தாண்டவத்தையும் அங்கே காணலாம், பல அருவிகள் பாடிமெல்ல நகரும். இலைகள் மெல்ல விழுகிற இன்னிசை கேட்கும். மலர்கள் கொலு வீற்றிருக்கும் சபையில் வண்டினம் யாழ் மீட்டும், அந்த ஆசிரமத்திலுள்ள ஒருபெரியவர் இவைகளைக் கண்டு ஆனந்தத்தாலும், சருகின் விளையாட்டைப் பார்த்து அவர் மெய்ம்மறந்து போவார். அவரைப் போய் உபதேசம் செய்யும்படி கேட்டால் எத்தனை இன்பமாகச் சருகுகள் காற்றில் திரிகின்றன பாருங்கள் என்று சொல்லிவிட்டு அவர் ஆசிரமத்திற்குள் நுழைந்து விடுவார்.

அவர் அருளிய உபதேசத்தின் உண்மையை முதலில் என்னால் அறிய முடியவில்லை. அங்கே அடிக்கடி வருகிற மாந்தர்கள் தாம் உணர்ந்திருப்பார்களா? சந்தேகந்தான். ஆனால் நாள் தேயத்தேய அவருடைய உபதேசத்தின் உண்மை ஒளி என் அகத்தில் பாயக் கண்டேன்.

என் தகப்பனருக்கு நான் ஓரேபிள்ளை. நிரம்ப நிலங்கள் எங்கள் குடும்பத்திற்குண்டு. என்பாட்டனார் வயற் கரையிலே படுத்துத் தூங்குவார்.

என் தகப்பனருக்கும் நிலத்தின்மீது மிகுதியான பற்றுண்டு, ஆனால் என்னை, விவசாயத் தொழிலில் வைக்க அவருக்கு உடன்பாடில்லை. என்னைப் படிக்கவைத்தார்; படித்தால்தான் என்ன? என் உள்ளம் வயலை நாடும்; விடுமுறை நாட்களில் வயற்கரையில் உட்கார்ந்து கொண்டு கடல்போல் விரிந்த கழனிகளை நோக்கி இன்புறுவேன். பட்டணத்துச் சந்தடிசூழ்ந்த பள்ளிக்கூடத்தில் இருக்கிறபொழுதும் என் செவியில் ஓடைகளின் இன்னிசை மெல்லப் பாயும். வான நீலத்தில் கரையும் வயல்களின் பசுமை என் அகக்கண் முன் விரியும். வயல்களில் வேலை செய்யும் உழவர்களை நோக்குவேன். எத்தனையோ உழவர்கள் வந்துபோய்விட்டனர். மண்ணைப் பண்படுத்துகிறவர்கள் மண்ணோடு

மண்ணுய்ப் போய்விடுகின்றனர் என்ற எண்ணம் வரும். ஆனல் அவ்வெண்ணம் சட்டென மறைந்துவிடும்.

வயதானதும் எனக்கு ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து வைத்தனர். அவள் மிக அழகு வாய்ந்தவள். அவளோடு இன்புற்றுக் கழித்த நாட்களுண்டு. இந்த இன்பக் கானத்திற்கும் ஒரு முற்றுப்புள்ளி வரத்தானே வரும் என்ற எண்ணம் அந்த இன்ப நடுவில் தலைகாட்டாமற் போகாது. எனக்குத் தகுந்த வேலை கிடைத்தது. பல பட்டணங்களில் வாசஞ்செய்தேன். குழந்தைகளுக்கும் குறைவில்லை. என்மீது வைத்த என் மனைவியின் அன்பு அவள் பெற்ற குழந்தைகள்பால் சென்றது. அவளுடைய அழகும் தேய்ந்தது. கால வியலையும் அவள் அழகிய கூந்தல் உணர்ந்தது; அது அவள் முகத்தில் சுருக்கத்தை வரையவும் ஆரம்பித்தது.

குழந்தைகள் வளர்ந்து விட்டனர். குடும்பச் சுவையைத் தாங்கும் பருவத்தையும் எட்டி விட்டனர். நான் என் குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய காரியம் ஆயிற்று. நான் எனக்குச் செய்து கொள்ள வேண்டிய அலுவலைப் பற்றி யோசித்தேன்.

எனக்குச் சங்கீதத்தில் ஒரு பைத்தியம் உண்டு. கேட்காத சங்கீத வித்வான்களில்லை. ஆனல் கொஞ்சம் கூட அபஸ்வரம் பேசினலும் சீறிவிழுகிற வித்வான்கள் வாழ்க்கை முழுவதுமே அபஸ்வரம் பேசுகின்றதே என்று ஏங்குவேன். சங்கீதமூலம் அமைதி அடைந்தார்கள் பெரியார்கள் என்றெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனல் அது எனக்கு ஆறுதல் அளிக்கவில்லை. எத்தனை பெரிய அமரகானமானலும். அதுவும் இறந்துவிடும் என்ற ஏக்கம் மனத்தை வாட்டத் தொடங்கிற்று.

சங்கீதம் போன்ற மற்றக் கலைகளும் நுண்ணிய இந்திரிய சுகங்கள் தான் என்று தேர்ந்தேன். உடலை வேண்டி நல்லதோர் உண்டியில் திளைத்த நாளுண்டு. கண்களுக்கு விருந்தளித்தேன்! செவிகளுக்கு விருந்தளித்தேன். மனத்திற்கு விருந்தளித்தேன். அறிவுக்கு விருந்தளித்தேன். என்ன செய்தால் என்ன? ஒன்றிலும் ஓர் அமைதியையும் நான் அடைய வில்லை.

புத்தகங்கள் மீது எனக்கு அளவு கடந்த ஆர்வமுண்டு. சங்கீதத்தில் சலிப்பு வந்தது. ஓவியத்தில் சலிப்பு வந்தது சிற்பத்தில் சலிப்பு வந்தது. ஆனல் புத்தகத்தில் வைத்த மோகம் அகல வில்லை. கவிதை உலகில் திரியலாமா? பௌதிக உலகில் நடமாடலாமா? கணித உலகில் சஞ்சரிக்கலாமா? சரித்திரக் காட்டில் ஓடலாமா? என்றெல்லாம் தோன்றும். ஒவ்வொரு சாத்திரத்தையும் அப்பியசித்தேன். ஆனல் ஒவ்வொன்றையும் படிக்குந்தோறும் அதற்கப்பால், அதற்கப்பால் என்ற வினு என்னைத் தொடர்ந்தே வரும்.

மனதிற்குச் சாந்தி ஏற்படவில்லை. புத்தகக் காட்டில் திரிந்ததுபோதும்; சாஸ்த்திர வனங்களில் சுற்றினது போதும் என்ற முடிவுக்கு வந்தேன். மனைவி மக்கள் நிலம் வாசல் எல்லாவற்றையும் துறக்க மனந் துணிந்தது. ஆனல் என் ரத்தத்தோடு ரத்தமாய், என் சதையோடு சதையாய், என் எலும்போடு எலும்பாய் நின்ற புத்தகங்களை விட மனம் வரவில்லை. புத்தகங்களை என்னேடு எடுத்துச் செல்லலாமா என்ற பைத்தியக்கார எண்ணமும் வந்தது. ஆனல் எத்தனை புத்தகங்களைக் கட்டிச் சுமப்பது? மேலும் புத்தகங்களுக்கு அடிமையாவதும் ஒரு பேதைமையன்ரு? என்ற எண்ணம் வந்தது.

அம்பிகாபுரத்திற்குச் சமீபத்திலுள்ள ஒரு மலைக் குகையில் வாசஞ் செய்தேன். ஆனல் எல்லாவற்றையும் துறந்தேன் என்ற ஞானம் என்னை விட்டுப் போகவில்லை. அந்தத் தருக்கில் எல்லாவற்றையும் அலட்சியம் செய்தேன். அந்த அலட்சிய அறிவில் சாந்தி பிறக்குமோ? ஆண்டவன் இருக்கிருன் எனக்கென்ன குறைவு? என்ற பெருமிதத்திலும் எல்லாவற்றையும் புறக்கணித்தேன்.

அப் புறக்கணிப்பில் சாந்தம் பொங்குமோ? அந்தப் பற்றும் என்னை விட்டகன்றது. நான் சுக்காய்ச் சருகாய் உலர்ந்து விட்டேன். ஏதோ புகலரும் ஓர் அருட்காற்றிற்கு முன்பு நான் ஒரு சருகாய்ச் செறிந்த காடுகள், விரிந்த வரைகள், தெளிந்த சுனைகள், பரந்த ஆறுகள், மலர்ந்த பொழில்கள் இவைகள் மீது திரிகின்றேன். சருகா யிருப்பதில் எத்தனை பேரின்பம் தெரியுமா? அவன் அறிவன்.



தொடர் கதை

# நீரோட்டம்

தி. சேஷாத்திரி

**தாண்ட இறங்கிய ஆறு ஆளை இழுத்தது**

மூன்று மணிக்கு ரெங்கநாதன் விழித்துக் கொண்டான். எழுந்ததும் பாஸ்கரன் சமையல் அறையில் இருப்பதைத் தெரிந்துகொண்டான்.

எழுந்திருந்து சட்டை முதலியவை போட்டுக் கொண்டு கிளம்பத் தயாரான சமயம் பாஸ்கரனே உள்ளே வந்தான். 'எங்கேயப்பா?'

'ஏன் ஊருக்குப் போகவேண்டாமா? பள்ளிக் கூடத்திற்குப் போகவேண்டும். கொஞ்சம் வேலை இருக்கிறது.'

'எல்லாம் போகலாம். வராதவன் வந்திருக்கிருய். பங்கஜம் தன் சமையல் திறமைக்கு உன்னிடமும் ஒரு சர்டிபிகேட் வாங்கவேண்டும். என்று தவித்துக்கொண்டிருக்கிருள்.'

'இருக்கட்டும் அதை இன்னெருநாள் பார்த்துக்கொள்ளலாம் நான் வருகிறேன்.'

'அதெல்லாம் முடியாது. சரியாக எட்டு மணிக்கு நான் உன்னை வீட்டில் சேர்த்து விடுகிறேன். பேசாமல் வா என்னுடன்!' என்ருன்.

'எங்கே?

'வாயேன் எல்லாம் தெரிகிறது. கிராமத்தைச் சுற்றிப் பார்த்து வரலாம்.'

ரெங்கநாதனுக்குத் தெரியும், பாஸ்கரன் என்ன உத்தேசத்துடன் கூப்பிடுகிருன். என்று. அவன் தெரியாதவன் போல வேஷம் போட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

அவன் அரைகுறையாகத் தூங்கி விழித்துக்கொண்டிருந்த போது பாஸ்கரன் சமையலறையில் பேசிக்கொண்டது அவன் காதில் விழுந்திருந்தது.

அந்தக் கிராமத்தில் உள்ள மிராசுதார் ஒருவர், அவருடைய பெயர் ராமநாத ஐயர், தம்பி ஒருவர், பம்பாயில் இஞ்ஜினீயராயிருந்தவர் குடும்பத்துடன் வந்திருந்தார். அவருக்குப் பதினெட்டு வயதில் ஒரு பெண் இருந்தாள்.

அவள் அழகாய் இருக்க வேண்டும். பங்கஜமே தன் கணவன் பேச்சிடையில் அப்படிச் சொல்லியிருந்தாள். அவள் பரிகாசமாகச் சொன்னுள் என்று பிறகுதான் தெரிந்தது.

அவளுக்கு ரெங்கநாதனைக் காட்ட விரும்பினுன் பாஸ்கரன். ரெங்கநாதன் அவர் வீட்டுக்குப் போனுல் பெண்ணையும் பார்த்து விடலாம் என்பதற்காக அவன் அவனை அங்கே அழைத்து



வந்துவிடுவதாகச் சொல்லியிருந்தான். அதற்காக அவன் அழைத்துப்போகிறான்.

பங்கஜம் கேட்டாள்: 'இவர் தான் கல்யாணமே வேண்டாம் என்கிறாரே!'

'அதையும் நான் அவரிடம் சொல்லி விட்டேன். அவர்வேதாந்தம் தனியாயிருக்கிறது. எவ்வளவோ பேச்சு வீரர்களைப் பார்த்து விட்டேன். எல்லாம் காலம் வந்து விட்டால் விதி பிணைத்த பெண்ணைப் பார்த்தவுடன் மலர்ந்து விடுகிறார்கள். நீங்கள் அழைத்து வாருங்களேன் பார்க்கலாம், என்று சொல்லிவிட்டார்' என்றான் பாஸ்கரன்.



பாஸ்கரன் அதற்குத் தான் கூப்பிடுகிறான். ரெங்கநாதன் என்ன செய்வான்? அந்தச் சம்பாஷணையைக் கேட்டது போல் காட்டிக் கொள்ள முடியுமா! அவன் தூங்குவதாக எண்ணியல்லவா அவர்கள் பேசியிருக்கிறார்கள்?

ஆகவே வேறு வழியின்றிப் பிசுக்காரம் செய்துகொண்டே ரெங்கநாதன் கிளம்பினான். வண்டி வேண்டாம் என்ற ஒரு விஷயத்தில் தான் அவன் பேச்சு அங்கே எடுபட்டது.

ரெங்கநாதன் அந்த வீட்டுக்குப் போனான்—இட்டுச் செல்லப்பட்டான்.

காம்பவுண்டு தாண்டியதும் வலது பக்கம் பெரிய மைதானத்தில் வைக்கோல் போர் போடப்பட்டிருந்தது. இடது பக்கம் அடைத்துச் செடிகள் போடப்பட்டிருந்தன. அவற்றைத் தாண்டி வீட்டின் கட்டடத்தை அடைந்ததும் வாயிற் கட்டைத் தாண்டி உள்ளே சென்றார்கள். அங்கே ஹாலில் சிவக்கச் சிவக்க நிறம்கொண்டு நல்ல ஆஜானுபாகுவாக ஒருவர் நாற்காலியில் சயனித்திருந்தார். பக்கத்தில் உள்ள ஸ்டூலின்மேல் இருந்த பாத்திரங்களிலிருந்து அவர் இப்பொழுதுதான் டிபன் சாப்பிட்டிருக்கிறார் என்று தெரிந்தது.

அவர் இவர்களைக் கண்டதும் எழுந்திருக்க முயன்றுகொண்டே 'வரவேண்டும் வரவேண்டும்!' என்றார். பாஸ்கரன் ஏற்கனவே இதைப் பற்றிய பேச்சு நடந்திருக்கிறது தெரியவேண்டாம் என்பதற்காக அவசரமாகவே 'இவன்தான் ரெங்கநாதன்' என் நண்பன். பக்கத்து டவுனில் உபாத்தியாயராயிருக்கிறான் ......... என்றெல்லாம் முற்றிலும் புதியவனை அறிமுகப் படுத்துவது போல அறிமுகப் படுத்தினான்.

'வாருங்கள் உட்காருங்கள்!' என்று சொல்லி அவரும் எழுந்து மர நாற்காலி ஒன்றில் அமர்ந்தார்.

ஆள் கொண்டுவந்த நாற்காலிகளில் பாஸ்கரனும் ரெங்கநாதனும் அமர்ந்தனர். ஆள் இன்னம் இரண்டு நாற்காலிகளை எதிரே போட்டான். பாஸ்கரன் ரெங்கநாதனைப் பார்த்தான். ரெங்கநாதன்

முகபாவத்தில் ஒரு மாறுதலுமே ஏற்பட வில்லை.

பிறகு இஞ்சினீயர் 'கமலா!' என்று கூப்பிட் டார்.

வெள்ளித் தட்டில் கிண்ணங்கள் வைக்கும் சத் தம் கேட்டது. சிறிது நேரம் சென்றதும் பட்டுப் பாவாடையின் ஜரிகைக் கரை உராயும் சத்தம் கேட்டது. பிறகு பெரிய ஒரு பெண்ணுருவம் நடந்து வருவது தென்பட்டது. ரெங்கநாதன் நிமிர்ந்து பார்த்தான் – பதினெட்டு வயதிற்கு முப் பத்தாறு வயதுள்ள சரீரத்தை ஏந்திக்கொண்டு ஒரு பெண் வந்துகொண்டிருந்தாள்.

வந்தவள் எதிரேயுள்ள மேஜையில் ஒவல் டின்னை வைத்துவிட்டு நாற்காலியில் அமர்ந்து ஏன் அப்பா கூப்பிட்டீர்கள் என்றாள்.

இங்கே பாஸ்கரனும் அந்தப் பெண்ணும் நன் ருக மாட்டிக்கொண்டனர். பாஸ்கரன் போட்ட வேஷம் வெளியாகிவிட்டது.

ரெங்கநாதன் காபி சாப்பிடமாட்டான் என்று பாஸ்கரன்தான் சொல்லியிருக்கவேண்டும். முன் னேற்பாடில்லாமல் கமலா இந்த நிலையில் வர வேண்டியதில்லை.

ரெங்கநாதன் பாஸ்கரனைப் பார்த்துச்சிரித்தான். பாஸ்கரன் இஞ்ஜினியரைப் பார்த்தான்.

பிறகு 'கமலா இஞ்ஜினியர் பெண். இண்டர் மிடியேட் வாசிக்கிறாள்!' என்றான் பாஸ்கரன்.

ரெங்கநாதன் ஒரு தடவை கூட நிமிர்ந்து கமலாவைப் பார்க்கவில்லை.

கமலா எடுத்த எடுப்பிலேயே, 'மிஸ்டர் ரெங்கநாதன், உங்களுக்குச் சினிமாப்பிடிக்குமோ?' என்று கேட்டாள்.

ரெங்கநாதன் அப்படியே நொறுங்கிப் போய் விட்டான். உடனேயே அவனுக்குச் சந்திரா ஞாபகம் தான் வந்தது. அந்தப் பெண் எங்கே, இந்தப் பெண் எங்கே?

பேசாமல் இருந்ததைக் கண்ட கமலா 'இல்லை காமன் டாபிக் (இருவருக்கும் தெரிந்த விஷயம்) ஒன்று இருந்தால் பேச சௌகரியமாயிருக்குமே! என்று கேட்டேன். உங்களுக்கு க்ரிக்கெட்டில் பிரிய முண்டா?' என்றாள்.

ரெங்நாதன் துணிந்தான், 'ஏன் நீ ஆடுகிறது உண்டா?' என்று கேட்டு விட்டான். அவன் உபாத்தியாயர் வேலையிலில்லாது போனால் அவன் இயற்கைக்கு நீங்கள் என்றே ஆரம்பித்திருப் பான்.

'ஆமாம் எங்கள் காலேஜில் ஆடுவோம்!' என்றாள். அதற்குள் இஞ்ஜினீயர் அவர்கள் 'ஆண் பிள்ளைகள் காலேஜ் மாணவர்களுடன் விளையாடி அநேக பிரைஸ் கூட வாங்கி யிருக்கிறாள். அவளுக்கு டேபிள் டென்னிஸ், டென்னிஸ் எல்லாவற்றிலும் பரிச்சயம் உண்டு. நல்ல பழக்கமும் உண்டு. "இந்தியன்" என்றால் ரொம்ப ஆசை. அதற்காகச் சடுகுடு கூடப் பழகி யிருக்கிறாள்!'

ரெங்கநாதன் ஒரு நிமிஷம் அப்படியே பொல பொலத்து விட்டான். இப்படிப் பழகிய பெண்ணையா தன் போன்ற ஒரு அநாகரிகத்துக்குக் கொடுக்க வருவார்கள். தான் கல்யாணம் செய்து கொள்வது இருக்கட்டும்! எவன் தான் ஒரு பெண் முன் அவமானப்பட ஒப்புக்கொள் வான்?

இவளுக்கு ஒரு I. A. S. அந்தஸ்தில் உள்ள வனும் ஆறடி உயரம் 48" உடலுமுள்ள ஒருவன் அல்லவா தகுதி! அவன் தினம் தோறும் சினிமா போகிறவனாய், எல்லா ஆட்டமும் தெரிந்தவனாய், இந்தியாவின் நிலைமை தெரியாமல் சுற்றியுள்ள நிலையை மறந்து பணத்தை டாம்பீகச் செலவில் வாரிவிதைக்கிறவனாக அல்லவா இருக்கவேண்டும்?

எந்த எண்ணம் கொண்டு பாஸ்கரன் இப் படித் தன்னை அவமானம் செய்யத் துணிந்தான்? அல்லது கிராமத்திலேயே பிறந்து வளர்ந்த பாஸ்கரனுக்குப் பெண்களின் நாகரிக நிலையும் அவர்கள் அந்தஸ்தும் தெரியவில்லையா? எந்தப் பெண்ணும் பழைய காலம்போலப் புல் என் றாலும் புருஷன், கல் என்றாலும் கணவன் என்றிருப்பாள் என்று நினைக்கிறானா தன் மன வியைப் போல?

அதிகம் சொல்வானேன்! அங்கிருந்த பதி னைந்து நிமிஷங்களும் ரெங்கநாதன் தன்னைப் பற்றியே நினைத்துப் புழுங்கிக்கொண்டிருந்தானே தவிர, கமலாவைப் பற்றியோ, அவளுக்கு மன தைத் திருப்தி செய்யவேண்டும் என்றோ எண் ணவோ நேரம் கிடைக்கவில்லை.

கமலா விடவில்லை. தகப்பனார் உதவியுடன் உலகத்தில் பல இடங்களில் திரிந்து விஷயங் களைப் பொறுக்கி எடுத்தாள். ஊர் சுற்றி அனு பவம் பெற்றவனுக்கும், ஒரே இடத்தில் திரும்பத் திரும்பச் சுற்றியவனுக்கும் உள்ள வேற்றுமை அவர்களிடையே இருந்தது. புத்தியை விசாலப் படுத்திய கமலா, மனதை ஸ்திரப்படுத்திய ரெங்கநாதனிடம் என்ன இன்பம் காணமுடியும்?

ஆனாலும் கமலா என்னவோ அவனிடம் பேசினாள். அவனை விளையாட்டாகக் கருதி னாளோ, பொழுது போக்கோ! அவள்தான் அறிவாள்.

இப்படிப் பதினைந்து நிமிஷம் கழிந்தவுடன் பாஸ்கரன் 'சரி சார், நாங்கள் விடைபெறு கிறோம்' என்றவுடன் ரெங்கநாதனது சென்ற உயிர் திரும்பி வந்தது. எழுந்தான்.

அதற்குள் கமலா,

'பாஸ்கர மாமா, நாங்கள் இன்னம் பதினைந்து நாள் இருக்கிறோம். அடிக்கடி வாருங்கள். ஸாரையும் அழைத்து வாருங்கள்' என்றாள்.

நாகரிகத்தில் உண்மையுணர்ச்சியை மறைப் பது, அதிலும் வெளியே காட்ட வாய்க்கில்லாத

உணர்ச்சியை மறைப்பது தவிர வேறொன்றும் நல்லதில்லை என்று ரெங்கநாதன் நிச்சயம் செய்துகொண்டான்.

சுதந்தர இந்தியாவிலும் மாறுத ஆட்கள் இருக்கின்றார்களே! என்று சொல்லிக்கொண்டான்.

வழியில் ரெங்கநாதன் கேட்டான்.

'அவருக்கு எவ்வளவு சம்பளம் இருக்கும்?'

'மாதம் அறுநூறு ரூபாய்!'

'அவர் பெண் ஆயிர ரூபாய்க்குக் குறைந்து சம்பாதிக்கும் இடத்திற்குச் சென்றால் வாழ முடியுமா?'

'ஏன் அப்படிக் கேட்கிறாய்?'

'நிலைமை தெரியாமல் தள்ளுகிறாளே என்று கேட்டேன்.'

'அதெல்லாம் அப்படித்தான் இருக்கும். வேறு வழியின்றி எவனையாவது ஒருவனை மணந்தால் தெரியும்.!'

'ஏன் மணக்கவேண்டும்?'

'வேலை பார்க்கலாம் என்று கமலாவே சொல்லுகிறாள். ஆனால் பழைய பண்பாடு முழுவதும் தொலையவில்லை!'

'அதனால்தான் சொல்கிறேன், இந்த இரண்டும் கெட்டான்களுக்கு நிரம்பச் சம்பளம் வாங்கும் கணவன் வந்தால் ஒழிய வாழமுடியாது அவர்களால்!'

'அதுவும் உண்மைதான்......... ஆனாலும் கமலா சம்பந்தப்பட்டவரை—!'

'கமலாவென்று தனியாகச் சொல்லவரவில்லை!'

'அதைப்பற்றி நமக்கென்ன. நீ செய்து கொள்ளுகிறாயா சொல்லப்பா..........!'

'ஏன் வீண்பேச்சு. அவர்கள்.........!'

'அதைப்பற்றி நான் ஆயிற்று; உன் சம்மதம் சொல்'

'பாஸ்கரா வேடிக்கை செய்கிறாயா? என் கலியாணத்தைப்பற்றி ஏன் உனக்கு அக்கறை? என்னைத்தான் உனக்குத் தெரியுமே!'

வீடு வந்துவிடவே பேச்சு நின்றுவிட்டது. பிற்பாடு 'கமலா அவருடன் பேசிக் காலம் கழிக்கத்தான் லாயக்கே தவிர கணவனாக வரிக்க முடியாது!' என்றாள் என்று கேள்விப்பட்டான் ரெங்கநாதன். 'ஆம், மறுத்துப் பேசாமல் கேட்டுக் கொண்டே இருந்தேனல்லவா' என்று சொல்லிக் கொண்டான் ரெங்கநாதன்.

## பக்கம் மறந்து மறைந்து விட்டது

பிடிவாதமாக இரவு 7½க்குள் டவுனுக்குப் போக வேண்டும் என்றான் ரெங்கநாதன். 'என்னடா பிரமாதம்? முதலியார் வீட்டுப் படிப்பு? பையன் அசடா என்ன? மூன்று நாளுடன் நாலுநாள் என்றெல்லாம் சொல்லிப்பார்த்தான் பாஸ்கரன்.

ரெங்கநாதனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதைவிட இன்னம் முக்கியமான ஒரு விஷயம் இருந்தது. சந்திராவைப்பற்றி அறிய வேண்டியதுதான் அது. ஆகவே அவன் பிடிவாதம் செய்து விட்டான்.

ஆறரை மணிக்கே சாப்பிட ஏற்பாடு செய்து விட்டான் பாஸ்கரன்.

பங்கஜம் கொல்லையில் காய்த்த காய்கறிகளைக் கொண்டே சமையல் செய்திருந்தாள். கத்திரிக்காயும் வெங்காயமும் போட்டு ரஸவாங்கி, முருங்கைக்காய் சாம்பார், வாழைக்காய் பொடிமாஸ், கருவடாம் வறுவல்; வீட்டில் உறைகுத்தின தயிர், எல்லாம் தேவாமிர்தமாய் இருந்தன.

சாப்பிட்டு எழுந்திருந்தவுடன் கொடிக்காலிலிருந்து வெற்றிலை வந்தது, கொல்லையில் உதிர்ந்த பச்சைப் பாக்கு வந்திருந்தது.

'போட்டுக் கொள்ளடா!' என்றான் பாஸ்கரன்.

சிரித்து மழுப்பி விட்டான் ரெங்காநதன்.

'அசல் பிர்மசாரி வெற்றிலை போட்டுக் கொள்வாரா அவர்? மற்றவரைப் போலவா?' என்றாள் பங்கஜம்.

'ஏன்' உங்களைப் போலவா?' என்றே கேட்டு விடுவது தானே?' என்று சிரித்தான் பாஸ்கரன்.

'உங்கள் நிலைமை எனக்கு எப்படித் தெரியும்?

'சரி கிளம்பு' என்றான் ரெங்கநாதன்.

வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது.

'நீங்களுமா போகிறீர்கள்?' என்றாள் பங்கஜம்.

'ஆம். யோசிக்காதே, கொண்டுபோய் விட்டு விட்டு வந்து விடுகிறேன்.'

இருவரும் கிளம்பினர். குதிரைவண்டி ஜல்ஜல் டக் டக் என்று கிளம்பிற்று.

அன்று பௌர்ணமி. மேகம் சிதறியிருந்தது. சந்திரன் மறைந்து மறைந்து விளையாடிக் கொண்டிருந்தான். கட கட என்று சக்கரம் உருண்டுகொண்டிருந்தது.

கிராமத்திலிருந்து பட்டணம் போகும் ரஸ்தா நல்ல ரஸ்தா. அந்தப்பக்கம் மலைப்பாங்கான பூமி. ஆகவே ரோடு தஞ்சை ஜில்லா ரோடுகளைப்போல் இராது.

தஞ்சை ஜில்லாவில் ரோடுகள் மண் குழிகளில் விழுந்து எழுந்து போய்க்கொண்டிருக்கும். அதுவும் மழைநாட்களில் குளம் குட்டைகளிடையில் தங்கள் யாத்திரையைச் செய்துகொண்டிருக்கும் வண்டியிலோ மோட்டாரிலோ கிளம்பினால் வீடு வந்து சேர்ந்தபோதுதான் நிச்சயம். சிலசமயம் வண்டியோ மோட்டாரோ முழுவதும் புதைந்துவிடுவதுண்டு. கிளம்பவும் முடியாமல் விடவும் முடியாமல் பிரயாணிகள் படும்

பாட்டை அனுபவித்தவர்கள்தான் அறியமுடியும்.

மலேஜில்லாக்களில் அந்தத் தொந்தரவு இருக்காது. எந்த நாளிலும் பிரயாணம் சௌகரியமாயிருக்கும். அதனுல்தான் ஒரு ஊருக்கும் இன்னெரு ஊருக்கும் சுமார் பதினைந்து மைல் இருந்தபோதிலும் தைரியமாகக் கிளம்பிவிடுகிருர்கள்.

பாஸ்கரன் கேட்டான்...

'ரெங்கநாதா? எனக்கும் என் மனைவிக்கும் என்ன சண்டை என்று கேட்கவில்லையே?'

'ஆமாடா போ! பெண்ணைப்பற்றி பிரமாதமாகப் பேசுகிருய். அடிக்கிறமட்டும் துணியும் நீ என்ன பேசி என்ன லாபம்?'

'கேளடா என்ருல்? நான் அன்று இரண்டு புடவை வாங்கி வந்தேனல்லவா, அதில் நான் வாங்கியதை இன்று கட்டிக்கொள்' என்றேன்.

'அவள் குறித்த — அதாவது விலாசினி சொல்லி நான் வாங்கியதைத் தீபாவளிக்குக் கட்டிக்கொள்ளலாம் என்றேன். அவள் முடியாது என்ருள்.'

'ஏன்?'

தீபாவளிக்கு அவள் கொடுத்ததை எதற்காக கட்டிக்கொள்ளவேண்டும்?, என்று அவள் பிடிவாதம்.

'அதுவும் சரிதானே?'

'சரிதானப்பா சரிதான். அது புரிந்துவிட்டால் தான் சங்கடமே இல்லையே! ஆனுல் குழந்தையில் நீ ஒன்று செய்தாயே ஞாபகம் இருக்கிறதா?

'என்ன செய்தேன்?'

'அம்மா உன்னை இடுப்பில் தூக்கிக்கொண்டாள், நீ தோளில் தூக்கு என்ருய்; முடியாது என்ருள் உன் அம்மா. நீ என்ன செய்தாய் தெரியுமா?'

'என்ன செய்தேன்?'

'கீழே விழுந்து உதைத்துக்கொண்டு அழுதாய். பிறகு எழுந்திருந்து அம்மாவை நன்ருய் அடித்து விட்டாய்...'

'நிசமாகவா?'

'அட, அதற்காக இப்பொழுது ஏன் வருத்தப் படுகிருய்?' நிசமாகவே ரெங்கநாதன் கண்களைத் துடைத்துக்கொண்டான். 'அம்மாவுக்கு அவ்வளவு தீங்கு இழைத்தவனு நான்?' என்று சொன்ன அவன் குரல் தழுதழுத்தது; அடைத்துக்கொண்டது.

'இப்பொழுது அம்மாவைக் கேள். என்ன சொல்கிருள் என்று பார்!' என்ருன் பாஸ்கரன்.

ரெங்கநாதன் பங்கஜத்தை நினைத்துக்கொண்டான்.

வண்டி டவுன்எல்லைக்குள் வந்துவிட்டது. 'முதலில் ஆத்துக்கே போ. அம்மாவிடம் சொல்லிவிட்டு முதலியார் வீட்டுக்குப் போய், என்னை விட்டு விட்டு நீ போகலாம்' என்ருன் ரெங்கநாதன்.

'சரி' என்ருன் பாஸ்கரன்.

தாயார் சொன்னவுடனேயே, 'பாஸ்கரன் விடமாட்டான் என்று தெரியும். பங்கஜம் கண்டிப்பாய் நிறுத்தியிருப்பாள். தங்கம் அல்லவா அவள். பாஸ்கரனுக்கு ஏற்ற பெண்!' என்ருள் தாய்.

வண்டி முதலியார் வீட்டுச்குச் சென்றது. அந்த வழியில் ரெங்கநாதன் பேசவில்லை.

அவன் உள்ளம் துடித்துக்கொண்டிருந்தது. மூன்று நாளாய் அவன் உள்ளத்தை உறுத்தும் கேள்விக்கு இன்று விடை காணப் போகிருன், என்ற நம்பிக்கை அவனை விம்மச்செய்தது?

எப்படி இருக்கும் வரவேற்பு?

ஒருகால் சுந்தரேசனுக்கே பாடம் சொல்லிக் கொடுக்கவேண்டாம் என்று சொல்லி விடுவார்களோ?

இருக்காது.

இன்று முதல் சந்திராவும் ஸம்ஸ்கிருதம் படிக்க ஆரம்பித்து விடலாம். படித்தால் என்னென்ன சொல்லிக் கொடுக்கலாம் என்று ஆராய்ந்து வகுக்க ஆரம்பித்தது அவன் மனது.

அந்த எண்ணப் போக்கின் தலையில் பொட் என்று அடிவைத்தது. மற்றெரு எண்ணம்.

சந்திராவை நீ இனிப் பார்க்கக்கூட முடியாது?

ஏன்?

அவள் இன்று காலையில்கூட நான் வந்து விட்டேனு என்று பார்க்க ஆசைப்பட்டாளாமே!

வீடு வந்து சேர்ந்தது, வாசலிலிருந்தே பாஸ்கரன் போய்விட்டான்.

முதலில் அண்ணி எதிர்பட்டார்கள்.

'என்ன தம்பி, ரேடியோவில் பேசப் போறேன் என்று முன்னமேயே சொல்கிறதுகூட இல்லையோ?'

'ரெங்கநாதன்' 'சந்திரா துடியாத் துடிச்சுக் கிட்டிருந்திச்சு அதைப்பற்றி உங்களிடம் பேசணும் என்று...'

ஏன் இந்த இறந்தகாலம்?

அதற்குள் சுந்தரேசன் வந்தான்

'ஸார், அப்பா இல்லியே' சந்திரா இல்லியே. உங்களை வாழ்த்தணும் என்று இருந்தாங்க!' என்ருன்.

அண்ணி பூராவும் சொன்னுர்கள்.



'என் அண்ணன் வந்திருந்தாங்க. சந்திராவைப் பிடிவாதமாக அழைச்சுக்கிட்டுப் போயிட்டாங்க. ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் விடத் தான் முதலியார் போயிருக்கிறார்கள். இதோ வந்து விடுவார்.'

முதன் முதலாக ரெங்கநாதன் மனம் உரிமையில்லாத காரியத்தைச் செய்தது. அது கோபத்துக்கு இடம் கொடுத்தது.

என்னிடம் சொல்லக் கூட இல்லையே!

யாரிடம் சொல்வது? எதற்காக? எப்பொழுது சொல்லி யிருக்க முடியும்?

சுந்தரேசன் சொன்னான்.

'சந்திரா அக்காவுக்கு இஷ்டமே யில்லை. உங்களைப் பார்த்து விட்டுத் தான் போவேன் என்று சொன்னாள். இரண்டுதடவை உங்கள் வீட்டுக்கு ஆள் கூட அனுப்பினாள்.........பிறகு நாளைக்குப் போகலாம் என்றும் அழுதாள்.........

ரெங்கநாதன் மனம் நிம்மதி அடைந்தது.

அண்ணி சொன்னார்கள்:

'நான் தான் பிடிவாதம் செய்தேன். என் அண்ணனுக்கு ஒரு மகன் உண்டு. அவன் இப்பொழுது தான் ஊருக்கு வந்திருக்கிறான். அவனையும் சந்திராவையும் பிணைத்துப் போடலாம் என்று பார்க்கிறேன்! என்று.

ரெங்காதன் மனது மீண்டும் ஒரு பிசகைச் செய்தது. கொஞ்சம் பொறுமைப் பட்டது.

ஆனால் பாடம் படிக்கும் போது சுந்தரேசன் சொன்னான்:

எங்கள் மாமா மகனைச் சந்திரா அக்காவுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. 'அவனைக் கட்டிக் கொள்வதைவிட ஒரு கழுதையைக் கட்டிக் கொள்ளலாம்! என்று சொல்லும்' என்றான்.

ரெங்கநாதன் மனம் மீண்டும் ஒரு முறை கண்ணை இழந்து பெற்றது.

ஆனாலும் முதன் முதலாக அவன் அன்று தான் மனது சதி செய்தால் காரியம் செவ்வனே நடந்தேறாது என்று கண்டு பிடித்தான்.

சுந்தரேசன் எப்படியோ ஒரு மணி நேரம் கழிக்க உதவி செய்தான். (தொடரும்)

# புத்தக விமர்சனம்

## வைத்தியக் களஞ்சியம்

பக்கங்கள் 96.

விலை, ரூ. 2-8-0

ஸித்த வைத்யத்தில் ரஸவாதத்துக்கு ஒரு முக்ய ஸ்தானம் உண்டு. ரஸ குளிகைகளைக் கொண்டு இவ்வுலகிலேயே சுவர்க்க வாழ்க்கையனுபவிக்கலாம், ஓர் உலோகத்தை மற்றோர் உலோகமாக மாற்றிவிடலாம். செயற்கைத் தங்கம் முத்து பவளம் கோரோசனை கஸ்தூரி முதலியவைகள் செய்யவும் வைப்புச் சரக்குகள் தயாரிக்கவும் கற்றிருந்தனர். வைத்யக் களஞ்சியம் எனும் இந் நூலில் சரக்குவைப்பு மருந்து முறைகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இதை எழுதியவர் பெயர் தெரியவில்லை. பழம்பிரதி ஒன்றை ஸ்ரீ C. N. குப்புஸ்வாமியும் ஸ்ரீமதி V. S. பார்வதியும் பரிசோதித்து வெளியிட்டிருக்கின்றனர். 64 சரக்குகளிலிருந்து சத்து எடுக்கும் முறையை விவரிப்பது போலவே பேய் விலகவும் செத்தவர் பிழைக்கவும் வழக்கு வெல்லவும் முறைகள் கூறப்பட்டிருக்கின்றன! கைகண்ட முறைகள் தாம் விவரிக்கப்பட்டிருப்பதாகப் பதிப்பாசிரியர்கள் கூறுவதால் பரீக்ஷித்துப் பார்க்காமல் ஆட்சேபிக்க யாருக்கும் உரிமையில்லை.

## தட்சநாயனுர் வைத்ய அட்டவணை

ஸித்த வைத்யர்களுக்கு உபயோகப்படுவதற்காக வைத்ய நூல்களில் வரும் ஸங்கேதச் சொற்களுக்கும் வட நூல் மூலிகைப் பெயர்களுக்கும் எளிய தமிழில் பொருள்கூறும் ஒரு வைத்திய அகராதி சர்க்கார் கீழ்த்திசைக் கலைநூல் நிலையத்தார் பிரசுரித்திருக்கிறார்கள். தட்ச நாயனுர் அட்டவணை எனும் இந்நூலை Dr. R. தியாகராஜன் அவர்கள் சோதித்து வெளியிட்டிருக்கிறார்.

பக்கம் 46. விலை 1—8—0

## உபதேச காண்டம்

சென்னை அரசாங்கக்கீழ்த்திசைக் கலைநூல் நிலையம் உபதேசகாண்டம் எனும் அரிய நூலை 3 புத்தகங்களாக 4—10—0, 5—0—0, 5—8—0 விலை வைத்துப் பிரசுரித்திருக்கிறார்கள். இவ்வுபதேச காண்டம் என்பது கந்த புராணத்தின் தொடர் நூலாகும். வடமொழியில் இருக்கும் ஸ்காந்தத்தைக்காஞ்சி கச்சியப்ப சிவாசாரியாரும் கோனேரியப்ப நாவலரும் தமிழிற்பாடி இருக்கின்றனர். புத்தக வடிவத்தில் கிடைக்கிறது. அதின் கடைசிக் காண்டமான உபதேச காண்டத்தை மட்டில் வயலூரில் வாழ்ந்த சைவத்துறவி ஞானவரோதய பண்டாரம் என்பவர் செய்யுள்களில் அமைத்திருக்கும் விவரம் அறிந்து சென்னை அரசாங்கத்தார் கீழ்த்திசை நூல் நிலையத்திலிருந்த இரு சுவடிகளை ஆராய்ந்து தணிகை மணி ஸ்ரீ செங்கல்வராய பிள்ளை அவர்கள் M. A. சிறந்த முறையில் தம் விமர்சனக் குறிப்புகளுடனும் வெளியிட்டிருக்கிறார். அனுபந்தத்தில் காணப்படும் பெயரகராதி, அருஞ்சொல் அகராதி, அரிய விஷய அகராதி முதலியன மிகவும் உபயோகப்படத்தக்கவை. இலக்கியச் சுவையுடன் அமைந்த இந் நூலில் விபூதி மான்மியம், உருத்திராக்க மான்மியம், சிவநாம மான்மியம், சிவ விரத மான்மியம், சிவ தரும மான்மியம், சிவபுராண மான்மியம், சிவதுரோக வேதனை, சிவபூஜை மான்மியம், சரியை, வேதாந்த ஞானம், சித்தாந்த ஞானம், மூர்த்தி மாண்மியம் இவைகள் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருப்பதுடன் ஒவ்வொன்றையும் விளக்க, சுவையான கதைகளும் இருக்கின்றன. ஒவ்வொரு அத்யாயத்துக்கும் முன்னால் அதன் சுருக்கத்தை வசனமாக வரைந்து பிள்ளை அவர்கள் சேர்த்திருக்கிறார். சைவத்துக்கு ஓர் சிறந்த தொண்டு இந்நூல்.

## வஸு சரித்ரம்

[தொண்டைமாந்துறை அம்பலத்தாடும் ஐயன் இயற்றியது. சென்னை அரசாங்கக் கீழ்த்திசை நூல்நிலையத்துப் பிரசுரம். விலை 2—12—0]

மஹாமஹோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் தேடி எடுத்த ஓர் நூல் இது. இதைச் சென்னைச் சர்க்கார் நூல் மேலும் சிதையாமுன் பிரசுரித்து விடவேண்டும் என்று பதிப்பித்திருக்கின்றனர்,

மஹாபாரதத்தில் கூறப்படும் உபரிசர வஸு எனும் சேதி நாட்டு மன்னனது வரலாறு இது. முதலில் இராஜ பூஷண கவி என்பவரால் தெலுங்கில் இயற்றப்பட்டது. அதைப் பின்பற்றி மடுவை என்ற ஊரில் வசித்த திம்ம பூபதி என்னும் வள்ளலின் வேண்டுகோளுக்கு இணங்கி, சுவைமிகுந்த தமிழ்ப் பாடல்களின் ஓர் காப்பியமாக 400 வருடங்களுக்கு முன் தொண்டைமாந்துறைஅம்பலத்தாடு ஐயன் பாடியுள்ளார். இதை பிரசுரிக்கும் ஸ்ரீ சந்திரசேகரன் அவர்கள் இந்நூலை, கம்ப ராமாயணம், வில்லி பாரதம், நைடதம் முதலிய காவியங்களுக்கு அடுத்ததாகக் கூறப்பெறும் தகுதிவாய்ந்தது என்று கொண்டாடுகிறார். கற்பனைப் பொருள்களிலும் அணிநயங்களிலும் இந்நூல் சிறப்பு வாய்ந்திருப்பது உண்மையே. 32 படலங்களும் 1003 பாடல்களும் கொண்டது. அணிகளும் வர்ணனைகளும் சேர்த்தால் மட்டில் காவியமாகி விடுமா?

## ஆதிபருவத் தாதி பருவம்

மடுவையம்பதி திம்மபூபதியின் ஊக்கத்தால் தோன்றிய இந்நூலில் மஹாபாரத ஆதிபர்வத்தில் வில்லிபுத்தூரார் விரிவாகப் பாடாதுவிட்ட விநதை மகப்பேறு முதல் சந்தனுவின் சரிதம் வரை உள்ள மஹாபாரதக்கதைகள் பாடப்பட்டிருக்கின்றன. இதுவும் மஹாமஹோபாத்தியாய அய்யர் அவர்களிடமிருந்த பிரதியிலிருந்து அச்சிடப்பட்டதே. இதையும் செய்தவர் அம்பலத்தாடும் அய்யனுகை இருக்கக்கூடும் என்று பிரசுரிப்பவர் ஊகிக்கிருர். இந்நூலும் சிறந்த காப்பிய மாகத் தெளிவு மென்மை சொல்லணிகள் நிரம்பி, காளிதாஸர் பாரவிகளது போன்ற சுவையுள்ள விசித்ர வர்ணனைகளுடன் சேர்ந்து, அகத்துறை இலக்கியமாக விளங்குகிறது. 566 செய்யுட்கள். பத்துச் சருக்கங்களாய்ப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் முகனுரைச் சருக்கம் என்பது வில்லிபுத்தூரார் குமாரர் வரந்தருவார் பாடியது.

100 பக்கங்கள் விலை 1—10—0

## சிவஞான தீபம்

சென்னை அரசாங்கத்துப் பழஞ் சுவடி நூல் நிலையத்திலிருந்த கடிதக் கையெழுத்துப் பிரதி ஒன்றை வித்வான் தமிழ் ஆராய்ச்சியாளர் தி. பொ. பழனியப்ப பிள்ளை அவர்கள் நன்ருக ஆராய்ந்து தஞ்சை சரசுவதிமால் நூல்நிலையத்திலுள்ள மற்ருெரு சுவடியுடன் ஒப்பிட்டு உண்மைப் பாடங்களையும் நூலியற்றவர் பெயர் விவரங்களையும் கண்டு பிடித்து இந்நூலைப் பிரசுரித்திருக்கிருர்கள். சைவசித்தாந்ததை விரிக்கும் இந்நூலில் 96 தத்துவங்களின் விரிவையும் பதியின் கருணையையும் பாடல்களில் அமைத்துப் பாடியிருக்கிருர். பாடியவர் தொண்டை நாடடுப் புலியூரிலிருந்துவந்து திருவலஞ்சுழி பட்டீச்சுரம் முதலிய சோணுட்டுத் தலங்களில் வாழ்ந்து, பல நூல்கள் இயற்றிய சிதம்பரம் இரேவணசித்தர். 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்றும் பதிப்பாசிரியர் ஆய்ந்து விளக்கியுள்ளார்.

## மாணிக்கவாசகர் அம்மானை

சங்கரமூர்த்திப் புலவரால் இயற்றப்பெற்றது

விலை 1—2—0

திருவாதவூரர் புராணத்தைப் பெரும்பாலும் தழுவி எழுதப்பட்ட இந்நூலைச் சென்னைச் சர்க்கார் மேலூர் தாலூகா வீரணப் பிள்ளையவர்கள் உதவிய ஓலைப்பிரதியைக் கொண்டு வெளியிட்டிருக்கின்றனர். 1870 வரிகளால் ஆன இந்நூல் படிப்பதற்கு எளிதாய், பாடல் முறையில் பெரும் சிவத் தொண்டரான மாணிக்கவாசகரது வரலாற்றை 'அம்மானை' யாகஅமைந்திருக்கிறது. அம்மானை வகையைச் சேர்ந்ததல்லாவிடினும் மக்கள் மகிழ்ச்சியுறக் கூடிய இந்நூல் பதித்துப் பிரசுரிக்கப் படவேண்டியதே.

## கப்பல் சாத்திரம்

விலை ரூ. 1—10—0

சென்னைச் சர்க்கார் கைப்பிரதி நூல் நிலையத்திலிருந்த இரு பழைய நூல்களைக் கொண்டு பதிப்பித்தது. வடமொழியில் அர்த்த சாஸ்திரம் முதலிய நூல்களில் கப்பல்களைப்பற்றி அனேக விவரங்கள் கிடைப்பதோடு, கட்டும் முறைகள் 'யுக்தி கல்பதரு' முதலிய நூல்களில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருப்பினும் ஆதிகால முதல் அன்னிய நாடுகளுடன் வாணிபமும் அரசாட்சியும் கொண்ட தமிழ் நாட்டில் கப்பல் கட்டும் விவரங்கள்கொண்ட நூல்கள் இருப்பதாக நாம் இதுவரையில் அறிந்ததில்லை. அதனுல் அரசாங்கத்தார் கப்பல் சாத்திரம் எனும் இந் நூலைப் பிரசுரிப்பது போற்றத் தக்கதாகும். இது 300 ஆண்டுகளுக்குமுன் எழுதப்பட்டு இதுவரையில் பிரசுரிக்கப்படாமல் ஏட்டுச்சுவடியாய் இருந்து வந்திருக்கிறது என்று அறிகிறோம். டென்மார்க் தேசத்தவர் தரங்கம்பாடியில் தஞ்சை நாயக மன்னன் அச்சுதப்பனுடன் உடன்படிக்கை செய்து கொண்டு, கோட்டைகட்டி குடியேறி, கடல் வியாபாரம் செய்துவந்தமையும் அவர்களிடையே 'துபாஷியாக ஒரு சமயம் இருந்த காலிங்கராயப் பிள்ளை வீட்டில் இருந்த சுவடியைப் பார்த்து இந் நூல் எழுதப்பட்டதென்றும் அந் நூல் வடநூலிலுள்ள சௌகாசாஸ்திரத்தின் தமிழ்மொழிப் பெயர்ப்பு என்றும் வடநூலில் வாஸ்து இலக்கணம் பற்றிய சோதிடச் செய்திகள் காண்பது போல் இந் நூலிலும் தமிழ்ச் சோதிடச் செய்திகளும் சேர்க்கப்பட்டனவென்றும் இந் நூலின் முகவுரையிலிருந்து அறிகிறோம். அனேக பிழைபாடுகள் காணப்படும் இந் நூலைக் கூடியவரையில் திருத்தம் செய்து ஸ்ரீ வேங்கடேச்வர கீழ்த்திசைக் கல்லூரி ஆசிரியர் திரு. பழனியப்ப பிள்ளை அவர்கள் பதிப்பித்திருக்கிருர்கள். இவருக்குத் தமிழ்நாடு மிகவும் கடன்பட்டிருக்கிறது. போஜராஜன் எழுதிய 'யுக்தி கல்பதரு'விலிருந்து விதவிதமான கப்பல் வகைககளையும் வர்ணனைகளையும் தொகுத்துக் கொடுத்திருக்கிருர். வடமொழியில் மயனுர் சொன்னதற்கு இணங்கச் செய்யப்பட்ட 'சிற்பசாஸ்திரம்' எனும் மனையடி நூலும் இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ராதா குமுதமுகர்ஜி எழுதியிருக்கும் நூலில் கப்பல் கட்டுதலைப்பற்றிச் சில நூல்கள் கும்பகோணத்தில் சில அறிஞர்கள் வீடுகளில் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கிறது. இதுவும் அரசியலார் சர்ச்சைக்குரியது.

## ஆஸ்தான கோலாஹலம்

பக்கம் 167. விலை ரூ. 5—0—0

'ஒரு குரங்கானது 100 அடி உயரமுள்ள பனைமரத்திலிருந்து கொஞ்சம் உயரமாக நேராய்க் கிளம்பி, குறுக்காக அம்மரத்துக்கு 200 அடி

தூரத்திலுள்ள கிணற்றை அடைந்தது என்றால் அக்குரங்கு மரத்துக்கு மேல் உயரக் கிளம்பிய தூரம் என்ன?' என்று கேட்டால் உங்களுக்கு 'லீலாவதி'க் கணக்குகள் ஞாபகத்துக்கு வருகின்றனவல்லவா? வேதத்திலேயே கணக்குப் பிரச்னைகள் காண்கின்றன. ஆயிரத்தை மீதி இல்லாமல் மூன்றால் வகுப்பது, சுல்ப ஸூத்ர அற்புதங்கள் முதலியவைகளில் ஈடுபட்ட மக்கள் கணித ஆராய்ச்சிகள் பல செய்து நடைமுதலுக்கும் உபயோகிக்கும் விந்தைகளைக் கற்றிருந்தனர். தமிழ் நாடும் இவ்வாராய்ச்சிகளில் பங்குகொண்டு சிக்கலான கணக்குகளுக்கும் வெகு எளிதில் விடை கண்டுபிடிக்க வழிகள் வகுத்து, மாணவர்களுக்கு மனப்பாடம் செய்துவைத்திருந்தது. நூல்களும் பல இருந்திருக்கவேண்டும். சென்னைச் சர்க்கார் தங்கள் நூல் நிலயத்துக்குப் பெரியகுளம் ஸ்ரீ சங்கரவேங்கடராம அய்யங்கார் அளித்த ஒரு கையெழுத்து ஏட்டுச் சுவடியைப் பிரசுரித்திருக்கிறார்கள். கையெழுத்து நூல்நிலயப் பாதுகாப்பாளர் ஸ்ரீ சந்திரசேகரன் அவர்கள் மிகுந்த சிரமம் எடுத்துக்கொண்டு, தமிழ்க் கணக்கும் குறியீடுகளும் அறிந்த அறிஞர்களைக் கலந்தும் பயன்படும் முறையில் பல நிருபணப் படங்களுடனும் வழிகளுடனும் உள்வட்டம் பிரவட்டம், முத்துகை, விகற்பக் கடைத்தலே, விலப் பூட்டு, சேவித்தான் கணக்கு, நிலத்திர்வை, பண வரிசை, நெல்வரிசை, கொள்ளுகிற வகை, நிலமளவு, கால அளவு, குளவெட்டு, மரக்காவலியன், தொகைவிற்பங்கள் முதலியவைகளைக் கொண்ட தமிழ்ப் பாட்டுகளுக்கு விவரண உதாரண ஆங்கில முறைஸமாதானங்களுடன் வெளியிட்டிருக்கிறார். இந்நூல் ஆஸ்தானங்களில் குதூகலத்துக்கு மட்டிலுமல்ல, தமிழ் மாணவர் ஒவ்வொருவருவருக்கும் கற்பித்துப் பயன் பெறச்செய்ய வேண்டிய கடமை அரசியலார்பால் என்றுமுள்ளது.

## சுலப ஹிந்தி போதினி

ரா. வீழிநாதன் எழுதியது; ராகா பிரகாசன் மந்திர்—சென்னை 17 விலை 1—0—0

ஸம்பாஷணை முறையில் அமைக்கப்பட்ட இந்நூல் கற்கும் மாணவர்கள் விரும்பி ஏற்கத்தக்கது.

## ஸசித்ர வர்ணமாலா

ஷ. ராகாப்ராகசன் மந்திர்

விலை 0—3—0

நாகர எழுத்துக்கள் படங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றன. குழந்தைகள் பயமின்றி நாகரலிபியைக் கையில் எடுக்க உதவும். ●



# மாடிஸன் வாழ்க்கை

சி. வி. ராமகிருஷ்ணன்

யூனிவர்ஸிடி டைரக்டரியில் என் பெயருக்கு முன் * இந்தக்குறி போடப்பட்டிருந்தது. அதன் மர்மம் எனக்குப் புரியவில்லை! விசாரித்ததில் விவாகமானவர்களுக்கெல்லாம் இந்தக்குறி உண்டு என்று தெரிய வந்தது! இதன் காரணம் மிகவும் விநோதமானது. யூனிவர்ஸிடி டைரக்டரியில் அங்கு வேலை செய்பவர்கள் ஒவ்வொருவருடைய பெயர், விலாசம், போன் நம்பர் முதலியன கொடுக்கப்பட்டிருக்கின்றன. விவாகமாகாதவர்களாக இருந்தால் டேட்டிங் கிக்கு (Dating) அழைப்பார்களாம்! அதாவது, வெள்ளிக்கிழமை சாயங்காலமே விவாகமாகாத பெண்களும் பிள்ளைகளும் சனிக்கிழமை மாலையைக் குஷியாகக் கழிக்கத் திட்டம் போட்டுக் கொள்கிறார்கள். விவாகமாகாத வாலிபன் தனக்குத் தெரிந்த பெண்ணை, போன் மூலம் அடுத்தநாள் தன்னுடன் வரமுடியுமா என்று கேட்பான். சம்மதித்தால் சனிக்கிழமை சாயங்காலம் அவள் வீட்டுக்குச்சென்று அவளை, பார்க்கு முதலிய இடங்களுக்கு உல்லாசமாக அழைத்துச் செல்வான். அன்று பெண்ணுக்கு ஹோட்டலில் டின்னர் அவன் உபயம்! பிறகு இருவரும் சினிமாவுக்குச் சென்று திரும்புவார்கள். சினிமாவிற்குப் பதில் டான்ஸுக்குப் போவதும் உண்டு. ஒருவரை ஒருவர் பிடித்திருந்தால் ஒவ்வொரு வாரமும் இதே மாதிரி செய்வார்கள். நன்றாகப் பழகி மனதுக்கு ஒத்திருந்தால் வாலிபன் பெண்ணைத் தன்னை மணக்கும்படி கேட்க வேண்டும். பெண்ணும் சம்மதித்தால் பெற்றோர்களுக்கு அறிவித்து விவாகம் செய்து கொள்வார்கள். ஒரு வாரம் வந்த வாலிபன் அடுத்த வாரம் பெண்ணை அழைக்கவில்லை என்றால் அவனுக்குப் பெண்ணைப் பிடிக்கவில்லை என்று அர்த்தம். அவன் கூப்பிட்டு, பெண் வேறு வேலை இருப்பதாகத் தட்டிக் கழித்தால் அவளுக்குப் பிடிக்கவில்லை என்று அர்த்தம்! நெடுநாள் பழகியும் ஒரு வாலிபன் 'Propose' செய்யவில்லையென்றால் (அதுதான் மணக்கும்படி கேட்பது) அவனுக்குக் கலியாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை என்று அர்த்தம். பெண்ணுக்கு இது ஏமாற்றமாக இருந்தால் அவனுடன் வர மறுத்து விடுவாள். இது பெண்களும் பிள்ளைகளும் ஒரு

வருக்கொருவர் பழகி, தங்களுக்குப் பிடித்த வர்களை மணந்துகொள்ள ஏற்பட்டமுறை யாகும். தங்கள் பெண்களை யாரும் 'டேட்டிங்குக்கு அழைக்கவில்லையென்றால் தாய்மார்கள் மிகவும் கவலைப்படுவார்கள்! படிப்பும் பணமும் உள்ள வாலிபர்கள் அழைத்தால் பெண்ணுக்கு நல்ல சம்பந்தம் கிடைக்கப் போகிறதென்று மகிழ்கிறார்கள்!

இதைத்தவிர **'Blind Dating'** என்று ஒன்று உண்டு. ஒருவருடனும் அதிகப் பழக்கமில்லாத ஆண்களும் பெண்களும் தங்கள் பெயரை இதற்கென உள்ள ஆபீஸில் பதிவுசெய்து கொள்வார்கள். ஆபீஸுக்குப் போன் செய்தால் ஒரு பெண்ணின் பெயரையும் விலாசத்தையும் கொடுப்பார்கள். அவளை அழைத்துச் செல்லவேண்டும். வரும் பெண் குமரியோ, கிழவியோ, அது அவரவர்கள் அதிர்ஷ்டம். 'டேட்டிங்' ஒன்றுக்கு நான் கைந்து டாலர் கையைவிட்டுப் போகும். (25 ரூபாய்) நல்லவேளை * குறி என்னைக் காப்பாற்றியது! ஒருவரும் சிந்துவாரில்லை! மணமாகாமல் வந்திருந்தால் இங்கே குஷியாகக் காலம் கழிக்கலாம் என்று ராஜிக்கு எழுதினேன். 'இப்பொழுதுதான் என்ன? மணமாகவில்லை என்று சொல்லிவிடுங்கள்" என்று காரசாரமாகப் பதில் வந்தது! விவாகமான தம்பதிகள் ஒவ்வொரு சனிக்கிழமையும் 'பிக்னிக்' (உல்லாசப் பிரயாணம்) போகிறார்கள். சில சமயம் நண்பர்கள் சேர்ந்து ஏராளமாகக் குடிப்பார்கள். மாடிஸனுக்கருகில் உள்ள 'மில் வாக்கீ' சாராயத்துக்குப் பிரசித்தி பெற்றது. **"I come from Milwakee, I ought to know the beer use"** என்ற பாட்டை ரேடியோவில் நேயர்கள் கேட்டிருக்கலாம். இரவு ஒரு மணிக்குக் குடித்துவிட்டுத் தெருவில் ஆடிக்கொண்டும் கத்திக்கொண்டும் செல்வார்கள். அவர்களுக்கு எதிர்பட்டால் நாம்தான் மரியாதையாக விலகிச் செல்லவேண்டும். அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை விடுமுறையாகையால் பொழுது விடிந்து வேலையைக் கவனிக்கவேண்டுமே என்ற கவலை இல்லை. என்வரை, சனிக்கிழமை இரவுகளை நான் மிகவும் சந்தோஷமாக வரவேற்றேன். **'Dating'** போவதற்காக அல்ல! சில இந்தியர்கள் மாடிஸனில் என் வீட்டுக்கருகிலேயே வசித்து வந்தார்கள். மூன்று குஜராத்தியர்கள், ஒரு'சாரி' (ஐயங்கார்), ஒரு ராவுஜீ. சனிக்கிழமை மாலை அவர்கள் வீட்டிற்குச் சென்றும் இரவு பன்னிரண்டு மணிவரை நம் ஊரைப்பற்றி அரட்டை அடித்துவிட்டுத் திரும்புவேன், 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' வரவழைத்துக் கொண்டிருந்தோம். எங்கள் பேச்சில் இந்திய அரசியல் வேறு பலமாக அடிபடும். என்னதான் அமெரிக்கர்கள் நண்பர்களாக இருந்தபோதிலும், இவர்களுடன் பேசும் பொழுது தாய்நாட்டுக்கு வந்துவிட்டது போலவே தோன்றும். நான் தங்கியிருந்த வீட்டிலிருந்த ஜெர்மானிய தம்பதிகள் எனக்குப் புரியாமல் இருப்பதற்காக அடிக்கடி ஜெர்மன் பாஷையில் பேசிக்கொள்வார்கள். நான் வஞ்சம் தீர்ப்பதற்காகச் சாரியை போனில் அழைத்து, மணிக்கணக்காகத் தமிழில் 'விளாசி'விடுவது வழக்கம்!

ஒரு நாள் ஸ்ரீமதி பெய்னர்ட் "இன்றைக்கு ஒரு செண்ட் விற்பனை, வருகிறீர்களா?" என்று கேட்டார்கள். எனக்குப் புரியாததால் விளக்கும்படி கேட்டேன். ஒரு பொருளுக்கு வழக்கமான விலையைவிட ஒரு செண்ட் அதிகமாகக் கொடுத்தால் பொருளில் ஒன்றுக்குப் பதில் இரண்டு கிடைக்கும். இந்த மாதிரி வருஷத்தில் ஒருவாரம் விற்பனை வைத்துக்கொள்கிறார்கள். அதிகப்படி தேங்கியிருக்கும் சரக்கைத் தள்ளிவிட இது ஒரு வழி. நான் கடைக்குப்போய் ஆறு மாதத்திற்கு வேண்டிய டூத்பேஸ்ட், ஸோப் வகையராக்களை வாங்கிக்கொண்டேன். கட்டிக்கொடுத்த சாதமும் சொல்லிக்கொடுத்த வார்த்தையும் எத்தனை நாளைக்கு வரும் என்ற பழமொழி நினைவுக்கு வந்தது. என்னதான் ஒரு செண்ட் விற்பனை விற்றாலும் ஆறு மாதத்திற்குத்தானே 'ஸ்டாக்' செய்துகொள்ளலாம்? என்ற வருத்தம் உண்டாயிற்று.

ஒரு நாள் தபால்காரனிடமிருந்து சின்ன சீட்டு ஒன்று வந்தது. ஊரிலிருந்து ஏதாவது பார்ஸல் வந்ததோ என்று பரபரப்புடன் வாங்கிப்பார்த்தேன். இந்தியாவிலிருந்து ஒரு நண்பன் முக்காலணா கார்டை எழுதிப் போஸ்ட்பண்ணியிருந்தான். அமெரிக்காவுக்கு இந்தியாவிலிருந்து எழுதுவதாய் இருந்தால் ஒரு கார்டுக்கு எட்டணா, ஒரு கவருக்கு $1\frac{1}{2}$ ரூபாய், ஒரு ஏர்-மெயில் கவருக்கு ($1\frac{1}{2}$ அணா கவர் மாதிரி) 10 அணா. இந்த நண்பனுக்கு அமெரிக்கா வெளிநாடு என்ற பேதபுத்தியே இல்லை போலும்! வேறு வழியில்லாமல் அதிகப்படி கட்டணத்தைக் கொடுத்து, கார்டை வாங்கிக்கொண்டேன். நான் அமெரிக்கா வந்திருப்பதாகக் கேள்விப்பட்டதாகவும் சந்தோஷம் என்றும் ஒரு கடிதம்! இன்னொரு முறை, என் மனை

வியே 1 ரூபாய் ஸ்டாம்பு ஒட்ட மறந்து விட்டாளோ (அல்லது வேண்டுமென்றே, தெரியாது) என்னவோ, எட்டணு ஸ்டாம்பு மாத்திரம் ஒட்டியிருந்தாள். இரண்டு ரூபாய் கட்டிப் பிரித்துப் பார்த்தால் ஊரில் எல்லாரும் சௌக்யமென்றும் என் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும்படியும் வழக்கமான பல்லவி! மூன்றும் முறை, ஒரு கவரைக் கட்டணம் கட்டி எடுத்துக் கொண்டேன். கெமிக்கல் ஸொஸைடியிலிருந்து சந்தா செலுத்தும்படி வேண்டுகோள்! அமெரிக்காவில் ஸ்டாம்பு குறைவாக ஒட்டினுல் எழுதியவருக்கே திருப்பி அனுப்பி விடுகிறுர்கள். இது நல்லவழி என்று தோன்றியது! இங்கு மணியார்டர் அனுப்ப வேண்டுமானுல் போஸ்ட் ஆபீஸில் பணத்தைக் கட்டினுல் கார்டு மாதிரி ஒரு ரசீது தருகிறுர்கள். அதைப் பணம் சேர வேண்டியவருக்கு அனுப்பிவிட வேண்டும். அவர் தபாலாபீஸில் அதைக்காட்டி, பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். நம் ஊர் 'போஸ்டல்ஆர்டர்' மாதிரி. தந்தி கொடுக்கத் தனியாக (**Telegraph Company**) இருக்கிறது. இது சர்க்காரால் நடத்தப்படுவதல்ல. தனி நபர்கள் சேர்ந்து நடத்தும் கம்பெனி, தந்தி ஆபீஸுக்குப் போன் செய்து தந்தி கொடுத்து விடலாம். சமாசாரத்தைச் சொல்லிவிட்டால் வார்த்தைகளை அவர்களே சொல்லிவிடுவார்கள், தந்தியில் எப்படிச் சமாசாரத்தைச் சுருங்கச் சொல்லி விளங்கவைப்பது என்று நாமே மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டியதில்லை. டெலிபோன் நம்பரைச் சொல்லி விட்டால் பில்லை வீட்டுக்கு அனுப்பிடுவார்கள். அப்புறம் பணம் கொடுத்தால் போதும். நம் நாட்டில் இந்த முறையைக் கொண்டு வந்தால் பொய் நம்பர்களுக்குக் கணக்கேயிராது! சில நாட்களில் கம்பெனியை இழுத்து மூடவேண்டியதுதான்! இன்னெரு சௌகரியமும் உண்டு. குறிப்பிட்ட நாளில் தந்தி கொடுக்கும்படி முன்னரே அறிவித்துவிடலாம். உதாரணமாக, ஒரு நண்பரிடமிருந்து விவாக அழைப்பு வருகிறது. விவாக தினத்தன்று தந்திகொடுக்க உத்தேசித்திருக்கிறேம். எப்படியோ அன்று மறந்து விடுகிறது. இங்கே, விவாகதினத்தன்று தந்தி கொடுக்கும்படி முன்னுலேயே பதிவுசெய்து கொள்ளலாம். என் நண்பன் ஒருவன் திருமணத்திற்கு இந்த மாதிரி தந்திகொடுக்க ஏற்பாடு செய்திருந்தேன். அவனுக்கு அது சரியான நேரத்தில் போய்ச் சேர்ந்ததில் மிகவும் சந்தோஷம். எல்லாரிடமும் பெருமையாக, "அமெரிக்காவிலிருந்து கரெக்டாகத் தந்தி வந்திருக்கிறது" என்று சொல்லிக் கொண்டானும்!

இங்கே போஸ்ட் ஆபீஸுக்கு ஒரு முறை சென்றபொழுது ஒரு மூலையில் ஏராளமான அட்டைப் பெட்டிகளைப் பார்த்தேன். பார்த்தால் **'Laundry Boxes'** (சலவைப் பெட்டிகள்) என எழுதியிருந்தது. விவரம் விசாரித்தேன். இங்கு வண்ணுன் கூலி மிகவும் அதிகமாகையால் கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் அழுக்குத துணிகளை இப் பெட்டிகளில் போட்டு வீட்டுக்கு அனுப்பி விடுகிறுர்கள். அவர்களுடைய தாய்மார்கள் அவற்றைச் சலவைசெய்து மறுபடி அந்தப் பெட்டியிலேயே தங்கள் பிள்ளைகளுக்கு அனுப்பிவிடுகிறுர்கள். இந்தப் பெட்டி 'புக் போஸ்ட்' ரேட்டில் போய்விடும். ஒரு கோட்டுக்கு $1\frac{1}{2}$ டாலர் (7 ரூபாய்) கொடுக்கவேண்டிய இந்தத் தேசத்தில் இந்த முறை இல்லாவிட்டால் மிகவும் திண்டாட்டமாக இருக்கும். இங்கு ஒவ்வொரு பெண்ணுக்கும் சலவைத்தொழில் நன்றுகத் தெரிந்திருக்கிறது, வீட்டிலேயே அழகாக எல்லாத் துணிகளையும் தோய்த்து, இஸ்திரி போட்டு விடுகிறுர்கள். நம் நாட்டிலோ வண்ணுன் கணக்குக்கூட நாமே எழுதவேண்டியிருக்கிறது. அவசரமாக வெளியூருக்குப் போக வேண்டியிருந்தால் வண்ணுனிடம் 'அர்ஜண்ட் சலவைக்குச் சரணுகதி அடைய வேண்டியிருக்கிறது! குடும்பக் கலையில் அமெரிக்கப் பெண்களுக்கு இருக்கும் தேர்ச்சியைப் பற்றி என் தர்மபத்தினிக்கு விளக்கமாக எடுத்துரைக்கவேண்டும் என்று மனத்திற்குள் தீர்மானம் செய்துகொண்டேன்! இங்கு ஒவ்வொரு வீட்டிலும் சலவைசெய்யும் மெஷினும் மின்சார இஸ்திரிப் பெட்டியும் இருக்கின்றன. அது இல்லாதவர்கள் சனிக்கிழமை பிற்பகலில் லாண்ட்ரிக்குச் சென்று சலவை மெஷினை ஒரு மணிநேரத்துக்கு வாடகைக்கு எடுத்துக்கொண்டு துணிகளைச் சலவை செய்துகொண்டு வந்துவிடுவார்கள். ஒருமணி நேரத்துக்கு 10 சென்ட் வாடகை.

பெரும்பாலான வீடுகளில் சலவை மெஷின் ரெப்ரிஜிரேடர் (பனிப்பெட்டி) தையல் மிஷின் முதலிய வசதிகள் இருக்கின்றன, ஒரு குடித்தனம் ஆரம்பிக்கும்பொழுதே தவணை முறையில் இவற்றை வாங்கிக் கொண்டுவிடுகிறுர்கள். மாதம் இவ்வளவு என்று செலுத்திக்கொண்டே வந்தால் பல வருஷங்களில் பொருள் நமக்குச் சொந்தமா

கும். வீடு, மோட்டார் முதற்கொண்டு இந்த முறையில் வாங்கிக்கொள்ளலாம். உடம்புக்கு வந்தால் வைத்தியம் செய்து கொள்ள, 'ஹெல்த் இன்ஷ்யூரன்ஸ்' எடுத்துக் கொள்கிறார்கள். ஏன், மரணம் ஏற்பட்டால் ஈமக்கிரியைகளுக்கான செலவுகளுக்குக்கூட இன்ஷ்யூரன்ஸ் உண்டு! சம்பளம் வந்தவுடன் இன்ஷ்யூரன்ஸுக்கும் பலவேறு தவணைகளுக்கும் பணத்தைப் பங்குபோட்டுக் கொடுத்து விட்டு 'ஹாய்யாக' இருக்கலாம். ஆனால் இங்கு மக்கள் உத்சாகத்துடன் வேலைசெய்து உத்சாகத்துடன் காலம் கழிக்கலாம். எதிர் காலத்தைப் பற்றிய கவலை இல்லை. எழுபது வயதுக்குமேல் ஒவ்வொருவருக்கும் அரசாங்கப் பென்ஷன் உண்டு. அதுவரை வேலை செய்யலாம். குழந்தைகள், தங்கள் மேல் படிப்பைச் சம்பாதித்துக்கொண்டே பார்த்துக்கொள்கிறார்கள். கல்யாணமோ அவரவர்கள் பாடு. பெற்றோர்கள் பொறுப்பு இல்லை. கருமாந்தரச் செலவைக்கூட இன்ஷ்யூரன்ஸ் பார்த்துக் கொள்கிறது. இந்தத் தவணை முறையைப்பற்றிக் கேலி செய்வதுண்டு, அறுபது வயது அமெரிக்கன் ஒருவன் ஆபீஸிலிருந்து வரும்பொழுது மிகவும் குஷியாக இருந்தானும். மனைவி காரணம் விசாரித்தாளாம். "நம் கல்யாணத்திற்கு வாங்கின மோதிரத்திற்கு முழுத் தவணையும் செலுத்தியாகிவிட்டது. இனி மோதிரம் நமக்கே சொந்தம்" என்றானும்!

புதிதாக விவாகமானவர்கள் பெரிய வீடுகளில் அதிக வாடகை கொடுத்துக்கொண்டு இருக்கமுடியாவிட்டால், தவணை முறையில் 'ட்ரெய்லர் வீடு' (**Trailer Houses**) வாங்கிக் கொள்கிறார்கள். அதாவது 'ட்ரெய்லர் பஸ்ஸை' ஒரு வீடாக மாற்றிவிடுகிறார்கள். சிறிய இடத்தில் படுக்கை அறை, சமையலறை எல்லாம் அமைத்துக் கொள்கிறார்கள். பனிப்பெட்டி, கையலம்பும் தொட்டி (**wash Basin**) பீரோ எல்லாம் இதிலேயே. அலமாரிக்குள் இருக்கும் பலகையை நீட்டினால் சாப்பிடும்பொழுது மேஜையாகிவிடும். பிறகு மடக்கி அலமாரியிலேயே அடக்கிவிடலாம். ஒரு பெரிய நிலத்தில் இம்மாதிரி பல ட்ரெய்லர் வீடுகள் இருக்கும். லீவுக்கு எங்காவது போகவேண்டுமென்றால் இதைக் காருடன் இணைத்துவிடலாம். நத்தையைப்போல் நாமும் வீட்டுடன் பிரயாணம் செய்யலாம்! கார் நகர்ந்து கொண்டிருக்கும் பொழுதே சமையல் செய்யலாம். பொதுவாக அமெரிக்கர்கள் ஒரு வேலையில் ஸ்திரமாக இருக்கமாட்டார்கள். எங்காவது அதிகச் சம்பளம் கிடைக்கும் வேலைக்குத் தாவிக்கொண்டே இருப்பார்கள். அவர்களுக்கு இந்த வீடு மிகவும் செளகரியம்!

அநேகமாக எல்லாரும் கார் வைத்துக் கொள்ள முடிகிறது. இதற்குக் முக்கியக் காரணம் பெட்ரோல் அதிகமாகக் கிடைக்கிறது. ஒரு டாலருக்கு 4 காலன், 6 காலன், 9 காலன் என மூன்று ரகங்கள் இருக்கின்றன. மூலைக்கு மூலை பெட்ரோல் பங்குகள் இருக்கின்றன. காரில் வருகிறவர்கள் ½ காலன் போடு, ½ காலன் போடு என்று தரித்திரபட்சமாகக் கேட்பதில்லை. காரில் வருகிறவர்கள் "**Fill up**" என்று கத்துகிறார்கள். பெட்ரோல் டாங்க் எவ்வளவு கொள்ளுமோ அவ்வளவு நிரப்பிக் கொள்கிறார்கள். 'ஆடமேடிக் வாயுமீட்டரைக்கொண்டு டயர்களுக்குக் காற்று அடித்தல், கண்ணாடிகளைத் துடைத்தல் முதலிய வேலைகளையும் பெட்ரோல் பங்கில் செய்துவிடுகிறார்கள். கார் ரிபேரானால் ஏகப்பட்ட செலவு ஆவதால் ஒருவரும் பழைய காரை ரிபேர் செய்வதில்லை. அதற்குப் பதில் புதியகாரே வாங்கிக் கொள்கிறார்கள். 2000 ரூபாய்க்குக்கூடக் கார் கிடைப்பதால் காலேஜ் மாணவர்கள்கூட, கார் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இங்கு ரேடியோ நிலையங்களைக்கூட அரசாங்கம் நடத்துவதில்லை. ஒவ்வொரு ராஜ்யத்திலும் இரண்டு மூன்று ரேடியோ நிலையங்கள் இருக்கின்றன. இவற்றைத் தனிப்பட்ட ஸ்தாபனத்தார் நடத்துகிறார்கள். தவணை முறையில் வாங்கப்படும் பொருள்களில் ரேடியோவும் ஒன்று. மலிவாக வேண்டுமானால் 5 டாலருக்குகூட ஒரு ரேடியோ வாங்கலாம். முக்கியமாக, செய்திகள் கேட்பதற்காகவே ரேடியோ வைத்துக் கொள்கிறார்கள். இங்கே தெருவில் வேலை செய்பவர்கள் கூடப் பக்கத்தில் ரேடியோ வைத்துக் கொண்டு அதைக் கேட்டுக்கொண்டே வேலை செய்வது விநோதமாக இருக்கிறது. ரேடியோவில் பேசுவதற்குப் பணம் கிடையாது.

டாக்ஸிகளில்கூட ரேடியோ அமைத்திருக்கிறார்கள். போன் மூலம் பேசிக்கொள்வது போல இந்த ரேடியோக்கள் மூலம் பேச முடியும். டாக்ஸிகளில் இரண்டுவகை இருக்கின்றன. – சாதாரண டாக்ஸி, பிரதேச டாக்ஸி (**Regular Taxis and Zonal Taxis**) சாதாரண டாக்ஸிகளுக்கு மஞ்சள் வர்ணம் பூசப்பட்டிருக்கும். இதைக் கூப்பிட்டால்



பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# தேனீர்

இரவு பகல் எந்த வேளையிலும், எந்த நிலையிலும் தேனீர் உற்சாகம் அளிக்கிறது.

# லலிதா

காலை வேளைக்குரிய லலிதா ராகத்தின் உருவகப்படத்தை மேலே காணலாம். மிகுந்த வேதனையுடன் காதலர்கள் பிரிவதையும் இரவும் பகலும் பிரிவதையும் சங்கேத பாஷையில் அது வெளியிடுகிறது.



## நீங்கள் எப்பொழுதாவது பென்சில் சீவுவதற்கு வாளை உபயோகிப்பீர்களா?

சுத்த மடத்தனம் என நீங்களே கூறுவீர்கள். ஆயினும் பாட்டரி ரேடியோ உபயோகிக்கும் அநேகர் குறைந்த சக்தி செலவில் திருப்திகரமாக ரேடியோ கேட்க முடிந்தாலும் கூட மிகவும் சக்தி வாய்ந்ததும் அதிக செலவு அளிக்கக் கூடியதுமான ஸெட்டுகளை உபயோகிக்கிறார்கள்.

குறைந்த செலவில் வேலை செய்யும் ஒரு ரேடியோ ஸெட் சக்தியை சிக்கனமாக செலவிட்டு உங்களுடைய பணத்தை எப்பொழுதும் மிச்சப்படுத்துகிறது. ஆகையால் நீங்கள் குறைந்த சக்தியில் வேலை செய்யும் ரேடியோ ஸெட்டை வாங்கி, பாட்டரியை வீணாக்காமல் திருப்திகரமாக ரேடியோ கேளுங்கள்.

ஆனால்
உங்களுடைய ரேடியோ
ஸெட் எதுவாயிருந்தாலும்

**EVEREADY** . .
TRADE-MARK

எவரெடி ரேடியோ பாட்டரிகளையே
உபயோகியுங்கள்

ஒரு
நாஷனல் கார்பன்
தயாரிப்பு

NCC 3607

ஒருவராக இருந்தாலும் டாக்ஸி முழுவதை யும் நாமே எடுத்துக்கொள்ளவேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்திற்குப்போக ஒரு ஸீட்டு மாத்திரம் வேண்டுமானால் பிரதேச டாக்ஸி கம்பெனிக்குப் போன் செய்ய வேண்டும். கம்பெனியார் ரேடியோ மூலம் அந்தப்பக்கம் ஏற்கனவே போய்க் கொண்டிருக்கும் டாக்ஸிக்குச் சொல்லுவார். அந்த டாக்ஸி வந்து நம்மை ஏற்றிக் கொண்டுபோகும். நகரத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் தனியாகச் சில டாக்ஸிகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு பாகத்தி லிருந்து மற்றொரு பாகத்திற்குப்போக ஆளுக்கு 15 சென்ட் (15 அணா). ஆனால் இந்தப் பிரதேச டாக்ஸிகளுக்குக் கொஞ்ச நேரம் காத்துக் கொண்டிருக்கவேண்டும். காரணம் கம்பெனியிலிருந்து ரேடியோ மூலம் ஓயாமல் இவற்றுக்கு ஆர்டர்கள் வந்து கொண்டிருப்பதால் ஒவ்வொரு வீட் டிற்கும் சென்று ஒவ்வொருவராக ஏற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. பலபேர் இருந்தால், இத்தனைபேர் இருக்கிறோம் என்று கம்பெனிக்கு அறிவித்துவிட வேண்டும். இந்தப் பிரதேச டாக்ஸிகளைப் பார்த்தபொழுது பெங்களூர் ஜட்கா வண்டிகளின் ஞாபகம் வந்தது. அங்குச் சில ஜட்காக்காரர்கள் தாங்கள் போகுமிடத்தை, உதாரணமாக 'மல்லேசுவரம்! மல்லேசுவரம்' என்று கத்திக்கொண்டிருப்பார்கள். மல்லேசு வரம் போக வேண்டியவர்கள் அதில் ஏறிக் கொள்ளலாம். ஆகையால் வண்டிச்சத்தம் குறையும். எழும்பூரிலிருந்து சென்ட்ரலுக் குப் போக வேண்டுமானால் பல பிரயாணிகள் தனித்தனியாக டாக்ஸி வைத்துக் கொள்கி றோம். நான்கு பேர் சேர்ந்து வைத்துக் கொண்டால் எல்லோருக்கும் லாபம். ஜனங்களும் டாக்ஸி என்றாலே, கட்டுப் படியாகாதென்று காததூரம் ஓட மாட்டார்கள்! அமெரிக்காவில் ஏராளமான டாக்ஸிகள் இருந்தும் சில சமயம் மணிக் கணக்காகக் காக்க வேண்டியிருக்கிறது. ஒரு நாள் இரவு 'இன்ஸ்டிட்யூட்டி'லிருந்து திரும்புமுன் பலத்த மழை ஆரம்பித்து விட்டது. இங்கு மழை வரும்பொழுதே இடியும் மின்னலும் அமர்க்களமாக இருக்கும். (ஆனால் மழைநின்று ஐந்துநிமிஷங் களுக்குள் தெருவில் மழை பெய்த அடையாளமே இல்லாமல் தண்ணீர் வற்றி விடும்) டாக்ஸி கம்பெனிக்குப் போன் செய்தேன். காத்திருந்ததுதான் மிச்சம்! மழை நின்று நெடுநேரம் ஆகிவிட்டது! கம்பெனிக்குப் போன் பண்ணியாகிவிட்டதே என்று நின்று கொண்டிருந்தேன், முக்கால் மணி கழித்து, சாவகாசமாக டாக்ஸி வந்தது. இங்குப் பெண்களும் டாக்ஸி டிரைவர்களாக வேலை பார்க்கிறார்கள். அநேக டாக்ஸி டிரைவர்கள் என்னுடன் தாங்கள் இந்தியாவில் யுத்த காலத்தில் இருந்தவர்கள் என அறிவித்து என்னுடன் பேச்சுக் கொடுத்திருக்கிறார்கள். நம் ஊர் மசாலா கறியையும் காப்பியையும் இவர்கள் வெகுவாகப் புகழ்கிறார்கள்.

மசாலா கறியென்றதும் ஞாபகம் வருகிறது. இங்குள்ள இந்தியர்கள் சேந்து வருஷத்திற்கு இரண்டு மூன்றுதடவை அமெரிக்கநண்பர்களுக்கு விருந்து அளிக்கிறார்கள். நான் இந்திய முறையில் ஒரு விருந்து கொடுக்க நினைத்து, அதற்கேற்ற பொருள்களை அனுப்பும்படி ராஜிக்கு எழுதி யிருந்தேன். வடாம், அப்பளம் ஊறுகாய், பருப்புப்பொடி, வாசனைப்பாக்குப்பொடி, மசா லாத் தூள், முந்திரிப்பருப்பு, அவல் முதலிய பொருளகளை அனுப்பியிருந்தாள், அவற்றைத் தவிர, முறுக்கு, வறுவல் மைசூர்பாகு போன்ற பட்சணவகைகளும் வந்தன. பார்சல் வந்திருக்கிறதென்றதும் நாங்கள் மிகுந்த பரபரப் புடன் பிரித்துப்பார்த்தோம். அவல் பாயசம் செய்து ஒன்றும் தரமான விருந்து ஒன்று தயாரித்து விட்டான் என் குஜராத்தி நண்பன் படேல். பார்ஸலில் ஒரு பாட்டிலில் வைக்கப் பட்டிருந்தது என்ன என்று எனக்கே தெரிய வில்லை! ஸ்ரீமதிபெய்னர்ட் அதை மிகவும் ரசித்து, அது என்ன என்று கேட்டார். ஒரு வேளை, விளாம்பழ 'ஜாம்' (Jam) ஆக இருக்கும் என்று நினைத்தேன். ஏனென்றால் அதில் கொஞ்சம் சளித்த வாசனை வந்தது. பிறகு எழுதிக் கேட்டதில் அது திரட்டுப்பால் என்று தெரிய வந்தது! நல்லவேளை, நான் அதைச் சாப்பிட வில்லை! அந்த அம்மாளுக்குத் தாம் சாப்பிட்ட பொருளின் இரசாயன அமைப்பு மாத்திரம் தெரிந்தால், பாவம், பயத்தினால் உயிரையே விட்டு விடுவார்! வடாம், அப்பளாம் வகையராக் களை என் நண்பர்கள் மிகவும் இரசித்தார்கள். இந்தப் பார்சலை அனுப்ப 50ரூ ஸ்டாம்பு ஒட்ட வேண்டியிருந்தது! உள்ளே ஐம்பது ரூபாய் பொறுமான பொருள் இருந்ததா? என்றுதான் எனக்குச் சந்தேகம். என் இந்திய நண்பர்கள் ஊறுகாய் ஜாடிகளை விடாமல் பற்றிக் கொண் டார்கள். எங்களுக்கு இருந்த சந்தோஷத்தையும் திருப்தியையும் நினைத்தால் ஐம்பது ரூபாய் அதிகமில்லை என்று தோன்றியது.

நம் ஊர்களில் ஏராளமான கோயில்கள் இருப்பது போல் இங்கே சின்ன ஊரிலும் கூட பல தரப்பட்ட சர்ச்சுகள் இருக்கின்றன. கதோலிகர்கள், புரோடஸ்டண்டுகள், பிரிஸ் பிடீரியர்கள் எனப் பல கொள்கையினருக்குத் தனித்தனி சர்ச்சுகள். கதோலிகர்களும் புரோட

ஸ்டண்டுகளும் ஒருவரையொருவர் முகாலோபனம்கூடச் செய்வதில்லை. நம் நாட்டுச் சைவ வைஷ்ணவச்சண்டையே தேவலை என்று தோன்றுகிறது! சர்ச்சுகளில் மக்களைக் கவர்வதற்காக ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் குறைந்த கட்டணத்திற்கு நல்ல விருந்து கொடுக்கிறார்கள். அதற்கு யார் வேண்டுமானாலும் போகலாம். அதற்காகச் சர்ச்சுக்குள்ளேயே சமையலறை முதலியன பிரமாதமாகக் கட்டியிருக்கிறார்கள். (நம் ஊர் மடைப்பள்ளியின் ஞாபகம் வருகிறதல்லவா!) இவற்றில் ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டுதான் எங்கள் இந்திய விருந்து கொடுத்தோம்.

இங்கே சினிமாக்களில் ஒரே வகுப்புத்தான் உண்டு. பகல்12மணியிலிருந்து இரவு 12மணி வரை காட்சிகள் தொடர்ச்சியாக நடக்கும். பகலில் 60செண்ட் (3ரூபாய்) இரவில் 1டாலர் (5ரூபாய்) நாம் எப்பொழுது வேண்டுமானாலும் உள்ளேபோய் வெளியே வரலாம். ஒரேயடியாக நீண்ட நேரம் உட்கார்ந்து சினிமாபார்க்கப் பொறுமையில்லை யென்றால் ஒரு காட்சியில் பாதி பார்த்துவிட்டு வந்து விடலாம். பிறகு இன்னொரு காட்சியில் விட்ட இடத்திலிருந்து பார்த்துக் கொள்ளலாம். இங்கு 'ஆடமேடிக்' யந்திரங்கள் மூலம் ஆரஞ்சு ரஸம், கோகோ கோலா, சாராயம் முதலியன விற்பனையாகின்றன. 10செண்ட் போட்டு ஒரு பித்தானை அழுத்தினால் காகிதடம்ளரில் ஆரஞ்சு ரஸம் குதித்தெழுந்து வரும்!

கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு ஒரு வாரம் முன்னால் யாரோ எனக்கு அறிமுகமில்லாத ஒருவர் கிறிஸ்துமஸ்ஸுக்குத் தம் வீட்டுக்கு வரும்படி என்னை அழைத்தார். (யாராவது ஓர் இந்தியரை அதிதியாகஉபசரிக்க அவர் விரும்பினாராம்!) நானும் சந்தோஷமாக அவர் அழைப்பை ஏற்றுக் கொண்டேன். அவர் வீட்டுக்குழந்தைகள் என்னுடன் மிகவும் குதூகலத்துடன் விளையாடிக் கொண்டிருந்தன. சாப்பாடு, விளையாட்டு, அளவளாவுதல் எல்லாம் முடிந்தபின் என்னை வீட்டுக்குக் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனார். அமெரிக்கர்களுக்குக் கிறிஸ்துமஸ்ஸும் புதுவருஷப் பிறப்பும் தான் முக்கியமான பண்டிகைகள். அன்று தான் விருந்து, பார்ட்டி முதலியன கொடுப்பது, வாழ்த்துகள் அளிப்பது, பரிசுகள் வழங்குவது, உறவினர்களுக்குக் கடிதம் எழுதுவது எல்லாம் மும்முரமாக நடக்கும். வருஷத்தில் எட்டு நாட்கள் தான் இங்கு விடுமுறை நாட்கள். இந்தியக் கோயில்கள், சிற்பங்கள் இவற்றின் போட்டோக்களை ஒட்டி, கையினால் எழுதிய கிறிஸ்துமஸ் வாழ்த்துக்களை என் நண்பர்களுக்கு வழங்கினேன். எங்கள் டைரக்டர் க்ரீன் என் வாழ்த்துக் கடிதத்தை மிகவும் ரசித்தார்.

நான் இருந்த இடத்தைச் சுற்றி ஜெர்மனியிலிருந்து குடியேறியவர்கள் மிகவும் அதிகம். இவர்கள் பேசும் ஆங்கிலம்கூட வித்தியாசமாக இருக்கும் 'yes' என்பதற்குப் பதில் 'ya' அல்லது 'yeh' என்று சொல்லுவார்கள். இந்தமாதிரி ஐரோப்பாவின பல நாடுகளிலிருந்து வந்து குடியேறியிருக்கிறார்கள். ஒவ்வொரு நாட்டினரும் பேசும் ஆங்கிலம் வித்தியாசமாக இருக்கிறது, நாம் பலவிதமாகத் தமிழ் பேசுவதுபோல். இந்தியர்கள் பேசும் ஆங்கிலத்தைக் கேட்டால் "எந்த மாகாணத்திலிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள். இந்தியாவிலிருந்து என்று சொன்னால், "இவ்வளவு நன்றாக ஆங்கிலம் பேச எபபடிக் கற்றுக்கொண்டீர்கள்?" என்று ஆச்சரியப்படுகிறார்கள். நம்நாட்டில் கிராமாந்தரங்களிலும் கூட இங்கிலீஷ் வார்த்தைகள் சர்வ சாதாரணமாக அடிபடுவதை இவர்களால் நம்பவே முடியவில்லை!

நான் வந்தவுடன் ஆரம்பித்த குளிர் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே வந்து டிசம்பர் மாதம் உச்ச நிலையை அடைந்தது. மரங்களில் இலைகளெல்லாம் உதிர்ந்து பனிமூடிக் கொண்டிருந்தது. ஒரு நிமிஷம் காதைத் திறந்து வைத்திருந்தால் குளிர்காற்று வீசி எரிச்சலை உண்டாக்கும். இந்தக் குளிரில் ஏரிகளெல்லாம் உறைந்து பனியில் சறுக்க (Skating) மக்கள் திரள் திரளாகக் கூடுவார்கள். நானும் ஒருநாள் வேடிக்கையாகச் சறுக்க வருவதாகச் சொல்லிவிட்டேன். குழந்தைகளைக்கூட 'Sled'-ல் உட்கார வைத்து, சரிவில் கீழே தள்ளிவிடுவார்கள். எனக்குச் சறுக்க மிகவும் பயமாக இருந்தது. "இஸபெல்கூட சறுக்குகிறாளே, உங்களுக்கு இவ்வளவு பயமா?" என்று கேலி செய்தார் டாக்டர் பெய்னர்ட். ரோஷம் பொத்துக்கொள்ள, உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு கால்கள் 'தத்தக்க பித்தக்க' என்று தள்ளாட, ஒருவழியாகச் சறுக்கினேன். பாதியில் நான் பயத்தினால் உருண்டு ஓடிய காட்சியைப் படம் பிடித்துவிட்டார் பெய்னர்ட். குளிர்காலத்தில் பனியைக் குடைந்து அடியிலுள்ள மீன்களைப் பிடிப்பது குழந்தைகள் முதற்கொண்டு எல்லாருக்கும் வேடிக்கை (Ice fishing). இந்த விளையாட்டுகள்தான் 'Winter Sports' எனப் பிரசித்தி பெற்றுவிட்டன. குளிர்காலத்தில் இங்கு மக்கள் மிகவும் குஷியாக இருக்கிறார்கள். எனக்கோ 'எப்பொழுதடா இந்தக் குளிர் குறையும்' என்ற எண்ணமாகவே இருந்தது!

(தொடரும்)

Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami
at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

